# முகவுரை

**கவிச் செல்வம்**

கவிச் செல்வம் என்பது அரிய செல்வம். அதற்காக ஒரு இனத்தார் எதையும் ஈடாகக் கொடுத்து விடலாம் என்று தெள்ளத் தெளிந்த ஆசிரியர்கள் சொல்லுவார்கள்.

தமிழரது கவிச் செல்வம், இதர பாஷைகளைக் கவனிக்கும்போது, மிக வளமான செல்வம். ஆயுள் முழுதும் ஒருவர் திளைத்து அனுபவிக்கத்தக்க செல்வம்.

ஆனாலும், இழந்துபோன தமிழ்ச்செல்வத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால், எக்களிப்பைவிட ஏக்கந்தான் அதிகமாகிறது.

**அகஸ்தியர்**

அகஸ்தியரைப்பற்றி எத்தனையோ விஷயம் தெரிய வருகிறது, பல்லாயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன் பொதிகை மலைச் சாரலில் இருந்தவர் என்று நமக்குத் தெரியும். இசையில் மிக உயர்ந்த அனுபவங்களைக் கண்டவர் என்பது தெரிய வருகிறது. இதையெல்லாம்விட, தமிழ்க்கவிக்கு அவர் செய்த தொண்டு மிகப் பெரிதாயிருந்தது. கைக்கு வந்த அளவில்லாத தமிழ்க் கவிகளை அவர் திரட்டி வைத்திருந்தார். அது மாத்திரம் அல்ல; கேட்டவர் மனசையும் இறைவனது மனசையுமே உருக்கும்படியான எத்தனையோ கவிகளை அவராகவே பாடியும் வைத்திருந்தார். தமிழ் மக்களால் என்றுமே மறக்கமுடியாதபடி இருந்தன அந்தக் கவிகள்.

**என்றும்உள தென்தமிழ்**
**இயம்பிஇசை கொண்டான்**

என்று எப்படிப் பாராட்டியிருக்கிறார், கம்பர்!

ஆனாலும், அந்த அகஸ்தியர் திரட்டிவைத்த நூலி லிருந்தோ பாடிவைத்த நூலிலிருந்தோ, ஒருவரிகூட நமக் குக் கிடைக்கவில்லை. அகஸ்தியர் போகட்டும்; இன்னொரு விஷயம்.

* * *

**முத்தொள்ளாயிர ஆசிரியர்**

ஏதோ இரண்டாயிர வருஷங்களுக்கு முன் ஒரு கவிஞர் இருந்தார். அவர் பாடிய கவிகள் அபார வேகங் கொண்டன வாயும் கேட்பவர் உள்ளத்தைக் கவர் வனவாயும் இருந்தன.

கவிஞர், கொச்சி என்று இப்போது வழங்குகிற வஞ்சி யில் சில வருஷங்கள் இருந்தார். அப்படி யிருக்கும்போது ஒருநாள் அவருக்குக் கவியொன்று தோன்றியது. மன்ன னும் சகாக்களுமாகக் குழுமி இருக்கும்போது பாடலைப் பாடினார். கவியைக் கேட்டார்களோ இல்லையோ, எல்லா ரும் அதிசயித்துப் போனார்கள். போனபோன இடமெல் லாம் பாடலைப் பாடிக் கொண்டிருந்தார்கள். குளிக்கும் போதும், சாப்பிடும்போதும், பாடிக்கொண்டே இருந்தார் கள்; நண்பர்களைக் கண்டால் க்ஷேமம் விசாரிப்பதற்குப் பதி லாகப் பாடலைக் கேட்டீர்களா என்று பாடினார்கள். கவி ஞரை இப்படியும் அப்படியுமாகப் புகழ்ந்தார்கள்.

இத்தனை உத்ஸாகமும் கும்மாளியும் கவிஞருக்குத் தெரிய வந்தது. கண்கூடாகவும் பார்த்துக் கொண்டார். அவருக்குண்டான ஆனந்த பரவசத்தைச் சொல்லவா வேணும்! இதயமானது நெகிழ்ந்து, கரை இல்லாத ஆனந்த சமுத்திரமாய்விட்டது. ஆனந்த சமுத்திரம் சும்மாவா இருக் கும்? எப்படி எப்படி எல்லாமோ அலைகள், சுழல்கள், கொந்தளிப்புகள்! பாற்கடலிலிருந்து அமிர்தம் என்றும், சந்திரன் என்றும், லக்ஷ்மிதேவி என்றும் கிளம்பி வந்த மாதிரி, பாடல்கள் வந்தன.

ஒவ்வொரு நாளும் ஒரு பாடலாவது வரும். சூரியோதயமானதும், சரி, இன்றைக்கு ஒரு பாடல் வரும் என்று அரசனும் அரசனைச் சேர்ந்தவர்களும் எதிர்பார்ப்பார்கள். எதிர் பார்த்தபடியே பாடல் ஒன்று நிச்சயமாய் வரும். பாடலைக் கேட்ட பிறகு தான் அன்றைக்கு அவர்களுக்குச் சூரியன் உதித்ததாகத் தோன்றும். அன்றைய வாழ்க்கைக்கு அவ்வளவு தெளிவையும் இன்பத்தையும் ஊட்டியது, அந்த ஒரு பாடல்.

இந்த விதமாக வருஷம் ஒன்று இரண்டு மூன்று என்று கழிந்தது. பாடல்களைக் கணக்கிட்டுப் பார்த்ததில் தொள்ளாயிரம் என்று கண்டார்கள். வாய் நிறைந்த எண்ணாய் இருந்தது. 'சேரத் தொள்ளாயிரம்' என்று பெயர் கொடுத்து நூலைப் போற்றி வந்தார்கள்.

சேர மன்னன் பல பரிசுகளைக் கவிஞருக்கு அளித்தான். கவிஞரும், மன்னனிடம் விடை பெற்றுக்கொண்டு வஞ்சியிலிருந்து உறையூருக்குப் போனார். உறையூரில்த் தான் சோழ மன்னன் அப்போது வசித்து வந்தது. சோழனைப் பற்றித் தினம் தினம் கவியொன்று பாட, அதுவும் ஒரு தொள்ளாயிரம் ஆயிற்று.

கடைசியாக மதுரைக்குச் சென்றார். பாண்டியனுடைய பாராட்டுதலை யெல்லாம் பெற்றார். அற்புதமான கவிகளைப் பாண்டியன் மீதும் பாடினார். அவைகளும் தொள்ளாயிரமாயின.

ஆகவே, சேரன் சோழன் பாண்டியன் இவர்கள் மீது பாடிய தொள்ளாயிரம் தொள்ளாயிரமான மூன்று தொள்ளாயிரங்களும் சேர்ந்து ஒரு நூலாகி, **முத்தொள்ளாயிரம்** என்ற பெயரோடு வழங்கி வந்தது.

* * * *

**காலம்**

கவிஞரைப் பற்றிய பெயர் தெரியாது. ஊர் தெரியாது. காலமும் தெரியாது. ஆனாலும், பாடல்களைப் பார்க்கும்போது, ஏதோ இரண்டாயிர வருஷங்களுக்கு முன்னுள்ளன என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

வெண்பாவில் அமைந்துள்ள எதுகைகளும் மோனைகளும் பூர்வமான வைப்பைக் காட்டுகின்றன.

கவிஞருக்கு, மக்கள் இதயப் பண்பு இன்னதென்று தெரிந்திருக்கிறது; தமிழ்ப் பண்பு இன்னதென்று தெரிந்திருக்கிறது; எல்லாவற்றையும்விட, கவிப் பண்பு இன்னதென்று தெரிந்திருக்கிறது.

உள்ளத்தில்க் கண்ட ஒவ்வொரு உண்மையும், எப்பேர்ப்பட்ட உண்மையானாலும் சரி, அற்புதமான கவியாக உருவெடுத்து ஒளி வீசுகிறது. ஒவ்வொரு கவியும் பலவர்ணப் படலங்களை வெளியிடும் மணியாக இருக்கிறது. இந்த விதமாக இரண்டாயிரத்து எழுநூறு (2700) பாடல்களை உதவிப் போனார் கவிஞர்.

ஏதோ சிலர் அவைகளைப் பாராட்டியுமிருக்கிறார்கள். சமீப காலம் வரை, அதாவது நானூறு ஐந்நூறு வருஷங்களுக்கு முன் வரையில், முத்தொள்ளாயிரத்தைச் சிலர் போற்றி வந்திருக்கிறார்கள். அவர்கள் கையில் முத்தொள்ளாயிர ஏடு இருந்தது என்பது தெரிய வருகிறது. பிறகு ஏட்டைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை.

கடைசியாக, **புறத்திரட்டு** என்னும் நூலை யாரோ ஒருவர் தொகுக்க நேர்ந்தது. விஷயங்களை நாலடியார் திருக்குறள் முதலிய நூல்களில் பாகுபாடு செய்த மாதிரி, கடவுள்

வாழ்த்து, அவையடக்கம், நீத்தார்பெருமை, பொறையுடைமை, அரண், நகர், கைக்கிளை (காமத்துப் பால்) என்று வகுத்துக்கொண்டு, அந்த அந்த அதிகாரங்களுக்கு ஒத்த செய்யுள்களை, கண்ட கண்ட நூல்களில் இருந்தெல்லாம் எடுத்து வைத்தார். ஏதோ நம்முடைய புண்ணிய வசத்தால், முத்தொள்ளாயிர ஏடும் அவர் கையில் இருக்க நேர்ந்தது. அந்த ஏட்டிலிருந்தும் சில பாடல்களைப் புறத்திரட்டில் ஆங்காங்கு பெய்து வைத்தார். நமக்குக் கிடைத்துள்ள முத்தொள்ளாயிரப் பாடல்கள் எல்லாம் புறத்திரட்டில் பெய்துள்ளவைதான்.

**புறத்திரட்டு**

அப்படிக் கிடைத்துள்ளவை எந்த விதத்திலும் நூற்றெட்டுக்குமேல் இல்லை. ஆகவே, 2700—108 = 2592 பாடல்கள் ஒழிந்தே போய்விட்டன. அத்தனை அற்புதமான மணிகளை இழந்து நிற்கிறது தமிழுலகம். இரண்டாயிரத்து எழுநூறு பாடல்களும் கிடைத்திருந்தால், ஆயுள் நாள் முழுதும் அவைகளைப் பாடிப்பாடி ஆனந்தத்தில் திளைத்துக் கொண்டிருக்கலாம் நாம். நம்மோடு மட்டுமல்ல; இன்னும் ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு நம்முடைய சந்ததியாரும் அனுபவித்துக் கொண்டிருக்கலாம். இந்த அனுபவத்திலிருந்து எத்தனையோ அரிய நூல்களை எழுதித் தமிழையும் வளம்படுத்தலாகும்.

**கிடைத்த பாடல்கள்**

இந்த விதமாக நம்முடைய நஷ்டத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால், நம்மைவிடத் துர்ப்பாக்கியர்கள் வேறு யாருமில்லை என்றே சொல்லலாம்.

## 2

**த**மிழர்கள் நாடகத்தில் முங்கி முழுகினவர்களாகத் தெரிகிறது. சாமான்யமாக இப்போது வழங்கி வருகிற

கோவைப் பிரபந்தங்களைப் பார்த்தால், எல்லாச் செய்யுள்களும் நாடகத் துறைகளாகவே இருக்கும். கலம்பகத்தைப் பார்த்தாலும், அனேகமாக நாடகச் செய்யுள்கள் தான். அவ்வளவு ஆசை, நாடகத்தில் நம்மவருக்கு.

**நாடகம்**

ஒரு நீதியைச் சொல்லவந்த இடத்திலும் ஒரு நாடக நிலையில் நின்று பேசுவார்கள் நம்மவர்கள்.

தோழியைப் பார்த்து நாயகி சொல்கிறதாக ஒரு பாடல்: "நாயகன் ஏதோ தடுக்க முடியாத காரியத்தில் கட்டுப்பட்டிருக்கிறான். சரி, அப்படி யானால் வர இயலாது என்று தானே சொல்லவேணும் அவன்? அதை விட்டு விட்டு, இங்கே நம்மிடம் ஓடிவந்து 'மாலையில் வருகிறேன்' என்று வேண்டுமென்றே பொய் சொன்னான் அல்லவா?" இந்த ஆற்றாமையை நாலடியார்ச் செய்யுள் ஒன்று விளக்குகிறதைப் பார்ப்போம்.

**இசையா ஒருபொருள்**
**இல்லென்றல் யார்க்கும்**
**வசையன்று, வைய த்(து)**
**இயற்கை; நசையழுங்கச்**
**சென்றோடிப் பொய்த்தல்,—**
**நிறைதொடீஇ! செய்ந்நன்றி**
**கொன்றாரில் குற்றம்**
**உடைத்து.**

இதுபோலக் காதலனது நாட்டு வளத்தையும் நகர வளத்தையும் சேனை வளத்தையும் நாயகி வாயில் வைத்துச் சொல்லுவதும், காதல்த் துறையைச் சேர்ந்தது.

---

நசையழுங்க - ஆசையினால் மனஞ் சோரும்படி, நிரை தொடீ - தோள் வளையங்களை ஒழுங்காய் அணிந்த தோழியே. செய்ந்நன்றி கொன்றாரில் குற்றம் உடைத்து - ஒருவர் செய்த குற்றத்துக்கு மாறாகத் தீமை விளைத்தல் போன்ற பாதகமல்லவா இது!

முத்தொள்ளாயிரத்தில் வந்துள்ள வர்ணனைகள், தனித்த முறையில் பார்த்தாலே மிக அழகாய், சுவை ததும்புவனவாய் இருக்கின்றன. மேலே சொன்னபடி காதல்த் துறையில் வைத்துப் பார்க்கும்போது, வர்ணனைகளுக்கு எத்தனையோ ஒளிப்படலங்களும் தெளிவும் ஏற்படுகின்றன. இந்த முறையிலேயே வர்ணனைப் பகுதிகளையும் வீரப் பகுதிகளையும் பார்த்து அனுபவிக்கவேண்டும்.

நேரான காதல்த் துறைக்கு வந்தோமானால், பாத்திரங்கள் பேசுவது, தனிப்பட்ட நாடக முறையாக இருக்கிறது.

**பாத்திரங்கள்**

முக்கியமாக நான்கு பாத்திரங்கள் வந்து தொழில் செய்யப் பார்க்கிறோம். முதலாவது, **நாயகியாகிய** பெண்; அவளது ஆர்வத்தையும் சோர்வையும் எக்களிப்பையும் இன்னதென்று அளந்து சொல்ல முடியாது.

இரண்டாவதான பாத்திரம், **பெற்ற தாய்.** அவளுக்கு ஒரே பயம். "ஐயோ, காதல்வெறி கொண்டுவிட்டாளே நம்முடைய மகள். ஊரார் என்ன சொல்லப் போகிறார்களோ!" என்று மகளைக் கண்டிக்கிற காரியம் ஒரு நாடகப் பாங்கு.

மூன்றாவதாக, நாயகியை வளர்த்தெடுத்த **செவிலித் தாயர்கள்.** அவர்களுக்குத் தங்கள் பெண்களிடத்தில் அமோகமான ஆசை. காதல் விஷயமாய் உத்ஸாகமாகப் பேசுவார்கள். உளவு செய்யவும் தயாராக இருப்பார்கள். ஊரார் அப்படிச் சொல்லுவார்கள், இப்படிச் சொல்லுவார்கள் என்பது பற்றிக் கவலையில்லை அவர்களுக்கு.

நான்காவதாகத் **தோழிகள்.** காதல் விஷயமாக எந்த விதமான பேச்சையும் அவர்களிடம் நாயகி பேசுவாள். அவர்களும் உத்ஸாகமாகப் பேசுவார்கள். தூது போகவும் தயாராய் இருப்பார்கள்.

இந்த விதமாக நாடக பாத்திரங்களை வகுத்து வைத்துக் கொண்டால் தான், காதல்க் கவிகளின் உண்மையான வேகமும் பாவமும் நமக்குத் தெரிய வரும்.

## 3

**மு**த்தொள்ளாயிர ஆசிரியருக்குப் பூமி சாஸ்திரம் ரொம்பத் தெரிந்தது என்று சொல்ல முடியாது. தமிழ் நாட்டைத் தான் சுற்றிச் சுற்றி வந்திருக்க வேண்டும் அவர். கொச்சி (வஞ்சி) அவருக்குத் தெரிந்த இடம். அதை ஒட்டியுள்ள முசிறி என்ற துறைமுகம் அவருக்குத் தெரியும்.

பூமி

உறையூரையும், காவிரியையும் ரொம்ப அனுபவித்தவர். காஞ்சிபுரமும் தஞ்சாவூரும் அவருக்குத் தெரிந்த நகரங்களே.

மாந்தை என்கிற ஊரையும் சொல்லுகிறுர். அது எங்கேயுள்ளது என்று தெரியவில்லை.

பாண்டி நாட்டைப்பற்றி அவருக்கு ரொம்ப அனுபவம். மதுரையில் வசித்திருக்கிறுர். திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள கொற்கை என்ற துறைமுகப் பட்டினத்தையும், அங்குள்ள கடற்கரையையும் முத்து வளத்தையும் ரொம்ப அனுபவித்திருக்கிறுர். அது மாத்திரமல்ல, தாம்பிரபரணி உற்பத்தியாகிற பொதிகைமலைச் சாரலையும் அங்குள்ள சந்தன மரத்தின் வளத்தையும் வனபோஜனம்செய்பவர்களின் உல்லாச வாழ்க்கையையும் ரொம்ப ரொம்ப அனுபவித்திருக்கிறுர். ஈழத்துக்கும் அவர்போய் இருக்கிறுர் என்றுசொல்ல வேண்டும்.

ஏதோ நூறு பாடல்களை வைத்துக் கவிஞருடைய பூமி சாஸ்திரத்தை அளக்கிறேம். தொலைந்துபோன 2600 பாடல்

களையும் பார்க்கக் கிடைத்தால், அவர் கண்டு அனுபவித்த உலகு ஒரு வேளை விசாலமாகவே இருக்கக் காணலாம்.

அவர் பார்த்த ஜட உலகந்தான் சிறிதாகத் தோன்று கிறது. அவரது இதய உலகத்தைப் பார்த்தோமானல், எவ்வளவாகவோ விரிந்துவிடுகிறது அது. பேரண்டத்தையே தனக்குள் சுருட்டிக் கொண்டிருக்கிறது கவிஞரது இதயம்!

## 4

**கவி உருவம்**

எந்தக் கலையிலும் உணர்ச்சி பாவந்தான் முக்கியம்: அது ஒன்றுதான் வேண்டும் என்ருலும் குற்றமில்லை. முத் தொள்ளாயிரச் செய்யுள் ஒவ்வொன்றிலும் வெகு அற்புதமான உணர்ச்சி பாவங்களைப் பார்க்கலாம். உணர்ச்சியானது அரிய தமிழ்ப் பண்போடும் தாளப் பண்போடும் உருவெடுக்கப் பார்க்க லாம். எவ்வளவுக் கெவ்வளவு உணர்ச்சி பாவத்தோடு நம் முடைய இதயம் ஒட்டுகிறதோ அவ்வளவுக் கவ்வளவு கவி உருவத்திலுள்ள அழகும் சுவையும் அற்புதமும் நமக்கு விளங்கும்.

## 5

**வெண்பா செய்யும் அபிநயம்**

நமக்குக் கிடைத்த பாடல்கள் எல்லாம் வெண் பாக்கள் தான். வேறு பாவினங் களைக் கவிஞர் கையாண்டிருக்க லாம். ஆனல் அவைகள் நம் கைக்கு வரவில்லை.

ஒவ்வொரு வெண்பாவும் ஒரு தனியான தாளத்தோடு நடனமாடுகிறது. அதனுடைய உறுப்புக்கள் அற்புதமான பாவங்களைப் பிடித்துக் காட்டுகின்றன.

*நீராட்டி நீங்(கு) என்றால்*
*நீங்குமோ*

இது சொல்லபிநயந் தான்.

கோபவெறி கொண்ட போர் யானையின் கைவரிசையைப் பாருங்கள்: (வெண்பாவின் கடைசி அடி :)

*திங்கள்மேல் நீட்டுந்தன்*
*கை!*

பவனி வரும்போது சேரனைத் தன் பெண் பார்த்து விட்டால் மோசம்; காதல் நோய்க்கு உள்ளாய் விடுவாள். ஊரார் வம்புக்கும் உள்ளாகி விடுவாள் என்று மகளை வீட்டுக்குள் போகச் சொல்லி வாசல்க் கதவையும்அடைத்து விடுகிறாள் தாய்.

ஆனால், மகள் தோழியிடம் என்ன சொல்லுகிறாள் பாருங்கள் :

*ஆயிழையாய்! என்னை*
*அவன்மேல் எடுத்துரைப்பார்*
*வாயும் அடைக்குமோ*
*தான்?*

'கதவு ஒன்றைத் தானே அடைக்கலாம்? வேறு என்ன செய்ய முடியும் தாய்' என்ற பாவத்தை இந்த இரண்டு அடிகளும் எப்படி அபிநயம் பிடித்துக் காட்டுகின்றன பாருங்கள்!

பாட்டுக்கு உருவம் என்றால், இந்த விதமாக அதன் உறுப்புகள், பாவத்தை எடுத்துக் காட்டவேண்டும். இவ்வளவுக்கும் தமிழ் பாஷை அதிசயமாய் உதவுகிறது.

## 6

**விஷயமா கவி**

**க**வி என்று சொல்லும்போது ஏதோ அதிலுள்ள **விஷயம்** ஒன்றைச் சொல்ல வந்தது என்று சாமான்ய ஜனங்கள் எண்ணலாம். வேறு சிலர், அதிலுள்ள **உணர்ச்சியைத்** தெரிந்து கொண்டால் போதும் என்று எண்ணலாம். ஆனால், கவியில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது, உணர்ச்சியானது பாவ உருவத்தில் வந்து வெளிப்படுகிறதா என்பது தான். இந்த உருவத்தின் மூலமாகவே, கவிஞருடைய உள்ளத்தில் எழும் உணர்ச்சியைப் பார்க்கிறோம். அதோடு, அந்த உணர்ச்சியை வார்த்தை தாளங்களிலுள்ள நேரான, இயல்பான சம்பந்தத்தில் பார்க்கிறோம். அப்படிப் பார்க்கும்போது தான் கவிஞரது இதயத்திலுள்ள அற்புதமான சிருஷ்டி தத்துவம் நம்முடைய இதயத்துக்கும் வந்து சேருகிறது. கவிஞருடைய சிருஷ்டி தத்துவத்தால், கவிஞர் இதயத்தில் பெருகிய ஆனந்தம் அவ்வளவிலும், நாமும் பங்கு கொள்கிறோம். முத்தொள்ளாயிர ஆசிரியர் இரண்டாயிர வருஷத்துக்கு முன் அடைந்த ஆனந்தத்தை இன்று நம்முடைய இதயம் அடைகிறது. நமது பாக்கியம்தான் என்ன !

பூரணமாயில்லாத பாடல், சிதைந்த பாடல், பொருள் தெரியாத பாடல், போலிப் பாடல் என்றவற்றைத் தொகுத்துத் தனியாக அனுபந்தத்தில் கொடுத்திருக்கிறோம். அவை போக, முத்தொள்ளாயிரம் என்னும் பெயரோடு நமக்குக் கிடைத்துள்ள பாடல்கள் தொண்ணூற்றென்பது. இந்தத் தொண்ணூற்றென்பது பாடல்களையும் ஆயுள் நாள் முழுவதும் நாம் பாடிப்பாடி அனுபவித்துக்கொண்டிருக்கலாம். பாடப்பாட, வாய் பால்மயமாகும் !

ஒரு உண்மையான அனுபவத்தைத் கண்டு, பாவ உருவத்தோடு வெளியிடுவதுதானே கவி? நாயகன், வருவான் வருவான் என்று நாயகி எதிர்பார்த்துக்கொண்டிருக்கிருள் என்ருல், அது உண்மையான உணர்ச்சி. யாரும் அறிந்துகொள்ளலாம்.

மக்களது நேர் அனுபவமான உணர்ச்சிகளை அப்படி வெளியிட வந்த சிருஷ்டிகள்தான் முத்தொள்ளாயிரப் பாடல்கள். (அகப்பொருள்த் துறைகளேயும் திணைகளையும் விளக்க வந்த உதாரணப் பாடல்கள் அல்ல அவை.)

நாமும் அந்த உணர்ச்சிகளை நேர்வழியில்ப் பார்த்து அனுபவிக்க முயலவேண்டும். அப்படி அனுபவிப்பதற்காகவே, ஒவ்வொரு பாடலுக்கு முன்னும் முகவுரையாக விளக்கங் கொடுத்திருக்கிறது.

சாமான்யமாக யாரும் அந்த விளக்கத்தை வாசித்து, ஒரு தடவைக்கு இருதடவை சாவகாசமாக வாசித்து, சந்தர்ப்பத்தையும் பாத்திரத்தையும் உணர்ச்சியையும் அறிந்து கொள்ளலாம். அவ்வளவு தான் வேண்டியது. பாட்டுக்குள் அப்படியே புகுந்து விடலாம். இரண்டு இரண்டு சீராகச் சவுக்கமாகப் பாட முயலவேண்டும். விஷயம் நிற்கிற இடங்களில் நிறுத்திப் புள்ளிகளோடு நின்று மறுபடியும் பாடலைத் துவங்கவேண்டும். இந்த விதமாகப் பாடினுல், பொருள் எளிதில் விளங்கிவிடும். பாவமே தெரிந்துவிடும். கவி உருவம் வந்து நம் மனசைக் கவர்ந்துவிடும். ஆயுள் முழுதும் நம் இதயத்தில் கவி ஊடாடிக் கொண்டிருக்கும். இசையாக ஒலித்துக் கொண்டும் இருக்கும் என்ருல் மிகை அல்ல. தனித்த இடத்தில் ஒரு பாட்டையே பாடிப்பாடி நேரத்தைக் கழித்துக் கொண்டிருக்கலாம். நாலு நண்பர்கள் சேர்ந்த இடத்திலும் பாடலை வளைத்து வளைத்துப் பாடி ஆனந்தம் ஊட்டிக் கொண்டிருக்கலாம். ஒரு பாடலே அத்தகைய செல்வம் நமக்கு.

சாமான்யமாகத் தெரியாத விஷயமோ, வார்த்தையோ செய்யுளில் இருந்தால், பக்கத்தின் அடியில் கொடுத்துள்ள விளக்கத்தைப் பார்த்துக் கொள்ளலாம். இந்த விளக்கம் அவ்வளவு அவசியமானதல்ல. ஆனால், குறிப்பு என்று கொடுத்திருக்கிற பாகம் அவசியமாய்க் கவனிக்க வேண்டிய பாகம். கவியின் உள்ளக்கிடையான உணர்ச்சியையும் உருவ **பா**வத்தையும் எடுத்துக்காட்ட முயல்வது அது. உணர்ச்சி **பா**வத்தோடு பாடலைப் பாடிப் பார்த்தால், குறிப்பில்க் கண்ட விஷயம் விளங்கும். இதற்குப் பாடலைப் பத்துத் தடவையானாலும் பாடிப் பார்க்கலாம்.

எப்படியும், பாடலை வேகமாக வாசித்துவிடக் கூடாது. ஒருதடவை இரண்டு தடவையாக வாசித்து விட்டுவிடவும் கூடாது. **பாடத்தான்** வேண்டும். மெள்ள மெள்ள நிறுத்தி நிறுத்திப் பாடவேண்டுமே யொழிய ஏதோ ரயில்த் தவறி விடுமே என்ற அவசரத்தில் பாடக்கூடாது.

சாவகாசமாகப் படிக்கவேண்டும் என்பதற்காகவே ஐந்து ஐந்தாகப் பாடல்களைப் பிரித்திருக்கிறது. ஒரு நாளைக்கு ஐந்து பாடல் படித்து அனுபவித்து விட்டோமானால், அன்று நமக்குப் பெரிய செல்வம் கிடைத்துவிட்டதாகவே எண்ணத் தோன்றும்.

இரண்டாயிரம் வருஷங்களுக்குமுன் இருந்த கவிஞர், கவியமுதைத் தங்கத் தட்டில் வைத்து நீட்டுகிறார் நமக்கு.

டி. கே. சி.



# பொருளடக்கம்

# 1

அரசர்கள் முக்கியமான தினங்களில், பவனி போவது பழைய காலத்திய வழக்கம். இந்தக் காலத்திலும் அது உண்டு.

சேரன் பவனி போவதற்காக அரண்மனை வாசலிலிருந்து புறப்பட்டு விட்டான். தேரின்மேல் அவன் வீற்றிருக்கிறான். மேளதாளங்களோடு நின்று நின்று வருகிறது பவனி.

ஒரு வீட்டில் தாயும் மகளுமாக வசிக்கிறார்கள். பவனி வரும் அரசனைப் பார்த்தால் மகளுக்குக் காதல் நோய் உண்டாய்விடும், ஆகாரம் ஏற்காது, தூக்கம் வராது என்பதெல்லாம் தாயானவள் அறிந்து, வாசல்க் கதவை அடைத்து விட்டு உள்க்கட்டுக்குப் போய்விடுகிறாள். அவள் போனது தான் தாமதம், உடனே அடைத்த கதவைத் திறந்து, பவனி வருவதை எதிர் பார்க்கிறாள் மகள். சிறிது நேரங்கழித்துத் தாய் திரும்பிவந்து கதவை அடைக்கிறாள். உள்க்கட்டுக்குப் போகிறாள். மறுபடியும் மகள் கதவைத் திறந்துகொண்டே நிற்கிறாள். இந்த விதமாகக் கதவு அடைபட்டும், திறக்கப் பட்டும் ஆடி நிற்கிறது.

காதலுக்கு உள்ளான இளம்பெண் ஒருத்தியின் ஆத்திரம் எப்படிப்பட்டதென்று தெரிகிறதல்லவா!

தாயர் அடைப்ப
    மகளிர் திறந்திட,
தேயத் திரிந்த
    குடுமியவே ! - ஆய்மலர்
வண்டுலாஅம் கண்ணி
    வயமான்தேர்க் கோதையை
கண்டுலாஅம் வீதிக்
    கதவு. (1)

## 2

ஒரு நாட்டின் வளத்தை அனுபவிப்பதற்கு ஒரு தனியான இதயப் பாங்கு வேண்டுமென்றால் மிகை அல்ல. நமக்கு வேண்டாதவர் வீடு ,மாளிகையாய் இருந்தாலும், கண்ணுக்கு அழகாய் இராது. ஆனால், நமக்கு வேண்டியவர்கள் வசிக்கும் குடிசையோ வெகு அழகாய் இருக்கும். இந்த உண்மை

---

குடுமி - கதவு ஆடுவதற்காக அடியிலே வைத்திருக்கும் இரும்புக் குமிழ். தேயத் திரிந்த குடுமியவே - வீதிக்கதவின் குடுமிகள் திரிந்து திரிந்து தேய்கின்றன. வண்டுலாம் கண்ணி - வண்டு மொய்த்துக் கொண்டிருக்கும் கண்ணி ; கண்ணி - தலையில் சூடும் மாலை. வயமான் தேர் - பெரிய குதிரைகள் பூட்டிய தேரில் பவனி வருகிற. கோதை - சேரமன்னது பல பெயர்களில் ஒன்று.

குறிப்பு :—இப்படி நேருவது ஒரு வீட்டில் அல்ல, பல வீட்டிலுமே. இது அதிசயிக்கத் தக்கதே என்பதை 'தேயத் திரிந்த குடுமியவே' என்று இரண்டாம் அடியில் வைத்துக் காட்டியிருக்கிறது. 'கண்டுலாஅம் வீதிக்கதவு' என்று கடைசி அடியில் வைத்திருக்கிற கட்டுக்கோப்பு வெகு அழகு. இதில் அதிசய பாவம் அப்படியே தெரிகிறது. கண்டுலாஅம் என்று நீட்டிப் பாடும்படி, அளபெடை (தாளம் நீட்டுவது) சோக பாவத்தையும் காட்டுகிறது. பெண்ணினது நிலைமை அவ்வளவு பரிதாபமான நிலைமை !

பற்றித்தான் பண்டைய கவிஞர்கள் நாட்டுவளத்தைக் காதல்க்கண் மூலமாகப் பார்க்கச் செய்தார்கள்.

தோழியைப் பார்த்து நாயகியும், பாங்கனைப் பார்த்து நாயகனும், அப்படிப் பேசுவது கவி மரபு. இயல்புந்தான். இனி.

*  *  *  *

கன்னியாகுமரியிலிருந்து ஒருநாள் திருவனந்தபுரத்துக்குப் போய்வர நேர்ந்தது. வழியில், அனேக குட்டங்களும் தரிசுபோட்ட வயல்களும் கிடந்தன. அவைகளில், தெளிந்த தண்ணீர் நிறைந்திருந்தது. தண்ணீரில்ச் செவ்வாம்பல்ப் பூக்கள் செக்கச் செவேர் என்று பூத்திருந்தன. இடையிடையே பறவைகளும் நீந்திக் கொண்டிருந்தன. இந்தக் காட்சியை நண்பர் ஒருவருக்குச் சுட்டிக் காட்டினேன். கன்னியாகுமரிக்குத் திரும்பிவந்ததும், ‘ஆம்பல்ப் புஷ்பங்களை நாம் அனுபவித்தோம். இரண்டாயிர வருஷத்துக்கு முன்னுள்ள கவிஞர் எப்படி அனுபவித்திருக்கிருர் பாருங்கள்’ என்றேன்.

சேறுபட்ட (அள்ளல்) நீர் நிறைந்த வயல்களில் அரக்காம்பல்கள் பூத்துக் கிடந்தன. அவைகளைப் பார்த்துப் பறவைகள் என்ன எண்ணின?

**அள்ளல்ப் பழனத்(து)**
**அரக்காம்பல் வாய்அவிழ,**
**வெள்ளம்தீப் பட்ட(து)**
**எனவெரீஇ,**

பறவைகள் தங்கள் சிறகால் பக்கத்தில் நீந்தி வந்த குஞ்சுகளை அணைத்து ஒடுக்கிக் கொண்டனவாம்; குஞ்சுகளின் சிறகுகளில் எங்கே தீப்பற்றிக்கொள்ளுமோ என்னும் அச்சத்தால்தான்.

அள்ளல்ப் பழனத்(து)
அரக்காம்பல் வாய் அவிழ,
வெள்ளம்தீப் பட்ட(து)
எனவெரீஇப், புள்ளினம்தம்
கைச்சிறகால்ப் பார்ப்பொடுக்கும்
கவ்வை உடைத்தரோ!
நச்சிலேவேல்க் கைக்கோதை
நாடு. (2)

## 3

ஒரு யுத்தகளம். யானைப் படைகளோடு, பலவகை அரசர்கள் வந்து சேரனுடைய சேனைக்கு எதிராக நிற்கிறார்கள். யுத்தம் ஆரம்பிக்கவில்லை. அப்போது சேரனுடைய தளகர்த்தன் வருகிறான். வந்து பகையரசர்களுக்குப் புத்தி சொல்லுகிறான்.

"மன்னர்களே! எத்தனை யானைகள் கொண்டு வந்தாலும் பயனில்லை. நீங்கள் தோல்வியுற்று அழியப் போகி

---

அள்ளல்ப் பழனம் - சேறுபட்ட வயல். வாய் அவிழ - மெள்ள மெள்ள விரிய. வெள்ளம் - நீர். என வெரீஇ - என்று பயந்து. புள்ளினம் - நீர் வாழும் பறவை இனம். கைச் சிறகால் - கைபோன்ற இறக்கைகளால். பார்ப்பு - குஞ்சுகளை. கவ்வை - பயம். உடைத்தரோ - அடடா நாட்டில் இந்த பயம் உண்டே! நச்சிலே வேல் - நஞ்சு போல் அச்சத்தை விளைவிக்கும் இலை வடிவத்து வேலை. கைக் கோதை - கையில் ஏந்திய சேரமன்னன்.

குறிப்பு :—நாடு கவ்வை உடைத்தரோ: நாட்டில் பயப்படவேண்டிய காரியம் ஒன்றும் இல்லைதான். ஆனாலும் பயப்பட்டுத் தவிக்கின்றன இந்தப் பறவைகள். சேரமன்னனது ஆட்சி முற்றிலும் அமைதியைக் கொடுத்துவிடும் என்று எப்படிச் சொல்லக்கூடும்? இந்த விதமாக எக்களிப்போடும் நகைச்சுவையோடும் நாயகி தோழியிடம் பேசுகிறாள்.

நீர்கள். பிழைக்க வழி சொல்லுகிறேன், கேளுங்கள். லகுவான வழி; விதிக்கப்பட்ட கப்பத்தை (திறையைக்) கட்டிவிடுங்கள். உங்களுடைய கோட்டை மதில்களில், நன்றாக வளைத்தமாதிரி, வில் ஒன்றைச் சித்திரக்காரரைக்கொண்டு எழுதிவிடுங்கள். ஏனென்றால், நீங்கள் எங்கள் வில்க் கொடிக்கு உள்ளாகி யிருக்கிறீர்கள் என்பது தெரிந்து விடும். உங்களுக்கு ஆபத்து ஏற்படாது.''

**பல்யானை மன்னீர் !**
**படுதிறை தந்(து)உய்ம்மின் ;**
**மல்லல் நெடுமதில்**
**வாங்குவில்ப் பூட்டுமின் ;**
**வள்ளிதழ் வாடாத**
**வானோரும்,- வானவன்**
**வில்எழுதி வாழ்வார்**
**விசும்பு !** (3)

---

பல்யானை மன்னீர் - பல யானைப் படைகளை உடைய மன்னர்களோடு ! படு திறை - விதிக்கப்பட்ட கப்பத்தை. தந்து உய்ம்மின் - கொடுத்துவிட்டுப் பிழையுங்கள். மல்லல் நெடுமதில் - பலமாகக் கட்டி, உயர்ந்தும் நீண்டுமுள்ள கோட்டைச் சுவர்களில். வாங்குவில்ப் பூட்டுமின் - வில்லை வளைத்துப் பூட்டியமாதிரி சித்திரம் எழுதுங்கள்; அதனால் பிரயோசனம் உண்டு வள்ளிதழ் வாடாத வானோரும்: தேவர்களுடைய மாலையிலுள்ள பூக்கள் வாடாது என்பது ஐதிகம். வள்இதழ் - அகன்ற இதழ். வானவன் வில் - சேரனுடைய வில் (கொடியிலுள்ள அடையாளம்). எழுதி வாழ்வார் விசும்பு: வானவில்லை வானத்தில் போடுவது, தேவர்கள் சேரனுக்கு அடங்கிச் சௌகரியமாக இருப்பதற்காகவே என்பது பொருள். விசும்பு - வானம். ஆகாயத்தில் சுகமாய் வாழ்வதற்குத் தேவர்களே வில்லை எழுதிக் கொள்ளுகிறார்கள் ! அதுபோல, மன்னர்களே, நீங்களும் மதில்ச்சுவர்களில் வில்லை எழுதிக் கொள்ளுங்கள் என்று தளகர்த்தன் சொல்லுகிறான்.

## 4

குழந்தைகளிடத்தில் பாவனைசக்தி மிகுதியாக இருக்கக் காண்கிறோம். அவர்கள் மரப்பாச்சியை வைத்துக்கொண்டு ஏதோ அதனிடத்தில் உயிரும் உணர்ச்சியும் இருப்பதாக எண்ணிக்கொள்வார்கள். மரப்பாச்சியோடு, வெகுநேரமாக, இல்லாத பேச்செல்லாம் பேசிக்கொண்டும் இருப்பார்கள் குழந்தைகள். இந்தப் பாவனைசக்தி, பருவமடைந்த பெண்களிடத்திலும் இருத்தல் உண்மை. இந்தச் சக்தியோடு காதல் வெறியும் கலந்துவிட்டால், பேச்சு எவ்வளவு வேகம் கொள்ளும் என்று சொல்லவேண்டியதில்லை.

பெண் யானை ஒன்றின்மேல் ஏறி உலா வந்தான் பாண்டியன். ஒரு கன்னிகை அவனைப் பார்த்துக் காதல் கொண்டுவிடுகிறாள். யானை நடந்துவந்ததும், அரசன் அதன்மீது இருந்ததும் மனசைவிட்டு அகலவில்லை. அரசனுடைய உருவம் முழுதும் அப்படியே நிற்பது ஒரு காரியமல்ல. அவன் ஏறிவந்த யானையின் உறுப்புகள் ஒவ்வொன்றும் அப்படி அப்படியே உள்ளத்தில் நிற்கின்றன. அவைகளில் ஈடுபடுகிறாள்.

யானையினுடைய கால், அடடா, துடி (உடுக்கை) போலவே இருக்கிறது. செவியோ, தோலினால் செய்த கேடயம் போலவே இருக்கிறது. துதிக்கை எப்படியெல்லாமோ ஆடுகிறது. வாய் தொங்குகிற அழகோ தனி. யானையை இப்படியெல்லாம் அனுபவிக்கிறாள் பெண்.

நீராடப் போயிருந்த இடத்தில், குளிப்பாட்டுவதற்காக, யானை வந்திருந்தது. அரசனும் நீராட வந்திருந்தான். அப்போது யானையைப் பார்த்துச் சொல்லுகிறாள் :

துடியடி, தோல்ச்செவி,
தூங்குகை, நால்வாய்ப்
பிடியே! யான் நின்னை
இரப்பல் : - கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனொடு
சேரி புகுதலும், எம்
சாலேகம் சார
நட. (4)

## 5

சிறு பெண்கள், சிலவேளை, சொல்லை வைத்தே விளையாடுவார்கள்.

மூன்று பெண்கள் நடத்தும் ஒரு சிறு நாடகம். மூன்று பெண்களும் சுற்றி உட்காருகிறார்கள். நடுவில் ஒரு பச்சைக் குழந்தை.

முதல் பெண் : மலையிலிருப்பது மரம். இரண்டாவது பெண் : மரத்திலிருப்பது பூ. மூன்றாவது பெண் : பூவிலிருப்பது நீ என்று சொல்லி மத்தியிலிருந்த குழந்தையை எடுத்து மார்போடு அணைத்துக் கொள்ளுகிறாள்.

இதுபோல் வேறொரு நாடகம்.

முதல் பெண் : வானத்திற்கு ஒத்திருக்கிறது பூமி.

---

இரப்பல் - கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். கடி கமழ் தார் - வாசனை கமழும் மாலை சூடிய. சேலேகவண்ணனொடு - சந்தனம் பூசிய பாண்டியனோடு. சேரி புகுதலும் - ஊருக்குள் பிரவேசிக்கவும். அதாவது, நீராடிவிட்டு உன்மேல் ஏறி ஊருக்குள் மன்னன் புகும்போது. எம் சாலேகம் சார நட - எங்கள் வீட்டு ஜன்னலை ஒட்டி நடந்துவர வேண்டும். நான் அங்கே நின்று கொண்டிருப்பேன். விஷயம் தெரிகிறதா, பிடியே?

குறிப்பு :—அரசனைக் கண் குளிரப் பார்த்துவிட வேண்டுமென்ற ஆத்திரம் அப்படியிருக்கிறது பெண்ணுக்கு!

இரண்டாவது பெண்; வானத்து நக்ஷத்திரங்களுக்கு ஒத்திருக்கிறார்கள் வீர மன்னர்.

மூன்றாவது பெண் என்ன சொல்கிறாள் என்பதைப் பார்க்கலாம்.

**வானிற்கு வையகம்**
**ஒத்ததே; வானத்து**
**மீனிற்(கு) அனையார்**
**மறமன்னர் - வானத்து**
**மீன்சேர் மதியனையன், -**
**விண்ணுயர் கொல்லியர்**
**கோன்சேரன் கோதையென்**
**பான். (5)**

---

வானிற்கு வையகம் ஒத்ததே - இரவில் மேலே பார்க்கிற வானத்துக்குப் பூமியும் ஒத்துத்தான் இருக்கிறது. வானத்து மீனிற்கு அனையார் மறமன்னர் - வானத்தில் காணப்படும் சின்னஞ்சிறு நக்ஷத்திரங்களுக்குச் சமானமாக இருக்கிறார்கள் முடிதரித்த சிற்றரசர். வானத்து மீன் சேர் மதியனையன் - அந்த நக்ஷத்திரங்களுக்கு இடையே தோன்றும் பூர்ணசந்திரனை ஒத்திருக்கிறான். எவன்?—சேர மன்னன். விண்ணுயர் கொல்லியர் கோன் - வானத்தை அளாவும் கொல்லிமலையி லிருப்பவர்களுக்கு அரசன். கோதை - சேரனுக்குரிய பல பெயர்களில் கோதை என்பது ஒன்று.

குறிப்பு:—ஆங்கில ஆசிரியர் ஒருவர், கவிகள் அனேகமாய்க் குழந்தைகளின் செல்லப்பாட்டுகளிலிருந்தே விளைந்தன என்றும், கவிகளை அனுபவிப்பதற்கு அடிப்படையாக அந்தச் செல்லப்பாட்டுக்களைக் கற்கவேண்டுமென்றும், அனுபவிக்கவேண்டுமென்றும் சொல்லுகிறார். அப்படிச் சொல்லுவது ஆங்கிலக் கவிக்கு எப்படிப் பொருத்தமோ அப்படியேதான் எல்லாக் கவிகளுக்கும் பொருத்தம். தமிழிலும் அது உண்மைதான் என்பது இந்தக் கவியில் தெரியவரும்..

# 1

மலைப்பக்கத்து ஊர்களிலுள்ள மக்களுக்கு ஒரு அனுபவம் உண்டு. இரண்டு மூன்று மைலுக்கு அப்பால்த் தோன்றும் மலைச்சரிவு ஒன்றை வீட்டுத் திண்ணையிலிருந்து பகலெல்லாம் பார்த்தவண்ணமா யிருப்போம். நீல நிறமாகவும் கண்ணுக்குக் குளுமையாகவும் இருக்கும் மலைச்சரிவு.

சாயங்காலம் ஆகவும், பசுக்கள் மேய்ச்சல்ப் புலங்களை விட்டுத் திரும்பி ஊருக்குள் புகுந்துவரும். மயங்குகிற நேரம். அப்போது திடீரென்று ஒளிவரும். ஒளி ஏது என்று பார்த்தோமானால், திண்ணையிலிருந்து பகலெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தோமே, அந்த மலைச் சரிவிலிருந்தே ஒளி வரும். பெரிய நெருப்புப் படலம் அங்கே தோன்றும். நெருப்புப் படலத்தில் பல இடங்களில் சுவாலைவிட்டு எரிவதும் தோன்றும். ஊரார் எல்லாரும், நெருப்பைப் பற்றிப் பேச ஆரம்பிப்பார்கள். இதோடு, இன்னொரு விஷயத்தையும் ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும்.

*   *   *   *

தற்காலம், இரவில் வெளியே போக நேர்ந்தால், காற்றில் அணைந்து போகாதபடி கொண்டுபோவதற்கு விளக்கு வசதிகள் இருக்கின்றன. ‘ஹரிக்கேன் லாம்ப்’ இருக்கிறது. மின்சார ‘டார்ச்’ வேறு இருக்கிறது. பூர்வ காலத்தில் கை விளக்குத்தான். அதைக் காற்றடிக்கிற காலத்திலே வெளியே கொண்டுபோக வேண்டுமானால் குடத்துக்குள் வைத்து ஜாலக்காய்க் கொண்டு போவார்கள் பெண்கள். அந்தப் பெண்களுக்கு மாத்திரம் அந்தக் குடவிளக்கு வெளிச்சம்

கொடுக்குமே யல்லாது மற்றவர்களுக்கு ஒளி இருப்பதாகவே தெரியாது. வெளியிலே வெளிச்சம் இல்லையென்றால், குடத்துக்குள் விளக்கு இல்லையென்று ஆகுமா?

**குடத்து விளக்கேபோல்**
**கொம்பன்னார் காமம்**
**புறப்படா ;**

பாண்டியன்மேல் வைத்த காதல்நோய் பெண்களிடம் சாதாரணமாய் வெளிப்படத் தெரியாது. ஆனால், இதயத்தில் மறைவாக இருந்துகொண்டேதான் இருக்கும். பாண்டியன் பவனி வருவதற்காக அரண்மனையிலிருந்து புறப்பட்டு வீதி வழியாக வந்து விட்டாலோ, அவர்களுடைய காதல் நோய் ஊராரது பேச்சுக்கிடமாய் வெளிப்பட்டுவிடும். நின்ற நிலையிலேயே நிற்பார்கள் அந்தப் பெண்கள். வெறித்துப் பார்ப்பார்கள். சோர்ந்து படுப்பார்கள். இதைவிட வெளிப்படையான காரியம் வேறு என்ன வேண்டும்?

**குடத்து விளக்கேபோல்க்**
**கொம்பன்னார் காமம்**
**புறப்படா ; பூந்தார்**
**வழுதி புறப்படில், -**
**ஆபுகு மாலை**
**அணிமலையில்த் தீயேபோல்,**
**நாடறி கௌவை**
**தரும். (6)**

---

புறப்படா - வெளியாகத் தெரியாது.

கொம்பன்னார் காமம் புறப்படா - பாண்டியன் மேல் பெண்கள் வைத்த காதல் வெளியாகத் தெரியாது. பூந்தார் வழுதி புறப்படில் - மாலை சூடிய பாண்டியன் பவனி வருவதற்காகப் புறப்பட்டுவிட்டாலோ. ஆபுகு மாலை - பசுக்கள் மேய்ச்சல்ப் புலங்களிலிருந்து ஊருக்குள் புகும் மாலை நேரத்தில். அணிமலையில் - ஊருக்குப் பக்கத்திலே

## 2

**பா**ண்டியநாட்டிலுள்ள, இப்போது திருநெல்வேலி ஜில்லாவிலிருக்கிற, கொற்கை என்னும் பூர்வமான துறை முகத்தில் முத்துக் குளித்துப் பெரிய வியாபாரம் நடந்தது. மேற்கே ரோமாபுரி முதல் கிழக்கே சீன தேசம் வரையில், அரசர்களும் பிரபுக்களும் கொற்கையில் எடுத்த முத்துக்களை வாங்கிப் பாராட்டி வந்தார்கள்.

முத்துவளங் காரணமாகவே பாண்டிநாட்டுக்கும் பாண் டியனுக்கும் தனித்த புகழ் இருந்துவந்தது. ஆசிரியர் இதை யெல்லாம் அனுபவிக்கிறார்.

நாம் பார்க்கிற சங்கு, கடலில் வாழும் ஒரு பிராணியின் சிப்பி. சங்கும், நத்தை இனத்தைச் சேர்ந்தது. ஆனால் பன் மடங்கு பெரிதாயுள்ளது. அது மணலில் ஊர்ந்து செல்லும். செல்லும்போது முட்டைகளை இடும். இருபது முப்பது முட்டைகளை இடும். முட்டைகள் எல்லாம் வெண்மையாய் மிளகுப் பருமனில் இருக்கும்.

புன்னை மரத்தையும் அதன் பூவையும் மொட்டையும் எல்லாரும் பார்த்திருக்கலாம். மொட்டுக்கள் ஒரே வெள்ளை யாய் உருண்டை வடிவமாயிருக்கும்.

கமுகம் பாளையிலிருந்து சிந்தும் மணிகள், பட்டந்தட்டிப் பளபள என்றிருக்கும்.

**பா**ண்டியனுடைய நாயகி, அயலூரிலுள்ள தோழிக் கும் தன் நாயகனுடைய வளத்தை எடுத்துச் சொல்லுகிற எக்களிப்புத்தான் பாட்டின் பாவம்.

"என்னுடைய நாயகன் பாண்டியனுடைய நாட்டுக்கு நீ வந்து பார்த்தால், எங்கும் ஒரே முத்துமயமாய் இருப்ப

---

**யுள்ள மலைச்சாரிவில், நாடறி கௌவை தரும் - நாட்டார் எல்லாரும், அந்தப் பெண்களது காதல் நோயைத் தெரிந்து வம்பளப்பதற்கு ஏது வாய்விடும்.**

தாக எண்ணி ஏமாந்துபோவாய். வாஸ்தவத்தில், கடலி லிருந்துதான் முத்துக்களை எடுக்கிறார்கள்!''

**நந்தின் இளஞ்சினையும்**
**புன்னைக் குவிமொட்டும்**
**பந்தர் இளங்கமுகின்**
**பாளையும் - சிந்தித்**
**திகழ்முத்தம் போல்த்தோன்றும்**
**செம்மற்றே, தென்னன்**
**நகைமுத்த வெண்குடையான்**
**நாடு.** (7)

## 3

நம்மவருக்குள் சில வேடிக்கையான கொள்கைகள் உண்டு. அவைகளில் ஒன்று தேங்காயைப் பற்றியது. தேங் காய்க்குள் ஒருவகையான காளான் எப்படியோ போய், தேங்காய்ச் சத்தையெல்லாம் தின்றுவிடுகிறது. தேங்காய் என்று உடைப்போம். உள்ளே வெறுங் கொட்டாங்கச்சி யாய் இருக்கும். இத்தகைய தேங்காயைத் 'தேரோடி' என்று சொல்லுவார்கள். தேரையே சத்தைத் தின்றுவிட்ட தாகக் குறிப்பு. பழி எப்படியோ தேரையின் தலைமேல் விழுந்துவிட்டது. சரி.

இப்போது ஒரு பெண் சொல்லுகிறதைப் பார்ப்போம். அவள் சோழன்மேல் காதல் கொண்டுவிட்டாள். அவனையே

---

நந்தின் இளஞ்சினையும் - சங்குகள் அப்போதுதானே ஈன்ற முட்டைகளும். பந்தர் இளங் கமுகின் - விசாலமாகப் பந்தல்போல விரிந்துள்ள இளங் கமுகின். திகழ் முத்தம்போல்த் தோன்றும் - சங்கின் முட்டை, புன்னை மொட்டு, கமுகின் பாளையிலிருந்து உதிர்ந்த மணி கள், எல்லாம், பிரகாசிக்கும் முத்தாகவே தோன்றும்படியான. நகை முத்த வெண்குடையான் - முத்துச் சரம்தொங்கவிட்ட வெண்கொற் றக் குடை பிடித்த பாண்டியன். செம்மற்றே - தனிப் பெருமை வாய்ந் தது. செம்மல் - தனிப் பெருமை.

எண்ணிக் கொண்டிருக்கிறாள். ஆனால், அவன் தனக்குக் கிட்டவா போகிறான், இல்லை. அவனுக்கும் தனக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. ஆனாலும், தாயானவள் கோல்கொண்டே அடிக்கிறாள். பக்கத்து வீட்டுக்காரர்கள், தனக்கும் அரசனுக்கும் சம்பந்தம் உண்டு என்று சதா தூற்றிக்கொண்டிருக்கிறார்கள். தன் ஆத்திரத்தில், என்ன சொல்லுகிறாள் : அடிக்கட்டும், தூற்றட்டும், கவலையில்லை. சோழனை அணைந்தேன் என்று இருந்தால்ப் போதும். அது இல்லையே!

**அன்னையுங் கோல்கொண்(டு)**
**அலைக்கும் ; அயலாரும்**
**என்னை அழியுஞ்சொல்ச்**
**சொல்லுவர் ; உள்நிலைய**
**தெங்(கு)உண்ட தேரை**
**படுவழிப் பட்டேன்யான், -**
**திண்தேர் வளவன்**
**திறத்து. (8)**

---

அலைக்கும் - அடிக்கிறாள். அழியுஞ் சொல் சொல்லுவர் : அயலார் சொல்லும் சொல் தன்னை வருத்துகிறது. காரணம், அவர்கள் சொன்ன சொல் அல்ல. அவர்கள் சொல்லும் சொல்லுக்குப் பின்னால் தனக்கு வேண்டிய அனுபவம் இல்லாமல்ப் போனதுதான். தான் சோழனோடு கூடி அனுபவித்திருந்தால் அதுவும் சொல்லலாம், அதற்கு மேலும் சொல்லலாம். உள்நிலைய தெங்கு உண்ட - தேரைக்கு எட்டாதபடி உள்ளாக அமைந்திருக்கும் தேங்காயின் சத்தை உண்ட. தேரை படுவழிப் பட்டேன்யான் - சம்பந்தமில்லாமல் தேரைக்குப் பழி வந்தமாதிரி எனக்கும் பழி வந்தது. திண்தேர் வளவன் திறத்து - தேரைக்குப் பழி, தேங்காய் சம்பந்தமாக ஏற்பட்டது. எனக்கு எப்படி ஏற்பட்டது தெரியுமா, தோழி? நல்ல தேர்மேல் பவனி வருவானே, சோழன், அந்தப் பாதகன் காரணமாக ஏற்பட்டது!

குறிப்பு :—அபூர்வமான உண்மையைச் செய்யுள் உருவத்தில் கவிஞர் காட்டிவிட்டார். உற்றுநோக்கி அனுபவிக்க வேண்டியவிஷயம்இது.

## 4

ஒரு பாலைவனம். மரம் செடி யெல்லாம் கருகிக் கிடக்கிறது. கண்டங்கத்திரிச் செடி, கால் எடுத்து வைக்கமுடியாதபடி எங்கும் படர்ந்திருக்கிறது. பட்டப் பகலிலே நரி ஊடாடுகிறது. கொஞ்சம் எட்டி, நெருப்பும் புகையுமாய்த் தெரிகிறது.

அது நாலாபக்கத்திலும் சுற்றிக்கொள்ளுவது போல் தோன்றுகிறது. இதையெல்லாம் பார்த்துச் சேரனது (கோதை) வீரத்தைப்பற்றிச் சொல்லுவதற்குச் சந்தர்ப்பம் வாய்க்கிறது.

**கரிபரந்(து) எங்கும்**
**கடுமுள்ளி பம்பி,**
**நரிபரந்து நால்த்திசையுங்**
**கூடி—எரிபரந்த,**
**பைங்கண்மால் யானைப்**
**பகையடுதோள்க் கோதையைச்**
**செங்கண் சிவப்பித்தார்**
**நாடு.** (9)

---

கடுமுள்ளி பம்பி - கண்டங்கத்திரிச்செடி நிறைந்து. நரி பரந்து - நரிகள் குறுக்கும் நெடுக்குமாய்ப் போய். நால்த் திசையும் எரி பரந்த - நெருப்பும் புகையும் நெடுந்தூரம் காணப்பட்டன. பைங்கண் மால் யானை - களிப்போடுகூடிய கண்ணும் வீரமுமுள்ள யானை. பகையடு தோள் - பகைவர்களை ஒடுக்கும் தோள்ப் பலமுடைய; வில்லிலும் வேலிலும் வல்ல. செங்கண் சிவப்பித்தார் நாடு - செந்தாமரைக் கண் கோவைப்பழம் போலச் சிவக்கும்படி கோபமூட்டிய பகையரசரது நாடு எரிபரந்த.—என்று முடிக்க.

ஒரு நாடு ஏரியினாலும், அணை கட்டிய ஆற்றுப் பாய்ச்சலாலும் வளம் பெற்றிருக்கும். நன்செயும் தோப்பும் வளமாய் இருக்கும். குடி

## 5

இப்போதும் நாம் பார்க்கிற விஷயந்தான் இது: நம்முடைய ஊரிலுள்ளவர்கள் அயல் வீட்டுப் பெண் குழந்தைகளைத் தோளில் தூக்கி வைத்துக்கொண்டு கடைத்தெருவைக் காட்டுகிறது, கோவில் விழாவைக் காட்டுகிறது, பொம்மைகள் வாங்கிக் கொடுக்கிறது. ஏதோ குழந்தைகள் மனம் நொந்து அழுதுகொண்டிருந்தால், ஆற்றுக்கோ குளத்துக்கோ குளிக்கப் போகும்போது தூக்கிக்கொண்டு போய் அரசமரத்து நிழலில் உட்காரவைத்து விட்டு, முதலில்த் தாங்கள் குளித்துப் பிறகு அந்தக் குழந்தைகளைக் குளிப்பாட்டித் தலை துவட்டிவிட்டு வீட்டில் கொண்டுபோய்ச் சேர்ப்பது. குழந்தைகள் சம்பந்தமாக, ஊரார் எல்லாருமே இப்படிச் செய்கிறார்கள் என்றால் மிகை அல்ல.

இப்படி யெல்லாம் அருமை பாராட்டி வந்த ஊரார், அந்தக் குழந்தைகள் பருவமடைந்து பெண்களாகிறபோது, அவர்களுக்கு வரன் தேடுவதுபற்றி, கலியாணம் நடத்துவது பற்றி, ஆத்திரமும் ஆர்வமும் காட்டுவதும் இயல்பு.

*   *   *   *

ஒரு பெண் சேரனைக் கண்டு காதல் கொண்டு விட்டாள். அவனை மணந்துகொள்ள வேண்டுமென்று அவ

---

களும் நன்றாய் உழைத்துப் பண்படுத்தி வைத்திருப்பார்கள். பகையரசன் வந்தால், குளத்தை அழித்து அணையை அழித்து, குடிகளையுப் அங்கு தங்காதபடி ஓட்டிவிடுவான். சில வருஷங்களில் வளம் எல்லாம் போய், மரமெல்லாம் பட்டுப்போய்ப் பாலைவனமாய்விடும். இது உண்மைதான். இந்த உண்மையை வைத்துச் சேரனது வீரத்தைக் கொண்டாடுகிறார் கவிஞர்.

குறிப்பு :—வீரத்தைக் குறித்துப் பேசும்போது, அதனால் ஏற்படும் கொடுமையை எடுத்துச் சொல்லுவதற்கு ஒருவர் கூசுவதில்லை.

ளுக்கு ஒரே வெறி. தானுகக் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முடியுமா? முடியாது. இந்த நிலையில், தனியான ஒரு இடத்தில் உட்கார்ந்து என்ன என்னபடி யெல்லாமோ யோசனை செய்கிருள். தன்னந் தனியாகத் தான் இருக் கிருள். ஆனுலும், தன்னை ரொம்பவும் பாராட்டி வந்த ஊரார் ஏதோ, தன் முன்னிலையில் நிற்பதாகப் பகல்க்கனவு காண்கிருள். அப்படியே அவர்களிடத்தில் பேசுகிருள். இந்த உருவெளித் தோற்றத்தோடு பேசுகிறதெல்லாம், காதல் வெறியிலிருந்து உண்டாவதுதான்.

**நீரும் நிழலும்போல்**
**நீண்ட அருளுடைய**
**ஊரிரே! என்னை**
**உயக்கொண்மின்! - போரிற்(கு)**
**உழலுங் களியானைப்**
**பூழியர்கோக் கோதைக்(கு)**
**அழலும்என் நெஞ்சம்**
**கிடந்து. (10)**

---

நீரும் நிழலும்போல் - சிறு கிராமங்களில் இன்றைக்குங்கூட ஆட வர் பெண்டிர் அனுபவிக்கிற விஷயம் என்னவென்ருல், குளிப்பதற்கு வசதியான படித்துறையும் அதை ஒட்டி நிற்கும் மரத்தின் நிழலும் தான். ஊராருடைய அருமையானது, நீரும் நிழலும்போல் இருக்கிற தாம். நீண்ட - தாராளமான. என்னை உயக்கொள்மின் - எனக்கு உயிர் போய்விடும்போ லிருக்கிறது. கொஞ்சம் தயவு வைத்துக் காப் பாற்றுங்கள். போரிற்கு உழலும் களியானை - போர் எங்கே என்று திமிறிக்கொண்டு நிற்கும் மதயானைகளையுடைய. பூழியர்கோக் கோதைக்கு - சேர நாட்டாரது அரசனை கோதை காரணமாக. அழ லும் என் நெஞ்சம் கிடந்து - காதல் நோயால் என் நெஞ்சு சதா கொதித்தவண்ணமா யிருக்கிறது. ஊரிரே என்னை உயக்கொண்மின்!

# 1

**சோ**ழனைக் கண்டு மோகித்து, ஒரு பெண் வசம் அழிந்து இருக்கிற நிலை. வீட்டில் பல இடங்களில்ப் போய் உட்கார்ந்து பார்க்கிருள். ஆங்காங்குள்ள படுக்கைகளில் படுத்துப் பார்க்கிருள் - மனசுக்கு அமைதி வராதா என்று. உணர்ச்சி தன் வசத்தில் இல்லாததால், கையிலுள்ள வளை யல்கள் தாமாகக் கழன்று படுக்கைக்குக் கீழேயோ அல்லது உருண்டுபோய்ப் பெட்டிகளுக்கு அடியிலேயோ கிடக்கின் றன. இது அவளுக்குத் தெரிவதில்லை. அங்குமிங்கும் போய்த் தேட ஆரம்பிக்கிருள். தேடிக் கொண்டிருக்கும்போது, ஒரு பகல்·கனவு :

சோழன் ஏதோ வந்தான், கையைப் பிடித்தான், வளை யல்களைக் கழற்றி அப்படியே கொண்டுபோய் விட்டான் என்பதாக.

மனசு ஒரே குழப்பமாய் இருப்பதால், இந்தக் கனவு பற்றியே தோழியிடம் பேச ஆரம்பித்து விடுகிருள். "தோழியே! நம்முடைய சோழனுக்கு ஒன்றும் குறைச்ச லில்லை. அவனுடைய போர் யானையைப் பார்த்தாயா ? அது வெளியில் வருகிறதென்ருல் ஜனங்கள் தூர ஒதுங்கிவிட வேண்டுமென்று பறை கொட்டிக்கொண்டு போகிருர்கள். அவ்வளவு வீரம் பொருந்திய யானை.

"ரத்னமாலையின் அழகுதான் என்ன! அவனது மார்பில் அசைந்துகொண்டு இருப்பதைப் பார்த்துக்கொண்டே இருக்கலாமே!

"இதெல்லாம்போக, அவன் செங்கோல் செலுத்து கிருன். சகலவிதமான குடிகளுக்கும் நீதி செலுத்துகிருன்

என்னும் புகழ் வேறு. ஆனாலும், அவன் நீதி செலுத்துகிற அழகை என்ன என்று சொல்ல!

**அறைபறை யானை,**
**அலங்குதார்க் கிள்ளி**
**முறைசெயும் என்பரால்த்**
**தோழி! - இறையிறந்த**
**அங்கோல் அணிவளையே**
**சொல்லாதோ, மற்றவன்**
**செங்கோன்மை செல்கின்ற**
**ஆறு!** (11)

## 2

**சா**ம்ராஜ்யம் ஒன்று வேண்டுமென்பதும், அதற்காகப் பிற நாடுகளைத் தங்கள் ஆட்சிக்கு உட்படுத்த வேண்டுமென்பதும் தற்காலத்தைப் போலவே பண்டைக் காலத்திலும் ஏற்பட்ட உண்மை.

---

அறைபறை யானை - போருக்குரிய மதயானை. வெளியே புறப்பட்டால் அபாயம் வருமென்று பறை சாற்றுவது வழக்கம். அலங்கு தார்க் கிள்ளி - மார்பில் ரத்ன மாலைகள் அசைந்து அழகு செய்யும் சோழன். முறைசெய்யும் என்பரால் - நீதிசெலுத்துகிறான் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களே. இறை இறந்த - கையை விட்டுப் போன. அங்கோல் அணிவளையே - நெளிவு வேலை செய்த அழகிய வளையல்களே. சொல்லாதோ - நன்றாய்த்தான் எடுத்துச் சொல்லுகிறதே, சாட்சியம் வேறு வேண்டும்! மற்றவன் செங்கோன்மை செல்கின்ற ஆறு - அந்தச் சோழனுடைய செங்கோன்மை செல்லுகின்ற அழகை - அணிவளையே சொல்லாதோ.

குறிப்பு:—காதல் வெறியில் வஞ்சப்புகழ்ச்சி எழுதல் இயல்பு. இந்த பாவம் செய்யுளில் அமைந்திருப்பதைப் பார்க்கவேண்டும்.

அரசனது நிர்வாகிகள் சிற்றரசர்களிடம் போய், உங்கள் நாடு எங்கள் அரசனதுதான் என்று ஓலையில் எழுதிக்கொள்வார்களாம். இதற்குப் பட்டோலை எழுதுவது என்று பெயர்.

*　　　*　　　*　　　*

**பா**ண்டியனது ராஜ்யம் சம்பந்தமாக, பட்டோலை எழுதுவதற்குக் கணக்குப் பிள்ளைகள் பலர் உண்டாம். அந்தக் கணக்குப் பிள்ளைகளில் ஒருவர் பட்டோலை எழுதுவதைப் பார்ப்போம்.

அவனுடைய போர்யானைதான் அந்தக் கணக்குப் பிள்ளைப் பேர்வழி. அதன் நீண்ட கூர்மையான கொம்புதான் (மருப்பு) எழுத்தாணி. பாட்டை இப்போது பார்க்கலாம்.

**ம**ருப்பூசி யாக,
　　மறங்கனல்வேல் மன்னர்
உருத்தகு மார்(பு)ஓலை
　　யாக, திருத்தக்க
வையகம் எல்லாம்
　　எம(து)என்(று) எழுதுமே, -
மொய்யிலைவேல் மாறன்
　　களிறு.

---

மருப்பு - யானையின் தந்தம். ஊசியாக - எழுத்தாணியாக. மறம் கனல் வேல் மன்னர் - வீரமே பிரகாசிக்கும் வேல் ஏந்திய பகையரசரது. உருத்தகு மார்பு ஓலையாக - அழகிய விசாலமான மார்பே பட்டோலையாக. திருத்தக்க வையகம் எல்லாம் - அழகிய வளமான உள் ராஜ்யம் முழுதுமே. எமது என்று - எங்கள் பாண்டியனுக்குச் சொந்தமாய்விட்டதென்று. மொய்யிலை வேல்மாறன் களிறு - வலிமையுள்ளதும் இலைபோன்றதுமான வேலை ஏந்திய பாண்டியனது கொம்பன்.

குறிப்பு :—பாட்டின் உருவம் பயத்தையே உண்டாக்கி விடுகிறது. அருமையான பாவமுடைய கவி.

## 3

**பா**ண்டியன் குதிரைமேல் ஏறிச் சவாரி போவது வழக்கம். அப்படிப் போகும்போது சகலரும் அவனைக் கைகூப்பித் தொழுவார்கள். பெண்கள் நாணத்தோடு வாசற்கதவைச் சிறிது சாய்த்தவண்ணமாய் அதோடு ஒட்டிநின்று தொழுவார்கள்.

ஒரு பெண்ணுக்குப் பாண்டியன்மீது அபாரமான காதல் விளைந்துவிட்டது. தண்ணீர்த் துறைக்குப் பாண்டியன் சவாரி செய்யும் குதிரையை நடத்திக்கொண்டு போகும்போது பார்த்தாள். குதிரையோடு பேசுகிறாள் – தன்னந்தனியாக நின்றுகொண்டுதான்.

"குதிரையே! எதிரிகளைத் துரத்தும்போது போர்க்களத்தில் வேகமாய்ப் பாய்வாய்; அது சரிதான். ஆனால், ஊருக்குள் எதிரிகள்தான் கிடையாதே; ஒரே படியாகப் பாய்ந்து ஓடாமல், மெல்ல நடந்துபோனால் என்ன கேடு!"

**போரகத்துப் பாயுமா!**
**பாயா(து) ஒருபடியா,**
**ஊரகத்து மெல்ல**
**நடவாயோ! - பார**
**மதவெங் களியானை**
**மாறன்தன் மார்பம், -**
**கதவங்கொண்(டு) யாமும்**
**தொழ. (13)**

---

போரகத்துப் பாயும் மா - யுத்தகளத்தில் பாய்ந்து ஓடும் குதிரையே. பாயாது ஒருபடியா - ஒரே படியாய்ப் பாய்ந்துவிடாமல். ஊரகத்து - ஊருக்குள். பார மதவெங்களியானை - போருக்கு உரிய பெரிய மதயானைகளை யுடைய. மாறன்தன் மார்பம் - பாண்டியனது மார்பை. கதவங்கொண்டு யாமும் தொழ - கதவின் இடுக்கில் நின்றுகொண்டு யான் தொழும்படி. யாம் - நான். ஒரு பெண்ணைப்பற்றிப்

# 4

டார்வின் என்ற பேராசிரியர், மனித வர்க்கம் உள்ளிட்ட உயிர்வர்க்கம் எல்லாம், கண்ணுக்குச் சாதாரணமாய்த் தெரியாத ஒரு உயிர்த் தாதுவிலிருந்து வளர்ந்து மாறுபட்டு, அங்கங்களை அமைத்துக்கொண்டு, தற்போதைய நிலைக்கு வந்திருக்கின்றன என்பதையும், எப்படி வந்தன என்பதையும் ரூபித்துக் காட்டியிருக்கிறார். உலகப் பிரசித்தி பெற்றவர் அவர்.

தென் அமெரிக்காவுக்கு ஆசிரியர் டார்வின் போக நேர்ந்தது. அந்தத் தேசத்தின் நிலைமையை ஆராய்ந்து அறிவதற்காக அவர் பயணம் செய்வதுண்டு. அவருக்குத் துணையாக நாற்பது ஐம்பதுபேர் (அமெரிக்கப் பூர்வ குடிகள்) சாமான்களைத் தூக்கிக்கொண்டு போவது வழக்கம். ரயிலோ, வண்டியோ ஒன்றுமில்லாத காலம் அது. பயணம் செய்துகொண்டிருக்கும்போது, கழுகுகளும் பருந்துகளும் வட்டமிட்டுக் கூடவே வந்தன. நூறு இருநூறு மைல் தூரத்துக்கும்கூட வந்தன. காரணத்தை விசாரித்தபோது, பரிவாரத்திலுள்ளவர்கள் சொன்னார்கள் :

" சாதாரணமாய் இப்படிக் கூட்டமாக நாங்கள் போகிறதென்றால் யுத்தத்துக்காகத்தான். எதிரிகளைக் கண்டவுடன் யுத்தம் நடக்கும், பிணங்கள் பல விழும். பிணங்களைக் கருதியே கழுகும் பருந்தும் தொடர்ந்து வருவது வழக்கம்.

---

பிறராவது தானேயாவது பேசும்போது, பன்மையில்க் குறிப்பது பண்டைக் காலத்து வழக்கு. யாம் - இங்கே ஒருமை.

குறிப்பு :—இந்தக் கவி பெண்ணின் கூற்று என்பது மறைவாய்க் கிடக்கிறது. மார்பம் தொழ, கதவங்கொண்டு, என்னும் சொற்களை வைத்துத்தான் காதலுற்ற பெண் பேசுகிறதாகப் புலப்படுகிறது. இப்படி விஷயத்தை மறைவில் வைத்துச் சொல்லுவதில் ஒரு நாண பாவம் இருக்கிறது. அது தெளிவாகிறது, கடைசி அடியை ரகசியமாய்ப் பாடும்போது.

அந்த வழக்கம்பற்றியே, இப்போதும் நம்முடன் இவை வரு கின்றன " என்றூர்கள்.

* * * *

**ந**ம்முடைய கவிஞர் இதற்கு ஒப்பான ஒரு காட்சியை வர்ணிக்கிருர்.

கழுகினம் (பாற்றினம்) கூச்சலிடுகின்றன. பருந்துகள் தொடர்ந்து வருகின்றன. நரிகள் நாலா பக்கத்திலும் ஓடி ஒரு பரபரப்பைக் காட்டுகின்றன. பெண் பேய்கள் (பிணம் தின்னும் மக்கள் இனம்) உத்ஸாகத்தோடு ஒழுங்காகவே ' அலங்கலம் ' என்னும் நடனத்தை ஆடுகின்றன.

இவ்வளவு ஆரவாரத்துக்கும் காரணம் என்ன ?

**பா**ற்றினம் ஆர்ப்ப,
    பருந்து வழிப்படர,
நால்த்திசையும் ஓடி
    நரிகதிப்ப, - ஆற்றின்
அலங்கலம் பேய்மகளிர்
    ஆட, வருமே, -
இலங்கிலேவேல்க் கிள்ளி
    களிறு. (14)

---

பாற்றினம் ஆர்ப்ப - கழுகினம் கூச்சலிட ; பாறு - கழுகு. நரி கதிப்ப - நரிகள் பரபரப்போடு உலவ. ஆற்றின் - நடனத்துக்குரிய ஒழுங்கில். அலங்கலம் பேய் மகளிர் ஆட - ஒருவகை நடனத் தைப் பெண் பேய்கள் ஆட ; ஆட - ஆடுவதற்குக் காரணமாக. இலங்கு இலே வேல் கிள்ளி களிறு - பிரகாசிக்கும் வேல் ஏந்திய சோழனது யானே. களிறு - போர் யானே.

யானே போருக்குச் செல்லும்போது கழுகினம் எல்லாம் உடன் செல்லும். போர் யாதொன்றும் இல்லாமலே சாமானியமாக ஒரு ஊரிலிருந்து மற்ருெரு ஊருக்கு யானேயைக் கொண்டு போகும்போதும், மேலே சொன்ன கழுகு முதலாயின உடன்செல்லும்.

## 5

ஒரு பூங்காவனத்தில் ஒரு பெண். அவள் பல நாளாகக் சோழனோடு மாலை நேரத்தில் கூடிக் குலாவுவது வழக்கம். மாலைநேரம் வந்ததும் நாயகனிடத்தில் ஒரே நாட்டம் ; நாயகன் வரக் கொஞ்சம் தாமதம் ஆனாலும் சரி, அவளுக்கு எவ்வளவோ சங்கடம் ; இந்த நிலையிலிருக்கிறாள்.

ஒரு நாள் மாலை. மாலைநேரம் வந்ததைக் காட்டும் அடையாளங்கள் எத்தனையோ. அவைகளில் ஒன்று :

இடைப் பையன்கள் பசுக்களை மேய்ச்சல் புலங்களிலிருந்து ஊருக்கு ஓட்டி வருகிறார்கள். வரும்போது, புல்லாங்குழலை வாயில் வைத்து இதமாகப் பாடுகிறார்கள். அந்தக் குழலோசையைக் கேட்டுப் பசுக்கள் தொடர்ந்து வருகின்றன. இந்தப் புல்லாங்குழல் ஓசையானது, நாயகிக்கு, அந்தி நேரத்தை நினைப்பூட்டி விடுகிறது. நாயகன் வரவில்லையே என்ற ஆத்திரத்தையும் தூண்டிவிடுகிறது.

இடைப் பையன்களுடைய புல்லாங்குழல் இவ்வளவையும் செய்துவிடுகிறது.

* * * *

நாயகி தனக்குள்ளே சொல்லிக்கொள்ளுகிறாள்.

'சோழன், ஏதோ, நாட்டிலுள்ளவர்களுக்குத் துன்பம் ஏற்படாமல் காக்கிறான் என்கிறார்கள் ; எனக்கொன்றும் விளங்கவில்லை. துன்பம் செய்கிறதைத் தடுத்தால் அல்லவா பாதுகாக்கிறான் என்று சொல்லமுடியும் ?'

தெண்ணீர் நறுமலர்த்தார்ச்
சென்னி இளவளவன்
மண்ணகம் காவலனே
என்பரால், - மண்ணகம்
காவலனே ஆனக்கால்க்
காவானே, - மாலைக்கண்
கோவலர்வாய் வைத்த
குழல். (15)

---

தெண்ணீர் நறுமலர்த்தார் - தெளிந்த நீர்நிலைகளில் பூத்த செங் கழுநீர்ப் புஷ்பங்களை மாலையாய்த் தொடுத்து அணிந்த. சென்னி இள வளவன் - சென்னி என்றும் இளவளவன் என்றும் பாராட்டப்படுகிற சோழன்; வளவன் - சோழன். மண்ணகம் காவலனே என்பரால் - உலகத்தைக் காக்கிறான் என்று சொல்லுகிறார்கள். காவானே - கட்டளை இட்டுத் தடுக்கமாட்டானே. மாலைக்கண் கோவலர் வாய் வைத்த குழல் - இந்த மாலைப்போதில் இடைச் சிறுவர்கள் வாய்வைத்து ஊதுகின்ற புல்லாங்குழலை—காவானே.

குறிப்பு:—இந்தக் கவியில் உண்மையான மனப்பாங்கு இருக்கிறது; ஒரு பரிதாபம் இருக்கிறது. இந்த இரண்டோடு ஹாஸ்யமும் இருக்கிறது. பாட்டின் உருவம் பூர்வமான உயர்ந்த கவிப்பண்பைக் காட்டுகிறது.

## 1

கிடைத்தற்கு அரிய காரியத்தை அடைவதற்கே உலகத்தில் தவஞ் செய்கிறார்கள். ஒரு காலிலேயே நின்று பல ஆண்டுகள் தவஞ் செய்பவர்களைப் பற்றிக் கேட்டிருக்கிறோம்.

பாண்டியன்மேல் காதலுற்ற பெண்ணொருத்திக்கு, அவனுடைய மார்பைத் தழுவவேண்டுமென்று ஒரே ஆசை. ஆனால், அது கிட்டுகிற காரியமா ? அல்ல. ஆனாலும், நீலோற்பல மாலைக்குக் கிட்டிவிட்டது அது ! சரி, இப்போது காரணம் தெரிகிறது என்று, தடாகத்தை நோக்கியவண்ணமாய்ப் பேசுகிறாள்.

**கார்நறு நீலம்**
**கடிக்கயத்து வைகலும்**
**நீர்நிலை நின்ற**
**தவங்கொலோ ! - மார்பணைய,**
**வண்டிருக்கும் நக்கதார்**
**வாமான் வழுதியைக்,**
**கொண்டிருக்கப் பெற்ற**
**குணம்.** (16)

---

கார்நறு நீலம் - இருண்ட நீல நிறத்தோடு கூடிய மணங்கமழும் நீலோற்பல மலர். கடிக் கயத்து - வாசனையுள்ள தடாகத்தில். வைகலும் - எத்தனையோ நாளாக. நீர் நிலை நின்ற தவங்கொலோ - நீருக்

## 2

படைகளைத் திரட்டிக்கொண்டு யுத்தகளத்துக்குப் பகையரசன் வருவான். வெண் கொற்றக் குடையொன்று பகையரசனிருக்கும் இடத்தைக் குறிக்கும்.

இந்த நிலையில், சேரனது போர் யானைக்குக் கள்ளை யூட்டி அதை வெறிகொள்ளச் செய்து, யுத்த களத்தில்க் கொண்டுபோய் விட்டுவிடுவார்கள். அது அப்படியே ஓடி, எதிரிகளின் படைகளையெல்லாம் மிதித்தெறிந்து குடை யண்டை போய்விடும். போனதும், குடையைப் பிடுங்கித் தரையில் அடித்துச் சுக்கு சுக்காக நொறுக்கிவிடும்.

அடிக்கடி இந்த விதமாகக் குடையை முறிக்கும் காரியம் ஏற்படும். யானைக்கு இது ஒரு பழக்கமாகவே போய் விட்டது. பழக்கம் என்று ஏற்பட்டு விட்டால், யானை சும் மாவா இருக்கமுடியும்?

---

குள் அசையாது ஒரு தண்டில் நின்று தவஞ்செய்கிற காரியந்தான் என்று தெரிகிறது. வண்டிருக்கும் நக்க தார் வாமான் - வண்டு மொய்க்கும்படியாக வெள்ளை அலரி மாலை கழுத்தில் கட்டிய வேக முள்ள குதிரை ; நக்க - வெண்மையான. வாமான் - அழகாக நாலு கால்ப் பாய்ச்சலில் ஓடும் குதிரையில் சவாரிசெய்கிற. வழுதியைக் கொண்டிருக்கப்பெற்ற குணம் - பாண்டியனது மார்பைத் தனக்கு ஆக்கிக்கொண்ட காரியம்.

குறிப்பு :—நீலோற்பலத்தைப் பார்த்ததும் செய்யுளில்ச் சொன்ன விஷயம் எல்லாம் பெண்ணின் மனசுக்கு அப்படியே வந்துவிடுகிறது. ஏதோ விஷயத்தைக் கண்டு பிடித்துக்கொண்டதாக பாவம்.

வீறுசால் மன்னர்
விரிதாம வெண்குடையைப்
பாற எறிந்த
பரிசயத்தால்த் - தேருது,
செங்கண்மாக் கோதை
சினவெங் களியானை,
திங்கள்மேல் நீட்டும் தன்
கை. (17)

## 3

**கா**டை என்பதாக ஒரு சிறு பக்ஷி. மணல்ப் பாங்கான காடுகளில் இரைதேடுவது அதற்கு வழக்கம். வேடர்கள் கண்ணி வைத்து அதைப் பிடிப்பார்கள்.

ஒரு வேடன் ஒரு காடையைக் கண்ணி வைத்துப் பிடித்தான். பிடித்து, அதன்மேல் ஒரு கூடையைக் கவிழ்த்து,

---

வீறுசால் மன்னர் - படைகள்பெருத்த பகையரசரது. விரி தாம வெண்குடையை - விரிந்து கவிந்து முத்துச் சரங்கள் தொங்கவிட்ட வெண்குடையை. பாற எறிந்த பரிசயத்தால் - நொறுங்கிப் போகும் படி தரையில் அடிக்கிற பழக்கத்தால். தேருது - விஷயம் தெரியாமல். செங்கண்மாக் கோதை - சிவந்த அழகிய கண்ணோடு கூடிய சேர அரசனது. சினவெங் களியானை - கோபத்தோடு கூடிய வெறிகொண்ட யானை- திங்கள் மேல் நீட்டும் தன் கை - சந்திரனைப் பகையரசனது குடை என்று எண்ணி, அதன்மேலேயே தன் துதிக்கையை நீட்டும் - விஷயம் தெரியாமல்த்தான்.

குறிப்பு :—யானையினுடைய கை உயர்ந்து நமக்குத் தெரிகிறது. செய்யுளிலும் அந்தக் கை தனித்து உயர்ந்து நிற்கிறது.

கூடையின்மேல் ஒரு கல்லேயும் வைத்துவிட்டுத் தூரத்தி லுள்ள வேறொரு கண்ணியைப் பார்க்கப் போனான். சிறிது நேரங் கழித்துத் திரும்பினான். கல்லே எடுத்துக் கீழே வைத் தான்; கூடையைத் தூக்கினான். காடை அதில் இல்லே! எப்படியோ போய்விட்டது. திகைத்து நிற்கிறான் வேடன்.

காடை என்ன செய்தது? மணலேக் கிளறிக் கிளறித் தரையின்கீழ் வழி செய்துகொண்டு, கூடை இருந்த இடத் துக்குக் கொஞ்ச தூரத்தில் மேலே கிளம்பி, அப்படியே பறந்து போய்விட்டது.

* * * *

பாண்டியன் பவனி வருகிறான். ஒரு வீட்டுக்கு முன் நின்றது பவனி. வீட்டுப் பெண் பாண்டியனேப் பார்த்து விட்டாள். ஆகா, மோசம் வந்துவிட்டதே என்று, தாயான வள், பெண்ணே இழுத்துக்கொண்டு போய் உள்க்கட்டில் இருக்கச் செய்துவிட்டாள். கதவையும் தாளிட்டுவிட் டாள். தெருவில் நின்ற பவனியும் முன்னேறிச் சென்று விட்டது.

பெண்ணின் நிலே எப்படியிருக்கிறது பார்ப்போம்:

பாண்டியனேப் பார்த்தவண்ணமாய்ப் பவனி கூடவே செல்லுகிறது அவள் மனசு; அரண்மனேக்குள்ளும் செல்லு கிறது. கடைசியாகப் பாண்டியனோடு சல்லாபம் செய்து கொண்டிருப்பதாகவும் மனசுக்குப் படுகிறது. இதெல்லாம் பகல்க்கனவாய் இருந்தாலும், நனவாகவே தோன்றுகிறது

பெண்ணுக்கு. இந்த மயக்கத்தில் அவளுக்கு என்ன சொல்லத் தோன்றுகிறது பார்ப்போம்:

**கோள்த்தெங்கு சூழ்கூடல்க்**
**கோமானைக் கூட, என**
**வேட்(டு)அங்குச் சென்றஎன்**
**நெஞ்சறியாள்; - கூட்டே**
**குறும்பூழ் பறப்பித்த**
**வேட்டுவன்போல், அன்னை**
**வெறுங்கூடு காவல்கொண்**
**டாள்!** (18)

·

·

## 4

சித்திரங்களில்த் தமிழர்கள் நன்றாய்ப் பழகியிருந்தார்கள். தேவர்கள் வந்தார்கள். அரசன்மீது பூமழை சொரிந்தார்கள் என்று வார்த்தையால் சொல்லுவதைச் சித்திரத்திலும் காட்டினார்கள்: அரசனுடைய உருவத்துக்கு மேலே, அதாவது பூமியிலிருந்து மேலே எட்டி, தேவர்களைப்

---

கோள்த் தெங்கு சூழ் கூடல்க் கோமானை - குலைகுலையாகத் தேங்காய்களைத் தாங்கி நிற்கும் தென்னை மரங்கள் சூழ்ந்துள்ள மதுரைப் பதிக்கு மன்னனான பாண்டியனை; கோள் - குலை. வேட்டு - ஆசை கொண்டு. கூட்டே - பந்தோபஸ்தாக வைத்த கூட்டில்த்தானே. குறும்பூழ் - காடை. பறப்பித்த - மணலைக் கிளறிப் பறந்துபோக இடங்கொடுத்து ஏமாந்த. வேட்டுவன் - வேடன். வெறுங்கூடு காவல் கொண்டாள் - மனசு வெளியே போய்ப் பாண்டியனோடு குலாவிக் கொண்டிருக்க, உடலை மாத்திரம் இங்கே வைத்துக் காவல்செய்கிறாள் என்ன ஏமாளித்தனம்!

பணிந்து நிற்கச்செய்து கூடைகளிலிருந்து புஷ்பத்தைச் சொரிவதாகச் சித்திரம் எழுதுவார்கள். தேவர்கள் 'என்னும்போது, மிக்க பலம் வாய்ந்தவர்கள், சக்தி வாய்ந்தவர்கள், என்பது குறிப்பு.

இப்போது பாண்டியனது ஆக்ஞையைப்பற்றி ஒரு காதல்நாயகி தோழியிடம் பேசுவதைப் பார்ப்போம்.

"**பா**ண்டியனுடைய தோள் மிகவும் பெரியது. தோள் வளையம் அது காரணமாக நிமிரப் பார்க்கிறது. மார்பிலே, நிலவுபோலப் பிரகாசிக்கும் முத்தாரங்கள். முத்துச் சரங்கள் தொங்கவிட்ட அவனுடைய குடை, ஏதோ ஒரு பாகம் இரண்டு பாகம் குறுக்களவு உள்ளதென்று எண்ணுகிருய் ? பூமி முழுவதுமே அது கவிந்திருக்கிறது. அந்தக் குடை நிழலிலுள்ளவர்கள் எல்லாரும் நன்ருய்ப் பாதுகாக்கப்படுகிருர்கள். அயலார் யாரும் குடிகளைத் தொந்தரவு செய்ய முடியாது. பாண்டியனது நாட்டுக்குள் அயலார் யாருமே கால் எடுத்து வைக்கமுடியாது."

**நேமி நிமிர்தோள்**
**நிலவுதார்த் தென்னவன்,**
**காமர் நெடுங்குடைக்**
**காவலன் ஆணையால் !**
**ஏம மணிப்பூண்**
**இமையார் திருந்(து)அடி: -**
**பூமி மிதியாப்**
**பொருள். (19)**

---

**நேமி** - தோள் வளையம். **தார்** - முத்தாரம். **தென்னவன்** - பாண்டியன். காமர் நெடுங்குடைக் காவலன் - அழகிய விசாலமான குடை

## 5

ஒருவருக்கு ஒரு விஷயத்தில் ஆத்திரம் அதிகப்பட்டு விட்டால், காரியம் கைகூட வேணுமே, வேணுமே என்று சதா ஏங்கிக் கொண்டிருப்பார்கள். சும்மா இருந்துவிடத் தோன்ருது. ஆருடக்காரரைக் கேட்போமா, ஜோசியரைக் கேட்போமா என்றெல்லாம் தோன்றும். இது மனுஷ இயற்கை.

* * * *

காதல்பற்றிப் பெண்களுக்கு ஆத்திரம் உண்டாகிக் குறத்தியிடம் குறி கேட்பது இன்றைக்கும் உண்டு. பண்டைக் கலத்திலும் உண்டு. குறத்தி அகப்படாவிட்டால்,

---

யைக்கொண்டு நாட்டைக் காவல் செய்கிறவன். குடை என்ருல் சாமானிய வெண்கொற்றக் குடையென்பது ஒரு பொருள். மற்ருென்று, நாட்டைப் பாதுகாக்கும் முறையை எடுத்துக்காட்டும் ஒரு அடையாளம். பூர்வமாகத் தமிழ்க்கவிஞர்கள் இந்த அடையாளத்தைப் பல வாருகப் பாராட்டிப் பாடுவார்கள். அரசனது குடைக்கு ஒரு புண்ணிய தினத்தில் அலங்காரமெல்லாம் பண்ணி வழிபாடு செய்வதும் பூர்வ வழக்கம். ஆணையால் - பாண்டியன் செய்துள்ள ஆக்ஞையாக்கும்! ஆக்ஞை ரொம்பவும் திருத்தமாய் நடந்துவந்ததென்பது பாட்டின் குறிப்பு. ஏம மணிப்பூண் - எங்கும் கிடையாத ரத்தினங்கள் பதித்த ஆபரணங்களை யணிந்த. இமையார் - தேவர்கள். திருந்து அடி - சிவந்த அழகிய அடி. தேவர்கள் சித்திரத்தில்கூடப் பூமியை மிதிப்பதில்லை, உண்மையிலும் அப்படித்தான் என்பது குறிப்பு. பாண்டியனது நாடு சம்பந்தமாக, தேவர்களே இவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தார்கள் என்ருல், பூமியிலுள்ள அரசர்களைப்பற்றிச் சொல்லவா வேணும்?

தாங்களே ஒருவகையில்க் குறி பார்த்துக் கொள்வது வழக்கம். எப்படி யென்றால் :

மணலைத் தங்களுக்குமுன் ஒழுங்காகப் பரப்பிக் கொள்வார்கள். பிறகு கண்ணை மூடிக்கொண்டு, வலது கை ஆள் காட்டி விரலால் மணலில் ஒரு இடத்திலிருந்து சிறுசிறு வளையங்கள் எழுதி வட்டமாகக் கொண்டு போவார்கள். இப்படிப் போவதில், கடைசி வட்டம் முதல் வட்டத்தோடு பொருந்திவிட்டால், காரியம் கைகூடிவிடும் என்பது குறிப்பு.

இந்தக் குறிபார்க்கும் செயலுக்குக் கூடல் இழைத்தல் என்று பெயர். (கூடல் - மணலில் எழுதிய கடைசி வட்டமும் முதல் வட்டமும் ஒன்றாகக் கூடுதல்.)

* * * *

ஒரு பெண் பூக்கொய்து கொண்டிருக்கும்போது, அந்தப் பக்கமாகப் பாண்டியன் சவாரி போக நேர்ந்தது. அவளுக்கு அவன்மேல் காதல் உண்டாய் விட்டது. அவனுக்கும் அப்படியே காதல் உண்டாய் விட்டதென்பதை அவனுடைய கண் பார்வையிலிருந்து தெரிந்துகொண்டாள். காரியம் அதோடு நின்றுவிட்டது. பாண்டியனும் அவ்விடம் விட்டுப் போய்விட்டான். பெண்ணுக்கோ ரொம்ப ஏமாற்றம். என்ன செய்கிறதென்று தெரியவில்லை. இருந்தாலும், தன் உயிர்த் தோழியைக் கூப்பிட்டு, பாண்டியனிடம் தூது போகச் சொல்லுகிறாள். அவளும் இணங்கி, போய் விட்டாள்.

தோழி போய்ச் சிறிது நேரந்தான் ஆயிற்று. ஆனாலும், ஆத்திரம் பொங்கி வருகிறது பெண்ணுக்கு. யாரிடத்தி

லாவது குறி கேட்போமா என்றெல்லாம் தோன்றுகிறது. வெளியில்த் தெரிந்தால் ஆபத்தாயிற்றே என்றும் எண்ணு கிருள். அப்போது ஒரு யுக்தி தோன்றுகிறது :

மணலில்ப் போய் உட்காருகிருள். மணலை ஒழுங்கு படுத்திக் கொள்ளுகிருள். கூடல் இழைத்துப் பார்ப்போம் என்று, கண்ணை மூடிக்கொண்டு, மணலைப் பார்த்தே நயந்து பேசியவண்ணமாய்ச் சொல்லுகிருள். கூடலை இழைத்து விட்டாளோ : அதுதான் இல்லை.

கூடல்ப் பெருமானைக்
கூடலார் கோமானைக்
கூடப் பெறுவேனேல்க்
கூ(டு)என்று, - கூடல்
இழைப்பாள்போல்க் காட்டி
இழையா(து) இருக்கும்,
பிழைப்பில்ப் பிழைபாக்(கு)
அறிந்து ! (20)

---

கூடல்ப் பெருமானை - மதுரை நகருக்கு அதிபதியை. கூடலார் கோமானை - கூடல் நகரில் உள்ளவர்கள் பாராட்டும் பாண்டியனை. கூடு என்று - வளையத்தைக் கருதி, வளையமே நீ கூடுவாய் எனச் சொல்லிக்கொண்டு. கூடல் இழைப்பாள்போல் காட்டி - கூடல் இழைக்கிற பாவனையில் கண்ணை மூடிக்கொண்டும் வலதுகை ஆள் காட்டி விரலை மணலைத்தொடாமல் அதற்குமேலே நீட்டிக்கொண்டும், செயலற்று உட்கார்ந்திருக்கிருள். உட்கார்ந்திருக்கும் பாவனை இது. இழையா திருக்கும் - வளையம் போடுவதான கருத்தே இல்லை. காரணம் : பிழைப் பில்ப் பிழை பாக்கு அறிந்து - வளையம் கூடாமல் தவறிவிட்டால் அது காரணமாக ஏற்படும் மோசத்தை யறிந்து ; பாண்டியன் வரமாட்

டான் என்பதுதான் மோசம். பிழைப்பில் - தவறிவிட்டால். பிழை பாக்கு - தவறுதல், அதாவது காரியம் பிழைபாட்டுக்கு உள்ளாதல். (வே பாக்கு = வேகுதல் - என்பது போல.)

குறிப்பு :—பாட்டே ஒரு மயக்கத்திலிருந்து உண்டானது; காதல் நாயகனைக் கூடவேண்டுமென்ற ஆசை மயக்கத்திலிருந்து உண்டானது. அந்தக் கூடல் (அணைதல்) முதல் இரண்டடியிலும் தொனித்துக் கொண்டேயிருக்கிறது. கூடல் என்ற வார்த்தை மடங்கி மடங்கி வருவது காரணமாக மயக்க பாவம் ஒன்று உண்டாகிறது.

சிற்பத்துக்கும் ஓவியத்துக்கும் லக்ஷியமான பாடல் இது.

# 1

காதல்க் கவியென்ருல் சாமானியக் காதல் உணர்ச்சிகளை எடுத்துச் சொன்னுல்ப் போதாது. மேல் நாட்டுக் கவிதைகள் அனேகம் இந்தப் பாங்கிலேயே இருந்துவிடும். உயர்ந்த கவிஞர்களோ, காதல் காரணமாக உண்டான ஒரு வெறியைக் கண்டு அதிசயித்து, அந்த வெறியிலிருந்தே கவியை எழச் செய்வார்கள். அத்தகைய கவியொன்றை இப்போது பார்க்கப் போகிருேம்.

*  *  *  *

உறையூருக்கு வடக்கே, ஏதோ பத்து மைல் தூரத்தில் ஒரு சிறு ஊர். அந்த ஊரிலுள்ள ஒரு பெண் உறையூருக்கு வந்து போவது வழக்கம். வந்தால், காவேரியில் குளிப்பாள். தண்ணீரிலுள்ள வாளை மீன்கள் கரையில் மெள்ள மெள்ள ஏறி, அகப்பட்ட இரையைக் கவ்விக்கொண்டு பிறழ்ந்து, தண்ணீருக்குள் மறுபடியும் விழுந்துகொள்ளும். இந்த வளத்தையெல்லாம் பார்த்து அனுபவித்தவள் அவள். இந்த வளமான இடத்தில் ஒரு நாள் சோழமன்னன் நீராட வந்தான். அவனைப் பார்த்துக் காதல் கொண்டுவிட்டாள் பெண். பிறகு தன் ஊருக்கும் போய்விட்டாள். அங்கேயுள்ள குளத்துக்கு ஒரு நாள் நீராடப் போனுள் அவள். வட திசையிலிருந்து பறந்துவந்த ஒரு நாரை குளத்தில் இறங்கி நின்றது. பெண் எண்ணுகிருள் : நாரை சிறிது நேரத்தில் குளத்தைவிட்டுக் கிளம்பித் தெற்கேயுள்ள உறையூருக்குப் போகும், என்பதாக.

காதல் வெறி அவளை எப்படிப் பேசச் செய்கிறது பாருங்கள்.

செங்கால் மடநாராய்!
தென்உறந்தை சேறியேல்,
நின்கால்மேல் வைப்பன்என்
கையிரண்டும் - வன்பால்க்
கரைஉரிஞ்சி மீன்பிறழும்
காவிரிநீர் நாடற்(கு), -
உரையாயோ யான்உற்ற
நோய். (21)

## 2

பூர்வகாலத்திலும் அரசர்கள் கனத்த மதில் எடுத்துக் கோட்டைகளை அமைத்து வந்தார்கள். எதிரிகள் மதிலைக் கடந்து எளிதில் உள்ளே பிரவேசித்துவிட முடியாது. அத் தகைய கோட்டைக்கு, மதிலை ஒட்டி ஒரு பெரிய வாசல்.

---

மடநாராய் - அழகிய நாரையே. தென் உறந்தை சேறியேல் - தெற்கேயுள்ள உறையூருக்குச் செல்வாயானால். நின் கால்மேல் வைப் பன் என் கையிரண்டும் - உன் காலைப்பிடித்துக் கும்பிடத் தயார். வன் பால் கரை உரிஞ்சி மீன் பிறழும் - தேகத்தின் வலிமை காரணமாகக் கரையின்மேல் உராய்ந்து, உராய்ந்து ஏறிய மீனானது மறுபடியும் நீரில் விழுந்து விடுகிற. வன்பு - மீனின் தேகக்கொழுப்பு. காவிரி நீர் நாடற்கு - சோழனுக்கு. நோய் - காதல் நோய்.

குறிப்பு :—காதலுற்ற பெண் தோழியைப் பார்த்துப் பேசினாள் என்றால் சாமான்ய உண்மை. நாரையைப் பார்த்துப் பேசினாள் என் னும்போது, பிரமாதமான வேகம் உண்டாய்விடுகிறது காதலுக்கு. காதல் வெறியை நன்றாய் எடுத்துக் காட்டுகிறது செய்யுள். காதலும் சோகமும் கலந்த சாயல், கவியில் அபூர்வமாய் அமைந்திருக்கிறது. கடைசி அடியை இரண்டு மூன்று தரம் பாடிப் பார்த்தால் பாவம் தெரிந்துவிடும்.

அந்த வாசலை அடைப்பதற்கு, பளுவான பெரிய மரக்கதவும் உண்டு. இந்தக் கதவுக்கு வெளிப்புறத்தில் ஈட்டிகளால் அமைத்த இரும்புக் கதவும் ஒன்று உண்டு. அந்தக் கதவு களை அடைத்துவைத்து, நல்ல பாதுகாப்பில் இருப்பார்கள் பகையரசர்கள். அடைத்துவைத்து என்ன செய்ய ? சோழனுடைய போர் யானையானது, ஒரே பாய்ச்சலாகப் போய், ஈட்டிக்கதவை (அயில்க்கதவம்) முறித்து எறிந்துவிட்டுப் பிறகு மரக்கதவின்மேல் (எயில்க்கதவம்) பாயும். பாய்ந்ததும், அந்தக் கதவு நிலையை விட்டுக் கழன்று யானையின் நீண்ட தந்தத்தில் மாட்டிக்கொள்ளும்.

கதவை உதறி எறியப் பார்க்கும் யானை. கதவு கழலாது. யானைக்கு ஆங்காரம் பிறந்து வேகமாய் ஓடும். பார்ப்பதற்கு இந்தக் காட்சி அருமையான காட்சியல்லவா ? கவிஞர் அனுபவித்ததை, எப்படி என்று பார்ப்போம்.

அயில்க்கதவம் பாய்ந்துழக்கி,
ஆற்றல்சால் மன்னர்
எயில்க்கதவம் கோத்(து)எடுத்த
கோட்டால், - பனிக்கடலுள்ப்
பாய்தோய்ந்த நாவாய்போல்த்
தோன்றுமே, - எங்கோமான்
காய்சினவேல்க் கிள்ளி
களிறு ! (22)

---

அயில்க் கதவம் பாய்ந்து உழக்கி - ஈட்டிகளால் செய்த கதவின் மேல்ப் பாய்ந்து அதைச் சின்னு பின்னப்படுத்தி. ஆற்றல் சால் மன்னர் - போரில் வல்ல பகையரசரது. எயில்க் கதவம் - மதிலோடு ஒட்டிய கோட்டை வாசல்க் கதவை. கோத்தெடுத்த கோட்டால் - தந்தத்தினால்த் தூக்கியுள்ள காரணமாக. பாய் தோய்ந்த நாவாய் போல்-பாய்

## 3

இளம் பெண்களின் நிறத்தை நம்மவர்கள் ரொம்பவும் அனுபவித்திருக்கிறார்கள். மாந்தளிர் போலுள்ளது நிறம் என்பார்கள். (மாந்தளிர்களிலும் பல ரகம். பழுத்த பசுமையிலிருந்து இருண்ட சிவப்பு வரைக்கும் உண்டு.) எல்லா நிறங்களும், இளமையையும் ஆரோக்கியத்தையும் எடுத்துக் காட்டி மேனிக்கு அழகு செய்வன. காதல்நோய் ஏற்பட்டு விட்டால், இந்த அழகெல்லாம் நீங்கி, மேனி வெளுத்துப் போய்விடும் - ஏக்கம் காரணமாகத்தான். வெளுத்துப் போன நிறத்தைப் பசப்பு என்றும் பசலை என்றும் சொல்லுவார்கள்.

* * * *

பாண்டியன் பவனி வர, அவனது மார்பைக் கண்டு அதன் அழகில் ஈடுபட்ட பெண், தோழியிடம் சொல்லுகிறாள் :

“ நம்முடைய பாண்டியனோ வெகு தீரமான போர் யானைகளை வைத்திருக்கிறான். இதைக் கவனியாது, அனுபவம் இல்லாத இளவரசன்தானே என்று இகழ்ந்த வண்ணமாய், ஏதோ சில அரசர்கள் பாண்டியனுக்குப் பணியாதபடி போர் செய்ய ஆரம்பித்தார்கள். அந்த மௌட்டிகத்தால் என்ன நேர்ந்தது தெரியுமா, தோழி? நாட்டை இழந்தார்கள் அந்த அரசர்கள். ஆனால், நான் அப்படி யொன்றும் மௌட்டிகம் காட்டவில்லை. இருந்தாலும் எனக்கு நேர்ந்ததைக் கேள் :”

---

கட்டிய மரக்கலம்போல, எங்கோமான் காய் சின வேல்க் கிள்ளி - எங்கள் அரசன், ஒளி வீசும் வேல் ஏந்திய சோழனது.

குறிப்பு :—கோட்டை வாசல்க் கதவை யானை தூக்கிக்கொண்டு ஓடினால் பாய் விரித்த கப்பல்போல்த் தோன்றும் என்பது ரொம்பவும் உண்மை. யானையின் போர்த்திறத்தை அழகான பாவத்தில் வைத்துக் காட்டுகிறது செய்யுள்.

களியானைத் தென்னன்,
இளங்கோஎன்(று) எள்ளிப்
பணியாரே தம்பார்
இழக்க, - அணிஆகம்
கைதொழு தேனும்
இழக்கோ ?- நறுமாவின்
கொய்தளிர் அன்ன
நிறம். (23)

4

இடிச் சத்தத்தைக் கேட்டால் நமக்குப் பயம். வேறு எத்தனையோ பிராணிகளுக்கும் பயம். ஆனால், பாம்புக்குத் தான் சகிக்க முடியாது என்று சொல்லுகிறார்கள். மின்னலுல் இடியும் இருந்துவிட்டால், பாம்பின் உடல் அப்படியும் இப்படியும் புரண்டு துடிக்கும். துன்ப உணர்ச்சியைக் காட்டுவதற்குப் பாம்பின் நீண்ட உடலின் நெளிவையும் துடிப்பையும் எடுத்துக் கூறுவார்கள் நம்மவர்கள்.

* * * *

பாண்டியன் தாக்கிய பகையரசர், நாட்டை விட்டு, மலை ஏறி, மலையுச்சியுங் கடந்து, மனுஷ சஞ்சார மில்லாத

---

களியானைத் தென்னன் - மதயானைகளைப் போருக்காக வைத்துள்ள பாண்டியன். எள்ளி - இகழ்ந்து. தம் பார் இழக்க - தமது ராஜ்யத்தை இழக்க. அணி ஆகம் கை தொழுதேனும் - பாண்டியனது அழகிய மார்பை ரொம்பவும் பணிவாகத் தொழுதவளாகிய நானும் - இழக்கோ - இழக்கவா வேணும்! நறுமாவின் கொய்தளிர் அன்ன நிறம் - மாந்தளிர்கள் கொய்துவிட்ட மாதிரி அழகாகத் தொங்கும்; அந்த மாந்தளிர் போன்ற என்னுடைய நிறத்தை.

குறிப்பு: ஏது, சம்பந்தமில்லாமல் பேசுகிறாளே, என்று கேட்கத் தோன்றும். ஆனால், காதல் வெறியில் இதுவும் சொல்லத் தோன்றும். இதற்கு மேலும் சொல்லத் தோன்றும். பாண்டியன் தன்னிடம் வந்த மாதிரியாகவும், ஏதோ ஒரு மந்திரசக்தியால் நிறத்தை மாற்றிவிட்டதாகவும் தோன்றுகிறது. எல்லாம் பகல் கனவில்க் கண்டதுதான்.

புறச்சரிவில்ப் போய் ஒளித்துக் கொள்வார்கள். மனுஷர் களைக் கண்டு பயந்து ஓடுகிற காட்டுப் பசுக்கள், அந்தச் சரிவு களில் சாதாரணமாய் நடமாடித் திரியும். அவ்வளவு மனுஷ சஞ்சாரமில்லாத மலங்காடு, பகையரசர்ஒளிந்திருக்கும் சரிவு.

பாண்டியனுடைய இடி முரசம் என்னும் பெரிய முரசை வெற்றிக் கொண்டாட்டம் சம்பந்தமாக ஒலிக்கச் செய்வார் கள். அந்த ஒலியானது மலைச்சரிவுகளில் ஒவ்வொன்ருக எதிரொலித்துக்கொண்டே போய், பகையரசர்கள் ஒளித் திருந்த இடத்தில் வந்து சேரும்; பகையரசர்கள் காதில் விழும். அவர்கள் நிலைமை எப்படி இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்!

**செ**ருவெங் கதிர்வேல்ச்
சினவெம்போர் மாறன்
உருமின் இடிமுர(சு)
ஆர்ப்ப - அரவுறழ்ந்(து),
ஆமா உகளும்
அணிவரையின் அப்புறத்து
வேமால் வயி(று)எரிய
வேந்து. (24)

5

குழந்தையின் பாவனை யுலகம், மிக விரிந்தது. எத் தனையோ விஷயங்களைப் புதிது புதிதாக, உற்பத்திபண்ணி

---

செருவெங் கதிர்வேல் – போர் செய்வதற்கான கூரிய வேல். சின வெம் போர் மாறன் - கோபாவேசத்தோடு போர் செய்யும் பாண் டியனது. உருமின் இடி முரசு ஆர்ப்ப - இடியைப் போலவே இடி முரசம் சப்திக்க; உரும் - இடி. அரவு உறழ்ந்து - இடியைக் கேட்ட பாம்பையே போல. ஆமா உகளும் - காட்டுப் பசுவானது சாமானிய மாய் உலவித் திரிகிற. வேமால் வயிறு எரிய வேந்து - பகையரசர் வயிறு எரிய மனம் புழுங்குவார்கள்; பாம்பையே போல.

அனுபவிக்கும் தன்மையது. அந்தப் பாவனை உலகத்தில் நிகழும் விஷயங்கள் அனேகமாய் நமக்கு விளங்காது. விளங்கிவிட்டால் நாம் பாக்கியசாலிகள்.

சில வேளைகளில் குழந்தையின் பாவனை உலகத்துக் குள் காதலும் போய்ச் சேர்ந்துவிடும். போய்ச் சேர்ந்து விட்டால், விளங்குவது இன்னும் கஷ்டம். கஷ்டமாயிருந் தாலும் கவிஞர் விளக்கி விடுவார்.

*  *  *  *

செவிலித் தாயர்கள், தாங்கள் வளர்த்தெடுக்கும் பெண்களோடு உல்லாசமாய் விளையாடுவார்கள், பேசுவார் கள். பெண்களும், அவர்களிடத்தில் தங்கள் அந்தரங்க விஷயங்களை யெல்லாம் சொல்லுவார்கள். சொல்லப் பின் வாங்குவதில்லை. ஒரு பெண் தன் செவிலித் தாயர்களிடம் ஒரு புகார் சொல்லுகிருள் : பாண்டியன் வந்து தன்னுடைய வளையல்களைத் திருடிக் கொண்டு போய் விட்டான் என்ப தாக.

தளையவிழும் பூங்கோதைத்
　　தாயரே ! ஆவி
களையினும், என் கைதிறந்து
　　காட்டேன் - வளைகொடுபோம்
வன்கண்ணன் வாள்மாறன் ; ,
　　மால்யானை தன்னுடன்வந்(து),
என்கண் புகுந்தான்
　　இரா ! (25)

---

தளையவிழும் பூங்கோதைத் தாயரே - இதழ் விரிந்த பூமாலை சூடிய செவிலித் தாயர்களே. ஆவி களையினும் - என் உயிர் போனு

லும் சரி. வன்கண்ணன் - இரக்கமில்லாதவன். வாள்மாறன் - வாள் ஏந்திய பாண்டியன். மால் யானை தன்னுடன் வந்து - மத யானையின்மேல் சவாரி செய்துகொண்டு வந்தான்; அந்த மதயானை யில் ஏறிய வண்ணமாகவே, இரவில் என் கண்ணுக்குள் புகுந்து விட் டான். வளையைக் கொண்டுபோனவன் அகப்பட்டுக் கொண்டான்! இனி அவன் தப்பிக்க முடியாது. கண்ணை மூடிய கையை ஒருநாளும் திறக்கமாட்டேன்.

குறிப்பு:—குழந்தை இதயத்துக்குள்க் காதல் புகுந்து விட்டதாக விஷயம். பருவம் அடைந்த பெண்கள் தங்கள் விரகதாபத்தை வெளி யிடவும், அதைக்கேட்ட சிறு பெண் இந்த விதமாகச் சொல்லுகிறது என்பது பொருள். அகப்பட்டுக் கொண்டான் கள்ளன்! - என்னும் பாவத்தைச் செய்யுளில்த் தெளிவாய்ப் பார்க்கலாம்.

## 1

ஒரு பெண் பாண்டியன்மீது காதலுற்று அவனை நினைத்துக்கொண்டிருந்தாள். நினைத்துக்கொண்டேயிருந்ததன் காரணமாக, இரவில் தூக்கமே பிடிக்கவில்லை. வெகு நேரங் கழித்து எப்படியோ கண் மூடிற்று. மூடின மாத்திரத்தில், பாண்டியன் படுக்கைப் பக்கம் வந்தான், தன் கையைப் பற்றினன், என்று தோழியிடம் சொல்லுகிருள்.

*ஓராற்ருல் என் கண்*
*இமைபொருந்த, அந்நிலையே*
*கூரார்வேல் மாறன்என்*
*கைப்பற்றத், - தீரா*
*நன(வு)என்(று) எழுந்திருந்தேன் ;*
*நல்வினைஒன்(று) இல்லேன்*
*கனவும் இழந்(து)இருந்த*
*ஆறு !* (26)

## 2

அந்தக் காலத்து அரசர்களுக்குக் குடை பிடிப்பார்கள். (இப்போது கோயில்களில் வைத்திருக்கிற குடை மாதிரி.) வெண்பட்டினல் வேய்ந்திருக்கும். கைப்பிடியாகிய காம்பு

---

ஓராற்ருல் என்கண் இமைபொருந்த - தூக்கம் வராமலேயிருக்க, நெடுநேரங் கழித்து இமைபொருந்த நேர்ந்தது : இமைபொருந்திவிட்டால் உருவெளித் தோற்றங்கள் உண்டாவது சாமான்யம். கூரார் வேல் மாறன் - கூர்மைகொண்ட வேல் ஏந்திய பாண்டியன். தீரா நனவு - கலையாத உறுதியான நனவுதான் என்று. நல்வினை யொன்றில்லேன் - புண்ணியஞ் செய்யாத பாவியாகிய நான். கனவும் இழந்திருந்தவாறு - கனவிலே அனுபவிக்கிற காரியம் ஏதோ தாழ்ந்தது தான். அந்தத் தாழ்ந்த அனுபவமும் கிட்டாது போயிற்று. பார்த்தாயா தோழி !

பொன்னிலைப் பொதிந்திருக்கும். உச்சியில், பொன்னால் செய்த கலசம் ஒன்றிருக்கும். குறுக்களவு ஒரு பாகம் இருக்கும். இந்தக் குடையை ராஜ்ய பரிபாலனத்துக்கு ஒரு அடையாளமாகவும் கருதி வந்தார்கள். அடையாளம் என்ற மாத்திரத்தில் அது எவ்வளவோ விரிந்து போகக் கூடும் – மானச உலகில்.

மந்தரம் காம்பா,
 மணிவிசும்(பு) ஓலையாத்,
திங்கள் அதற்கோர்
 திலதமா: - எங்கணும்
முற்றுநீர் வையம்
 முழுதும் நிழற்றுமே -
கொற்றப்போர்க் கிள்ளி
 குடை. (27)

3

**ப**ண்டைக்காலத்தில், உலகத்தார் எல்லாரும், பாண்டி நாட்டுத் துறைமுகமாயிருந்த கொற்கையை ரொம்ப ரொம்பப் பாராட்டி வந்தார்கள். கொற்கையில் எடுத்த முத்துக்கள் அவ்வளவு சிறந்தனவாய் இருந்தன; வளமாயும் இருந்தன. வேறெங்குமே முத்துக்கள் கிடையாது. கொற்கை

---

மந்தரங் காம்பா - மந்தரகிரி மிக்க உயர்ந்த மலை என்பதாக ஐதிகம்; அதைக் கைப்பிடிக் கோலாகவும். மணி விசும்பு ஓலையா - நக்ஷத்திரங்கள் பிரகாசிக்கும் வானமே குடைக்குரிய கூடாரமாக. திங்கள் அதற்கோர் திலதமா - குடையின்மேல் வைத்துள்ள பொற் கலசம் சந்திரனே ஆக. எங்கணும் - எங்கும் வியாபித்ததாய். முற்று நீர் வையம் - நாலா பக்கமும் கடலால் சூழப்பட்ட உலகம். கொற்றப் போர்க் கிள்ளி குடை - வெற்றியோடு போர் செய்யும் சோழனது குடை. எப்படிக் குடையின் நிழலில் இருப்பவர்களுக்கு வெயிலாலும் மழையாலும் தொந்தரவு இல்லையோ அதுபோலச் சோழனது ஆட்சிக்குள் இருப்பவர்களுக்கு யாதொரு தொந்தரவும் இராது.

யிலோ, வர்த்தகர்கள் முத்தைக் குவியல் குவியலாக வைத்திருந்தார்கள். காஷ்மீரம் காசி முதலான இடங்களிலிருந்தும், ரோமாபுரியிலிருந்தும் சைனுவிலிருந்தும், வர்த்தகர்கள் வந்து, முத்துக்களை விலைக்கு வாங்கிப் போனுர்கள். கொற்கை யென்ருல் முத்துத்தான். முத்து என்ருல்க் கொற்கைதான்.

* * * *

பாண்டியன்மேல்க் காதலுற்ற ஒரு சிறு பெண், கலக்கமுற்று, வீட்டில் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு, கண்ணீர் வடித்த வண்ணமாய் இருக்கிருள். விஷயத்தைச் செவிலித்தாயர்கள் தெரிந்துகொண்டார்கள். ஆனால், அவர்களால் செய்யக்கூடிய காரியம் ஒன்றுமில்லை. இருந்தாலும் பெண்ணின் துயரத்தைப் பார்க்கச் சகிக்க முடியவில்லை. பெண்ணினிடத்தில் அவ்வளவு அனுதாபம் அவர்களுக்கு.

ஒரு செவிலி மற்றச் செவிலியர்களைப் பார்த்துப் பேசுகிருள், - மறைவாய்த்தான்.

இப்பியீன்(று) இட்ட
எறிகதிர் நித்திலம்,
கொற்கையே அல்ல
படுவது, - கொற்கைக்
குருதிவேல் மாறன்
குளிர்சாந்(து) அகலம், -
கருதியார் கண்ணும்
படும். (28)

---

இப்பி ஈன்று இட்ட எறிகதிர்நித்திலம் - சிப்பியிலிருந்து உண்டான நிலவுபோன்ற கிரணங்களை வீசும் முத்துக்கள். கொற்கையே அல்ல படுவது - கொற்கையிலே மாத்திரம் உண்டென்று சொல்லக்கூடாது.

## 4

**உ**லகத்தில் எத்தனையோ பிராணிகள் ஓட்டம் பிடிக்கின்றன. ஓட்டத்தைப் பார்ப்பதில் நமக்கு ஒரு மகிழ்ச்சி. ஒரு பூனை ஓடுகிறது காதை மடக்கிக் கொண்டு. அதில் ஒரு அழகு. குதிரை ஓட்டத்தைப் பார்க்கிறவர்கள் (பந்தயத்துக்குப் போகிறவர்களைத் தள்ளிவிடுவோம்) எத்தனையோ பேர். காதை நிமிர்த்தி வாலையும் தூக்கிக்கொண்டு திமிலையும் அசைத்துக் கொண்டு காளை ஓடுகிற ஓட்டத்தின் அழகைப் பார்க்க, நாமும்கூட ஓடுவோமே என்றுதான் எண்ணத் தோன்றும்.

இனி, கொம்பனாகிய ஒரு பெரிய யானை, ஆவேசத்தோடு ஓடும்போது பார்த்தால், அது தனியான காட்சி. துதிக்கையைச் சுருட்டி நிமிர்த்திக்கொண்டும், தந்தங்களை ஏறிட்ட வண்ணமாய் வைத்துக்கொண்டும், காதுகளை விரித்துக் கொண்டும், அதிவேகமாகக் கால் எட்டிவைத்து ஓடுவதைப் பார்த்தால் நமக்கு அச்சந்தான். ஆனாலும், அந்த ஓட்டத்தின் கம்பீரத்தையும், அழகையும் கண்டு அனுபவியாமல் இருக்கமுடியாது.

**பா**ண்டியனது யானையின் ஓட்டத்தைப் பார்த்து அனுபவிக்கிறார் கவிஞர்.

---

**கொற்கைக் குருதிவேல் மாறன்** - கொற்கைக்கு அதிபதியான, ரத்தம் தோய்ந்த வேல் ஏந்திய பாண்டியனது. **குளிர் சாந்து அகலம்** - குளிர்ந்த சந்தனம் பூசிய மார்பை. **கருதியார் கண்ணும் படும்** - தழுவவேண்டுமென்று கருதிக்கொண்டிருக்கும் காதல்நோயுற்ற பெண்களது கண்களிலும் காணலாம்.

குறிப்பு :—வடித்த கண்ணீர்த் துளிகளை முத்துக்கள் என்று சொன்னதில் ஒரு சோக பாவம். இந்தச் சோகத்தில் ஹாஸ்யச் சாயலும் கலந்து கிடக்கிறது.

தோற்றம் அலைகடல்,
ஓசை புயல்கள்தாம்,
காற்றின் நிமிர்ந்த
செலவிற்றாய்க், - கூற்றும்
குறியெதிர்ப்பை கொள்ளும்
தகைமைத்தே, எங்கோன்
எறிகதிர்வேல் மாறன்
களிறு. (29)

## 5

ஒரு பெண் பவனியில்ப் போன சேர மன்னனது அழகில் ஈடுபட்டுவிட்டாள்; ஆகாரம் நன்றாய் ஏற்கவில்லை; தேகம் மெலிவடைந்து விட்டது; மனசும் நிலை கலங்கிப் போய்விட்டது. இந்த நிலையில், தெரு வழியாக அவள் போகநேர்ந்தது. போகும்போது மற்றப் பெண்களையும் பார்த்தாள். அந்தப் பெண்களும் தன்னைப் போல் மெலி

---

தோற்றம் அலைகடல் - கடல் ஒரே அலையாய் நிமிர்ந்து ஏறிவந்தால் எப்படி யிருக்குமோ, அப்படி யிருக்குமாம் யானையின் தோற்றம். ஓசை புயல்கள் தாம் - ஒலிசெய்தால் மேகத்தின் இடிமுழக்கந்தான். அந்த ஒலிக்குப் பிளிறுதல் என்ற ஒரு தனி வார்த்தை வைத்திருந்தார்கள் மூன் காலத்தில். காற்றின் நிமிர்ந்த செலவிற்றாய் - காற்றைவிட வேகமாய்ச் செல்லக் கூடியதாய். கூற்றும் குறி யெதிர்ப்பை கொள்ளும் தகைமைத்தே - எமனும் யானையினிடம்வந்து, உன்னுடைய கொலைத் தொழிலைக் கொஞ்சம் இரவல் கொடுக்கமாட்டாயா, என்னும்படி யிருக்குமாம் அதனுடைய வீரம். எறிகதிர்வேல் மாறன் களிறு - பிரகாசிக்கும் வேல் ஏந்திய பாண்டியனது யானை. குறியெதிர்ப்பை : ஒரு வார்த்தை. அதன் பொருள், இரவல்.

குறிப்பு :—யானையின் ஓட்டத்தை அப்படியே வருணித்திருக்கிறது. பாடலின் உருவத்தில், அச்சம், அழகு, இரண்டு பாவமும் அருமையாய்க் கலந்திருக்கிறது.

வுற்றவர்களாயும் மனசு கலங்கியவர்களாயும் இருப்பதாகத் தோன்றுகிறது. அவர்கள் பேசிக்கொண்டிருந்தால், மனம் நொந்து பேசுகிறதாகவே தோன்றுகிறது. இந்தச் செய்தியைத் தோழியிடம் சொல்லுகிருள் :

இவன்என் நலங்கவர்ந்த
கள்வன், இவன்எனது
நெஞ்சம் நிறையழித்த
கள்வன்என்(று), - அஞ்சொலாய் !
செல்லும் நெறியெலாம்,
சேரலர்கோக் கோதைக்குச், -
சொல்லும் பழியோ
பெரிது. (30)

---

நலம் - உடல்நலம். நெஞ்சம் நிறையழித்த - மனசை நிலைகுலையச் செய்த, அஞ்சொலாய் - அழகாய்ப் பேசும் தோழியே.

குறிப்பு :—சேரனுக்கு நல்ல பேர் கிடைக்கவேண்டும் என்று, அடடா, என்ன பரிவு !

# 1

**சோ**ழன் பவனி வரும்போது அவனைக் கண்டு விட்டால், பெண்கள்பாடு பெரிய கஷ்டந்தான். அறிவை இழந்து தாறுமாருய் நடப்பார்கள். உடம்பு கெட்டுவிடும். இதையெல்லாம்விட, இல்லாத வம்பெல்லாம் அயலார் பேசுவார்கள். சகிக்கமுடியாத காரியங்கள்தான் எல்லாம். இவ்வளவையும் எண்ணி, தாய் ஒருத்தி, மகளை வீட்டின் உள்க்கட்டில் இருக்கச் செய்து, வாசல்க் கதவையும் அடைத்துவிட்டுப் போய் விட்டாள். சிறிது நேரங்கழித்துச் செவிலித்தாயர் வந்தார்கள். பெண்ணின் ஏக்கத்தைப் பார்த்து ஒருத்தி, "அடடா, உயிராபத்திலல்லவா இருக்கிருள், நம்முடைய பெண்" என்று மற்றச் செவிலியர்களைப் பார்த்துச் சொல்லுகிருள் :

**தி**றந்திடுமின், தீயவை
   பிற்காண்டும் ; மாதர்
இறந்துபடில் ஏதந்தான்
   என்னும் ! - உறந்தையர்கோன்
தண்ணர மார்பின்
   தமிழர் பெருமானைக் -
கண்ணரக் காணக்
   கதவு. (31)

---

திறந்திடுமின் - உடனே திறந்துவிடுங்கள். தீயவை பிற்காண்டும் - கேடாவது ஒன்ருவது ! எல்லாவற்றையும் பின்ருலே பார்த்துக்

## 2

**பா**ண்டியனுடைய அரண்மனை வாசல்த் தெருவில் சிற்றரசர்கள் எத்தனையோ பேர் நிற்கிறார்கள், செலுத்த வேண்டிய கப்பத்தைக் கட்டுவதற்காக. பலநாள் சமயம் பார்த்தும், சமயம் கிடைக்கவில்லை. கெடுவில் கப்பத்தைக் கட்டவில்லையென்று தவறாக எண்ணி அரசன் கோபித்துக் கொண்டால் ஆபத்தாய் விடுமே, என்று நடுங்கியவண்ண மாய் இருக்கிறார்கள். இந்த நிலையில், தெருவின் கோடியில் யானை வருகிறது. அதன்மேல் பாண்டியனது குடையும் பிடித்திருக்கிறது. குடையைப் பார்த்ததும், அரசர்களுக் குள் ஒரு பரபரப்பு உண்டாய்விட்டது. யானையை நோக்கி எல்லாரும் ஓடப் பார்க்கிறார்கள் - பாண்டியன் யானைமேல் வருகிறான், அவனிடம் முறையிடுவோம் என்று. ஆனால், காவலாளர் அவர்களைப் போகாதபடி தடுத்து விடுகிறார்கள். வெறுங் குடைதானே வருகிறது, அரசன் இல்லையே என்று தான் காவலாளர் தடுத்தது. இந்த விஷயம் தெரியாமல் சிற்றரசர் ' ஓ ' என்று கத்துகிறார்கள்.

---

**கொள்ளுவோம். மாதர் இறந்து படில் ஏதம்தான் என்னும் - இவ ளுக்கு உயிர் போகிறதென்றால், பெண்பழி நமக்கு எப்படி வரும் என்று தெரியுமா ? ஏதம் - பழி. உறந்தையர்கோன் - உறையூருக்கு அதிபதி. தண் ஆர மார்பின் - குளிர்ந்த பூமாலை அணிந்த மார்பையுடைய. தமிழர் பெருமானை - தமிழ்க் கவிஞர் சொந்தமாகப் பாராட்டும் சோழனை.**

குறிப்பு :—செவிலியின் தயாளசிந்தை, ' **திறந்திடுமின்** ' **என்று படபடப்பாய்ச் சொல்லுவதிலும். ' கண்ணாரக் காணக் கதவு ' என்று தயங்கிய வண்ணமாய் ஆர்வத்தோடு சொல்லுவதிலும், அழகாய் வெளியாகிறது. நல்ல பாவ உருவங் கொண்ட செய்யுள் இது.**

நிறைமதிபோல் யானைமேல்
நீலத்தார் மாறன்
குடைதோன்ற, ஞாலத்(து)
அரசர், ' திறைகொள்
இறையோ !' எனவந்(து)
இடம்பெறுதல் இன்றி, -
முறையோ ! எனநின்றார்
மொய்த்து. (32)

3

பூர்வ காலத்துக் கதவுகளுக்கு மரக்கட்டையினால்த் தான் தாள். அந்தத் தாளின்கீழ் ஒரு பெரிய வட்டமான துவாரமிருக்கும். அந்தத் துவாரத்தின் வழியாகத்தான் வளைந்த இரும்பை (திறவுகோல்) விட்டு மரத்தாளைத் தள்ளித் திறப்பார்கள்.

*  *  *  *

பவனி வரும் பாண்டியனைப் பார்த்துவிடக் கூடாது என்று, பெண்ணை வீட்டுக்குள் இருக்கச் செய்து கதவை அடைத்துத் தாளையும் இறுக்கிப் போட்டுவிட்டாள் தாய். "கதவைத் திறக்கக்கூடாது. வெளியே எங்கும் போகக்

---

நிறைமதிபோல் - பூர்ண சந்திரன் போல. நீலத்தார் மாறன் குடை தோன்ற - நீலோற்பல மாலையணிந்த பாண்டியனது குடை மாத்திரமே தோன்ற. (யானை மேல் அவன் இல்லாமல்). ஞாலத்து அரசர் - உலகத்திலுள்ள அரசர்கள் எல்லாருமே: ஐம்பத்தாறு தேசத்து அரசர்களுமே. இது பல சிற்றரசர்கள் என்பதைக் குறிக்கும். திறைகொள், இறையோ - கப்பத்தை அங்கீகரித்துக் கொள்வாயாக, எங்கள் மன்னனே. என வந்து இடம் பெறுதல் இன்றி : என்று சொல்லிக்கொண்டு திறை சகிதம் வந்தார்கள். ஆனால், தடுத்தல், நெருக்கடி இவை காரணமாக, முன்னேறிப் போக இடமில்லை. முறையோ என நின்றார் - திறையை வாங்கிக் கொள்ளாமலிருப்பது நியாயந்தானா என்று சொல்லிக்கொண்டு நின்று விட்டார்கள்.

கூடாது. இங்கேயே அடங்கி யிருக்கவேண்டும்" என்றும் மகளைப் பார்த்துச் சொல்லிவிட்டு, பின்கட்டுக்குப் போய் விட்டாள். சிறிது நேரத்தில், பவனி, வீட்டு வாசல்முன் வந்து நின்றது. மகள் என்ன செய்தாள்? கதவண்டை போய் நின்றுகொண்டு, பாண்டியனை நன்றாய்ப் பார்த்து விட்டு எக்களிப்போடிருக்கிறாள். பவனியும் அகன்று விட்டது. கதவு திறந்தாய்விட்டது. அப்போது தோழி வருகிறாள். அவளிடம் சொல்லுகிறாள் :

**காப்படங்கென்(று) அன்னை**
**கடிமனை இல்ச்செறித்(து),**
**யாப்படங்க ஓடி**
**அடைத்தபின், - மாக்கடுங்கோன்**
**நன்னலம் காணக்**
**கதவம் துளைதொட்டார்க்(கு), -**
**என்னைகொல் கைம்மாறு**
**இனி !** (33)

---

**காப்பு அடங்கு** - வெளியே போகக்கூடாது. இங்கேயே இரு. **கடிமனை இல்ச் செறித்து** - பாதுகாப்பான வீட்டுக்குள் இருத்தி. **யாப் படங்க ஓடி அடைத்தபின்** - தாளானது இறுகும்படி அவசர அவசரமாய் ஓடி அடைத்த பின். **மாக்கடுங்கோன்** - பாண்டியனுக்குரிய பெயர்களில் ஒன்று. **நன்னலங் காண** - சிறந்த அழகைக் காணும்படி. **கதவம் துளை தொட்டார்க்கு** - கதவில் துளையை அமைத்தவர்களுக்கு. **என்னை கொல்** - என்ன இருக்கிறது-

குறிப்பு :—கதவிலேயுள்ள துளை திறவுகோலிட்டுத் திறப்பதற்காக ஏற்பட்டது. ஆனால், அந்தப் பெண் என்ன எண்ணுகிறாள்? 'ஐயோ போகட்டும். இந்த அப் பாவிப் பெண் பாண்டியனைத்தான் பார்த்துவிடட்டுமே. என்ன குடிமோசம் போய்விடும்' என்ற எண்ணத்தோடு, தனக்கென்றே துளை செய்ததாக எண்ணுகிறாள். உண்மையும் பாவமும் இந்தச் செய்யுளில் அபூர்வமாக வந்திருக்கிறது. தாய் அடைப்பாள். அதன் பிறகு மகள் பார்க்கவேண்டும் அல்லவா, என்று முன்னமேயே யோசனை செய்து துளை பண்ணியதாக மயக்கம்.

## 4

**பெ**ண்கள் வேடிக்கை பண்ணுவார்கள் குழந்தைகளிடம். 'உனக்கு ஏன் இரண்டு கண் இருக்கிறது? சொல்' என்பார்கள். குழந்தையும் குஷாலாகச் சொல்லும்: உன்னைத் தேட ஒரு கண்; அடுத்த கண் அப்பாவைத் தேட, என்று.

*  *  *  *

**பா**ண்டியனது யானைக்குத் தந்தங்கள் ஏன் இரண்டு என்ற கேள்வி எழுகிறது. அதற்குப் பதில் என்ன என்று பார்க்கலாம்.

**உருவத்தார்த் தென்னவன்**
**ஓங்(கு)எழில் வேழத்(து)**
**இருகோடும் செய்தொழில்**
**எண்ணில்: - ஒருகோ(டு)ஆங்(கு)**
**ஏற்றார் அகலம்**
**உழுமே; மற் றேனையது -**
**மாற்றார் மதில்த்திறக்கு**
**மால். (34)**

---

**உருவத்தார்த் தென்னவன்** - அழகிய மாலையணிந்த பாண்டியன். **ஓங்கு எழில் வேழத்து** - உயர்ந்து கம்பீரமாக உள்ள யானையின். **இரு கோடும் செய்தொழில் எண்ணில்** - இரண்டு தந்தங்களும் செய்கிற தொழிலைப் பார்த்தால். **ஒரு கோடு ஆங்கு ஏற்றார் அகலம் உழும்** - ஒரு தந்தமானது போரில் எதிர்த்தவர்களுடைய மார்பைக் கீறும். **ஏனையது மாற்றார் மதில் திறக்குமால்** - அடுத்த தந்தம் யுத்தத்துக்கு வராமல் கோட்டையை அடைத்துக் கொண்டு உள்ளிருந்த பகையரசரது மதிலை யுடைத்து உள்ளே புகும்.

குறிப்பு:—யானைக்கு இரண்டு கோடுகள் இருப்பதற்குக் காரணம் சொல்லி ஆயிற்று!

## 5

**கா**தலுற்ற ஒரு பெண்ணின்பொருட்டு சேரனிடம் ஒரு தோழி தூது செல்லுகிருள். ஒரு ஹாஸ்யத்துடனும் நயத்துடனும் பேசுகிருள்: "உனக்கு என்னத்துக்கு இந்தக் காரியம்: ஏன் நல்ல பேர் எடுக்கக் கூடாது?" என்பதாக.

**வ**ரைபொரு நீள்மார்ப!
வட்கார் வணக்கும்
நிரைபொரு வேல்மாந்தைக்
கோவே! நிரைவளையார்
தங்கோலம் வவ்வுதல்
ஆமோ: அவர்தாய்மார்
செங்கோலன் அல்லன்
என. (35)

---

வரைபொரு நீள் மார்ப - மலைபோல விசாலமான மார்பையுடைய சேரனே. வட்கார் வணக்கும் - பகைவரை வணங்கச் செய்யவல்ல. நிரைபொரு வேல் மாந்தைக் கோவே - வரிசை வரிசையாக யுத்தத்துக்கென்று வேல்களை வடித்து வைத்திருக்கும் மாந்தை நகருக்கு அதிபதியான சேரனே. நிரைவளையார் தங்கோலம் வவ்வுதல் ஆமோ - வரிசையாக வளையணிந்த பெண்களது உடல் நலமும் அழகும் கெடும்படியாகச் செய்தல் உனக்குப் பொருந்துமா. அவர் தாய்மார் செங்கோலன் அல்லன் என - அந்தப் பெண்களது தாய்மார் உன்னைச் செங்கோலன் அல்லன் என்று சொல்லும்படி வவ்வுதல் ஆமோ. வவ்வுதல் - பறித்தல். அரசனிடத்து வைத்த காதல் காரணமாகப் பெண்களது ஆரோக்கியமும் அழகும் கெட்டன.

# 1

**கொ**ற்கையில் ஒரு தெரு. அந்தத் தெருவில் உள்ளவர்கள் எல்லாரும், அரசனுக்கு அடங்கி நடப்பவர்கள் என்றும், நல்லவர்கள் என்றும், பேர் வாங்கினவர்கள்.

அந்தத் தெரு வழியாகப் பாண்டியன் பவனி வந்தான். ஒரு பெண் அவனைத் தொழுதாள். காதலும் கொண்டு விட்டாள். அது காரணமாகத் தோள்வளையம் கழலும்படி மெலிவடைந்துவிட்டாள். அப்படி மெலிவடையச் செய்தது, அந்தப் பாண்டியன் தானே என்று, தொழியிடம் குறை கூறுகிருள் :

**வழுவில்எம் வீதியுள்**
**மாறன் வருங்கால்த்**
**தொழுதேனைத் தோள்நலமும்**
**கொண்டான், - இமிழ்திரைக்**
**கார்க்கடல்க் கொற்கையார்**
**காவலனும் தானேயால் ;-**
**யார்க்(கு)இடுகோ பூசல்**
**இனி !** (36)

---

**வழுவில் எம் வீதியுள்** - யாதொரு குற்றமும் செய்யாத எங்கள் வீதியில். **மாறன்** - பாண்டியன். **தோள் நலமும் கொண்டான்** - கைவளை, தோள் வளையம் இவைகளோடு, தோளின் அழகையும் திருடிக் கொண்டான். **இமிழ் திரைக் கார்க் கடல்** - சப்திக்கிற கருங் கடலுக்கு அருகேயுள்ள. **கொற்கையார் காவலனும் தானேயால்** - கொற்கையிலுள்ள ஜனங்களைப் பாதுகாத்து நீதி செலுத்துபவனும் அவனேயாம், ரொம்ப அழகு! **யார்க்கிடுகோ பூசல் இனி** - யாரிடத்தில் போய்க் குறையைச் சொல்லி முறையிட, கள்வனும் காவலனும் ஒரே ஆசாமியாக இருக்கும்போது ?

## 2

அறுவடையான காலம் என்றால், தனியான உற்சாகம். அது ஒரு கொண்டாட்டமே. பூர்வ காலத்தில் தமிழ்நாட்டில் பூமாதேவி கொடுத்த வளத்தை எப்படியெல்லாமோ அனுபவித்தார்கள். நெல்க்களத்தில் நெல்லை உயர்ந்த போராகக் கட்டி, அதன் உச்சியில் ஏறி நின்று, உழவர்களில் காவலாளனுயுள்ளவன், 'நாவலோ' 'நாவலோ' என்று உற்சாகமாக நாலா பக்கத்துக்கும் கேட்கும்படி ஆரவாரிப்பான். இதற்கு 'நாளோதை' என்று பெயர். (நாளோதையாவது, நாள் செய்வதற்கான மங்கல வாழ்த்தொலி.) ஒரு வெற்றி கிடைத்த தான உணர்ச்சியே இந்தக் கொண்டாட்டத்திலிருந்தது.

**கா**வல் உழவர்
  களத்(து)அகத்துப் போர்ஏறி,
நாவலோஓ! என்றிசைக்கும்
  நாளோதை, - காவலன் தன்
கொல்யானை மேலிருந்து
  கூற்றிசைத்தால்ப் போலுமே,-
நல்யானைக் கோக்கிள்ளி
  நாடு. (37)

---

'நாவலோ' என்பது பூர்வ காலத்திலிருந்த ஒரு வாழ்த்தொலி; ஏதோ ஒரு வார்த்தையிலிருந்து (நாள் வாழ்கவோ?) மருவி, இந்த உருவம் வந்திருக்கவேண்டும். காவலன் தன் - சோழனது. கொல்யானை - போருக்கான கொம்பன். கூற்று இசைத்தால் - போர்க்களத்தில் எதிரே எட்டி நிற்கும் பகைவர்களை நோக்கிச் சொல்லும் வீர வார்த்தைகளை மிக்க ஆரவாரத்தோடு சொல்லுவார்கள். கூற்று - வீர வார்த்தை; எதிரிகளை நோக்கிச் சொல்ல வேண்டிய சொல். நல்யானைக் கோக்கிள்ளி - யானைப் படை அதிகமாயுள்ள சோழன்.

குறிப்பு :— நாட்டு வளத்தைச் சொல்ல வேண்டிய இடத்தில், வீரத்தையும் சொல்லுகிறது செய்யுள்.

## 3

**ப**ண்டைக் காலத்தில் பாதைவசதிகள் கிடையாது. அதனால், சவாரிக்காகக் குதிரை வண்டிகளோ மாட்டுவண்டிகளோ அவ்வளவாக இல்லைதான். போருக்கு ஆண்யானையையும் சவாரிக்குப் பெண் யானையையும் வைத்துக்கொண்டார்கள் அரசர்கள்.

* * * *

**பா**ண்டியன் சில வேளைகளில் உலாவ வருவான். பெண் யானைமேல்தான் வருவான். அதுவும், அவன் நடத்தியதற்கேற்ப வேகமாய்ப் போகும். பாண்டியன் மேல் காதலுற்ற பெண் ஒருத்திக்கு அந்த யானையின் மேல்க் கோபம் உண்டாய்விட்டது.

பெண்யானையைப் பார்த்துப் பேசுகிறாள்: "எலா பிடியே, உன்மேல் இருந்துகொண்டு பாண்டியன் சவாரி போகிறான். நானும் பார்க்கிறேன். படபடவென்று நடக்கிறாயே! இது ஒரு பெண்ணுக்கு அழகா? பார்த்தவர்கள் என்ன சொல்லமாட்டார்கள்!"

**எலாஅ மடப்பிடியே!**
**எங்கூடல்க் கோமான்,**
**புலாஅல் நெடுநல்வேல்**
**மாறன், - உலா அங்காலப்**
**பைய நடக்கவும்**
**தேற்றாயால்; நின்பெண்மை -**
**ஐயப் படுவ(து)**
**உடைத்து.** (38)

---

எலா - பெண்டுகளைப் பார்த்துச் சொல்லும் விளி; ஏ பிள்ளாய் என்பது மருவி எலா என வந்தது. மடப் பிடியே - இளம் பெண் யானையே. கூடல்க் கோமான் - மதுரைக்கு அரசன். புலால் நெடு நல்வேல் மாறன் - மாமிசம் தோய்ந்த வேல் ஏந்திய பாண்டியன்.

## 4

ஒரு மலைப் பிரதேசம். அங்கே ஒரு பெரிய கோயில். உட்பிராகாரம் என்றும் வெளிப்பிராகாரம் என்றும் பிராகாரங்கள். அவைகளுக்கு மதில்கள். பிராகாரங்களில் சுற்றுத் தேவதைகளுக்கான பல கோயில்கள். மதிலுக்கு வெளியில் பல மண்டபங்கள்.

கோயில் அனேகமாய் மனிதசஞ்சாரமே இல்லாத காட்டுக்குள் இருந்தது. அபூர்வமாகத்தான் பக்தர்களும் கோயில் அதிகாரிகளும் அங்கே போய்வருவது. ஏதோ பூசாரி, மணியம், தொழிலாளி என்று வேலை பார்ப்பவர்கள் இருந்தார்கள்.

பிராகாரங்களும் வெளிப்புறங்களும் ஒரேபடியாய்க் காடும் செடியும் கொடியுமாய் அடர்ந்திருந்தது. எத்தனையோ விதமான காட்டுச் செடிகளும் காட்டுக் கொடிகளும், நெருங்கிச் சன்னல் பின்னலாய்க் கிடந்தன. அது காரணமாக, மண்டபங்கள் இருந்த இடம் தெரியவில்லை. சுற்றுக்கோயில்கள் இருந்த இடமும் தெரியவில்லை.

ஏன் இப்படிக் காடு அடர்ந்திருக்கிறது என்று மணியத்தைக் கேட்டபோது, “இங்கே மனித சஞ்சாரம் கிடையாது. நாலு வருஷத்துக்குமுன் காட்டைத் தெளித்தோம். நாலாயிர ரூபாய் செலவழிந்தது. ஆறு மாதத்துக்குள் பழைய

---

உலாங்கால் - உலாவ வரும்போது. பைய நடக்கவும் தேற்றாயால் - பெண்ணாய்ப் பிறந்தவள் மெல்ல நடக்கவேண்டும் என்பதைத் தெரிந்து கொள்ளவில்லையே. நின் பெண்மை ஐயப்படுவதுடைத்து - நீ பெண்ணாவது ஒன்றாவது என்று உன்னைப் பார்த்துச் சொல்லிவிடுவார்கள். யானை மெல்ல நடந்தால், பாண்டியனது அழகைச் சாவகாசமாகப் பார்த்து அனுபவிக்கலாம் என்பது நோக்கம்.

குறிப்பு ;— எலா அ, புலாஅல், உலா அங்கால் என்றவற்றிலுள்ள அளபெடைகள், பிடி சாவகாசமாகப் போக வேண்டும் என்று உள்ளத்திலுள்ள விருப்பத்தைத் தொனிக்கச் செய்கின்றன.

படியே காடு அடர்ந்து விட்டது' என்று சொன்னார். அவர் சொன்னது உண்மைதான்.

பூர்வத்தில் காடு அடர்ந்ததை இனிப் பார்ப்போம்.

*  *  *  *

ஒரு பிரதேசத்தில் ஆனை அறுகம்புல் ஒருஆள் உயரத்துக்கு ஓங்கி வளர்ந்திருந்தது. ஊனுக்கொடியானது (காட்டுச்சுரை) அடர்த்தியாய்ப் படர்ந்துகிடந்தது. இவைகளுக்குள், வேளைச்செடி நிமிர்ந்து பூத்து, வெள்ளைவெளேர் என்று கிடந்தது. விசாரித்தால், அந்த இடத்தில் பல வீடுகள் கட்டடங்கள் உள்ள ஊர் முன்பு இருந்ததாகத் தெரிய வரும்.

**வேரறுகை பம்பிச்,**
**சுரைபடர்ந்து, வேளைபூத்(து),**
**ஊரறிய லாகா**
**கிடந்தனவே - போரின்**
**முகையவிழ்தார்க் கோதை,**
**முசிறியார் கோமான்**
**நகையிலைவேல் காய்த்தினர்**
**நாடு.** (39)

## 5

**பா**ண்டியனை ஒரு பெண் பார்க்கிறாள், காதல் மயக்கத்துக்கு உள்ளாகிவிடுகிறாள். இதைத் தோழியறிந்து,

---

வேரறுகை - ஓங்கி வளரும் ஆனை அறுகம் புல். பம்பி - நெருங்கி வளர்ந்து. சுரை - காட்டுச் சுரை. வேளை - தை வேளை. முகை அவிழ் தார்க் கோதை - மொட்டுக்கள் அப்போதுதான் விரிந்துள்ள மாலை சூடிய சேரன். முசிறியார் கோமான் - முசிறித் துறைமுகத்து அதிபதியின். நகையிலை வேல் காய்த்தினர் நாடு - பிரகாசம் பொருந்திய இலைபோன்ற வேலாயுதத்தைப் போருக்குத் தூண்டிய பகைவருடைய நாடானது - ஊரறியலாகா கிடந்தனவே.

பாண்டியனிடம் சொல்லி இருவரும் சந்திப்பதற்கு ஏற்பாடு செய்கிருள். செய்துவிட்டு, நாயகியிடம் வந்து சொல்லவும் செய்கிருள். நாயகிக்கு இப்போது ஒரே கஷ்டமாய்ப் போய் விட்டது.

**நா**ணுக்கால் பெண்மை
நலன் அழியும், முன் நின்று
காணுக்கால் கைவளையுஞ்,
சோருமால், - காணேன் நான்
வண்(டு)எவ்வம் தீர்தார்
வயமான் வழுதியைக்
கண்(டு)எவ்வம் தீர்வதோர்
ஆறு. (40)

---

நாணுக்கால் பெண்மை நலன் அழியும் - பாண்டியனைச் சந்திக்கும் போது நாணுதபடி அவனோடு பேசுவேனுனல் அது எவ்வளவு அவமானத்துக்கு உள்ளான காரியம்; பெண் தன்மைக்கு அடுத்ததா? முன் நின்று காணுக்கால் கைவளையும் சோருமால் - அவனைச் சந்திக்க வேண்டாம், பார்க்க வேண்டாம் என்று இருந்து விட்டாலோ, இல்லாத அவஸ்தைக்கு உள்ளாகி விடுகிறேன். மெய்மறந்து வளையல் போன இடம் கூடத் தெரியாமல்ப் போய் விடுகிறது. வண்டு எவ்வம் தீர்தார் - வண்டுகளினுடைய பசியைத் தீர்க்கும்படியான அவ்வளவு தேனூறும் மாலையணிந்த. வயமான்வழுதியை - அழகிய குதிரையில் சவாரிசெய்யும் பாண்டியனை. கண்டு எவ்வம் தீர்வதோர் ஆறு - சந்தித்துச் சோர்வை நீக்குவதற்கான வழியை—காணேன் நான்.

குறிப்பு:—'கைவளையும் சோருமால்' என்று சொல்லுவதில் எவ்வளவோ சோகம் பொதிந்து கிடக்கிறது. 'காணேன் நான்' என்பது தனிச்சீரில் வருவதனுல், திகைப்பு பாவத்தைப் பாட்டுக்குள்ளும் நம்முடைய இதயத்துக்குள்ளும் நிரப்பிவிடுகிறது.

## 1

**பா**ண்டியனிடத்து மோகவெறி கொண்ட பெண் தன்னுடைய யௌவனத்தையும் அழகையும் பார்த்து வியக்கிருள். ஆனாலும் நொந்துகொள்ளுகிருள் :

***வா**ரிய தென்னை*
*வருகுரும்பை வாய்த்தனபோல்*
*ஏரிய ஆயினும்*
*என்செய்யும், - கூரிய*
*கோட்டானைத் தென்னன்*
*குளிர்சாந்(து)அணி அகலக்*
*கோட்டுமண் கொள்ளா*
*முலை.* (41)

## 2

**இ**ன்றைக்கும் வெள்ளைக்காரர் ஒரு கிரியை அனுஷ்டிக்கப் பார்க்கிறோம். விருந்து மண்டபத்தின் முகப்புக்குப் போனதும், விருந்தாளிகளை வீட்டுக்காரரும், முன்னதாக வந்த விருந்தாளிகளுமே வரவேற்கிருர்கள். கையில் மது வார்த்துள்ள கிண்ணங்களைக் கொண்டு வரவேற்கிருர்கள். வரவேற்கும் முறை: ஒருவர் கிண்ணத்தை மற்றொருவர் கிண்ணத்தோடு லகுவாகத் தட்டி ஓசை செய்வதுதான்.

---

வாரிய தென்னை - மட்டையும் ஓலையும் வளமாய்ப் பரந்து விரிந்துள்ள தென்னை. ஏரிய ஆயினும்-அழகுவாய்ந்தனவாய் இருந்தாலும். என் செய்யும் - என்ன பிரயோசனம். கூரிய கோட்டு ஆனைத் தென்னன் - கூர்மையான தந்தங்களையுடைய யானையின்மேல் அலங்காரமாகச் சவாரிசெய்யும் பாண்டியன். குளிர் சாந்து அணியகலக் கோட்டு மண் - அழகிய மார்பிலே பூசிய குளிர்ந்த சந்தனத்தின்மீது அழகுபட எழுதியுள்ள குங்குமச் சாந்தை. கொள்ளா- எடுத்துக்கொள்ளாத.

ஆதியில் ஒருவர் கிண்ணத்திலிருந்து மற்றவர் கிண்ணத்துக்கு மதுவை ஊற்றினர்கள். அப்படி ஊற்றுதல் நின்று போய், இப்போது கிண்ணங்களைத் தட்டிச் சப்திக்கும் கிரியையாக வந்திருக்கிறது.

* * *

**பூ**ர்வ காலத்தில் தமிழ் நாட்டுப் போர்வீரர்கள் மது அருந்தி வந்தார்கள். அதை ஒரு கிரியையாகவும் நடத்தி வந்தார்கள்.

ஒருவருக்கொருவர் மதுவைப் பரிமாறி மரியாதை செய்வார்கள். வாங்கிக்கொண்டவர்கள் பக்தியுடனே ஏற்றுக்கொள்வார்கள். ஏற்று மதுவைக் கொஞ்சம் விரலால் தொட்டுப் பூமியில் தெளிப்பார்கள் – பூமி தேவிக்கு அர்ப்பணமாக. இந்தக் கிரியையை வீதிகளில் இருந்தும் நின்றும் படை படையான வீரர்கள் செய்வார்கள். அது காரணமாக, தெரு ஈரமாகப் போய்விடும்.

களிகள் களிகட்கு
        நீட்டத், தம் கையால்க்,
களிகள் விதிர்த் திட்ட
        செங்கள்த் - துளிகலந்(து),
ஓங்கெழில் யானை
        மிதிப்பச்சே ருயிற்றே,—
பூம்புனல் வஞ்சி
        அகம். (42)

---

களிகள் - கள்ளை அருந்தும் வீரர். களிகட்கு - சகாக்களாகிய வீரர்களுக்கு. நீட்ட - மதுக் கிண்ணத்தை உபசாரமாக நீட்ட. தம் கையால்க் களிகள் விதிர்த்திட்ட - வாங்கிய வீரர்கள் தம் கையால்த் தொட்டு நிலத்தில் தெளித்த, செங்கள் துளி கலந்து - மதுவின் எண்ணிறந்த துளிகள் எல்லாம் சேர்ந்து. ஓங்கு எழில் யானை மிதிப்ப - மேலே சொன்ன வீரர்கள் சென்றபிறகு யானைப்படை தெருவில் நடக்கவும். சேருயிற்றே வஞ்சி அகம் - சேறாய்ப் போய்விட்டது சேரனது

## 3

தமிழ் நாட்டில் தீர்த்தங்கள் என்று சமயத்தோடு ஒட்டிச் சமுத்திரத்தையும் ஆற்றையும் அனுபவிப்பதுண்டு. ராமேசுவரம், திருச்செந்தூர், கன்னியாகுமரி, திருக்குற்றாலம் இவைகள் எல்லாம் புனிதமான தீர்த்தங்கள். இதைப் போலவே அரசர்களை ஒட்டி ஆறுகளையும் சமுத்திரத்தையுமே பாராட்டி வந்தார்கள். காவிரியைச் சோழனோடு ஒட்டுவார்கள். வைகையைப் பாண்டியனோடு ஒட்டுவார்கள். வைகையிலுள்ள தண்ணீர் பாண்டியனது மயந்தான் என்று காதல் வெறிகொண்ட ஒரு பெண் சொன்னால் வியப்பில்லை. பெண்களுக்குள் இந்தப் பாவனையும் உணர்ச்சியும் சாமானியமாகத் தெரிந்திருக்கிறது.

* * *

காதலி வெகு நேரம் வைகையில் நீராடிக் கொண்டிருக்க, ஒருநாள், செவிலியர்கள் 'ஏன் கரை ஏறவில்லை?'

---

வஞ்சிநகர், துளிதுளியாய்க் கலந்து தெரு சேறுகிறதென்றால், வீரர்களது தொகை எவ்வளவு மிகுதியாய் இருந்திருக்கவேண்டும்! பூம்புனல் - நீர்வளம் பொருந்திய வஞ்சி - தற்காலத்துக் கொச்சி; கொச்சியில் இன்றைக்கும் தோணிக்கு வஞ்சி என்று பெயர். வஞ்சி வளங்கொண்ட தீவுகளாய் நகரம் அமைந்தது பற்றி வஞ்சி நகரம் என்று பெயர் வந்தது.

குறிப்பு—செங்களத் துளிகலந்து யானை மிதிப்பச் சேறுயிற்றே — எந்த இடம் தெரியுமா? யோசித்துப்பார்; நான் சொல்லுகிறேன் கேள் :

" பூம்புனல் வஞ்சி
அகம் !"

அதிசய பாவம் அருமையாக வந்திருக்கிறது.

என்று கேட்கிறார்கள். காதலி நினைக்கிறாள்: 'லஜ்ஜையில்லாமல் பாண்டியனது மேனியைத் தழுவுகிறேன் என்றல்லவா கண்டிக்கிறாள்' என்று. அடுத்த நாள் இது ஞாபகத்துக்கு வர, தண்ணீரில் இறங்காமல் கரையிலேயே உட்கார்ந்திருக்கிறாள். அப்போதும் செவிலியர்கள் கேட்கிறார்கள்: 'ஏன் தண்ணீரில் இறங்கவில்லை?' என்று. "இப்போது தண்ணீரில் இறங்க லஜ்ஜையாய் இருக்கிறது; இதைக் குறித்தல்லவா செவிலித் தாயர்கள் ஏளனமாய்ப் பேசுகிறார்கள்" என்று இதையெல்லாம் தோழியிடம் சொல்லுகிறாள் காதலி.

**ஏற்பக் குடைந்(து) ஆடில்**
**ஏசுவர், அல்லாக்கால்**
**மாற்றி யிருந்தாள்**
**என உரைப்பர்; - வேல்க்கண்ணாய்!**
**கொல்யானை மாறன்**
**குளிர்புனல் வையைநீர்**
**எல்லாம் எனக்கோர்**
**இடர்!** (43)

---

ஏற்பக் குடைந்து ஆடில் - நன்றாய்த் திளைத்து நீராடினால். மாற்றி இருந்தாள் - தன் காதலை மறைக்கப் பார்க்கிறாள். பாண்டியனது வைகை நீர் குளித்தாலும் பொல்லாதது. குளியாமலிருந்தாலும் பொல்லாதது.

குறிப்பு:—காதல் வெறியை வைகைநீரில் வைத்துக் காட்டியது மிக உயர்ந்த பாவனைப் பண்பைச் சேர்ந்தது. பேயாழ்வார் பாசுரம்

## 4

வட நாடுகளில் பெண்கள் தலையில் பூச்சூடுவது கிடையாது. தமிழ்நாட்டில் பூச்சூடுவது ஒரு தனியான நாகரிகம். மல்லிகையினால் மாலை கட்டிக் கருங்குழல் மேல்ச் சூடுவது அழகுதான். அதைவிட அழகு, வேறு பட்ட நிறங்கொண்ட புஷ்பங்களால் மாலைகட்டித் தலையில் அணிவது. பச்சைக் கதிர், நீலோற்பலம், சண்பகம், செவ்வாம்பல் இதழ்கள், கஸ்தூரி, அரளி, மல்லிகை இவைகளைக் கொண்டு மாலை கட்டிக் கூந்தலில் அணிந்தால் அது தனியான அழகு தான்.

சோழ மன்னனது தலைநகரமான உறந்தைக்குக் காலை நேரத்தில்ப் போனால் என்ன காட்சியைப் பார்ப்போம்:

---

**ஒன்றில் காதல்வெறி எப்படித் தண்ணீரோடு கலக்கிறது என்பது தெரியவரும்:**

**வெற்பென்று வேங்கடம்**
**பாடும், வியன் துழாய்**
**கற்பென்று சூடும்**
**கருங்குழல்மேல் ; மற்பொன்ற**
**நீண்டதோள் மால்கிடந்த**
**நீராடு வான், காதல்**
**பூண்டநாள் எல்லாம்**
**புகும்.**

**கற்பு - முல்லைமலர். மற்பொன்ற நீண்ட தோள் மால் - அசுரர்களது போர் எல்லாம் தொலையும்படி அவ்வளவாக நீண்ட தோளையுடைய திருமால். மால் கிடந்த நீர் ஆடுவான் - திருமால் தோய்ந்து கிடக்கும் நீரில் திளைக்கும் பொருட்டு. காதல் பூண்ட நாள் எல்லாம் - காதல் வெறிகொண்ட நாளெல்லாம். புகும் - ஓடிப் பாய்வாள்.**

காவிரியில் நீராடிவிட்டுவரும் பெண்கள் தெருக்களில் கதம்ப மாலைகளை வாங்கிக்கொண்டு போகிறார்கள். மாலை விற்பவர்கள், ஏதேனும் வாடியிருக்கிறதா என்று சோதித்துப் பார்த்து, வாடிய புஷ்பங்களை வீசி எறிகிறார்கள். வீசி எறிந்த புஷ்பங்கள் பஞ்சவர்ணத்தோடு, ஏதோ ஒரு ஒழுங்குபட்டு வளைந்து கிடக்கின்றன தெருவில்.

**மாலை விலைபகர்வார்**
**கிள்ளிக் களைந்தபூச்**
**சால மிகுவதோர்**
**தன்மைத்தாய்க், - காலையே,**
**வில்ப்பயில் வானகம்**
**போலுமே, - வேல்வளவன்**
**பொற்பார் உறந்தை**
**அகம்.** (44)

## 5

**கா**தல் வெறிகொண்ட ஒரு பெண்ணின் மனப்பாங்கை நாம் எளிதில் உணர்ந்துகொள்ள முடியாது.

பொதுவாக ஒருவரைப்பற்றிப் பிறர் குறைவாகப் பேசுகிறது (அலர் தூற்றல், ஆங்கிலத்தில் ஸ்காண்டல்) என்றால்

---

மாலை விலை பகர்வார் - கதம்ப மாலை விற்பவர்கள். கிள்ளிக் களைந்த பூவே தொகுதி தொகுதியாய்க் கிடக்கின்றன. அப்படியானால் மாலைகளும் பூவும் எவ்வளவு மிகுதியாய் இருக்கவேண்டும்! காலையே - காலையிலேயே பெண்கள் தங்கள் தலையை அலங்கரித்துக் கொள்வார்கள் என்பது குறிப்பு. வில்ப்பயில் வானகம் போலுமே - இந்திர வில்லிட்ட வானம்போல் இருக்கும். பொற்பார் உறந்தை - அழகிய உறையூர்.

வருத்தத்தையே கொடுக்கும். ஆனால், காதல் விஷயமாகப் பிறர் தூற்றும்போது திருப்தியே உண்டாகிறது. காரணம், சாமான்யமாக ஒருவருக்குக் கிட்டாத பெருமை தனக்குக் கிட்டிவிட்டதாக எண்ணி எக்களிப்பு அடைவதுதான்.

பட்டம் ஒன்றுமே இல்லாதவர்களுக்கு விலாசம் எழுதும்போது ராவ்பகதூர் திவான்பகதூர் என்று தவறுதலாகப் பட்டம் கட்டி எழுதினால், சில விலாசதார்களுக்கு அதில் ஒரு சந்தோஷம் உண்டாவதுபோல.

* * * *

**ப**வனி போகும் சேரனைக் கண்ட பெண் ஒருத்தி காதல் வெறிக்கு உள்ளாகி விடுகிறாள். இதைத் தெரிந்த அன்னை அடுத்த நாள் பவனி போகும்போது, பெண்ணை வீட்டுக்குள் வைத்துக் கதவை அடைத்து விடுகிறாள். 'கதவை அடைத்தது ரொம்ப அழகாயிருக்கிறது!' என்று பெண் தோழியிடம் சொல்லுகிறாள்.

**கடல்த் தானைக் கோதையைக்**
**காண்கொடாள், வீணில்**
**அடைத்தாள் தனிக்கதவம்**
**அன்னை, அடைக்குமேல்,**
**ஆயிழையாய் ! என்னை**
**அவன்மேல் எடுத்துரைப்பார் -**
**வாயும் அடைக்குமோ**
**தான் !** (45)

---

கடல்த் தானைக் கோதையை - கடல்போன்ற வீரர் படையைக் கொண்ட சேரனை. காண்கொடாள் - பார்க்கக் கூடாதென்று. வீணில்

அடைத்தாள் தனிக்கதவம் அன்னை - தெருவுக்கு ஒரு கதவுதான், அதை அடைத்து விட்டாள் தாய். அடைத்ததில் என்ன பிரயோசனமோ தெரியவில்லை. அடைக்குமேல் - கதவை அடைக்கமுடியுந் தான். ஆயிழையாய் - தோழியே. என்னை அவன் மேல் எடுத்துரைப்பார் - என்னையும் சேரமன்னனையும் சம்பந்தித்து வெறுமனே வம்புப் பேசுகிறவர்களது. இந்தக் கதவை அடைத்த காரணமாக என்னைப் பற்றி வம்பு பேசமாட்டார்கள் என்று எங்கே ஏற்படுகிறது! என்பது செய்யுளின் கருத்து.

குறிப்பு :—எக்களிப்பு பாவம் வெகு அழகாய் வந்திருக்கிறது : "வாயும் அடைக்குமோ தான்!"

# 1

ஆதிகாலத்தில் வளையல்களைச் சங்கினால் செய்தார்கள். சங்குகளை வட்ட வட்டமாக அரிந்து, நகாசு வேலைகளும் செய்து, கையில் அணிந்துகொள்ளுவார்கள் பெண்கள். வளையல்கள் எல்லாம் கையில் இளக்கமாகவே நிற்கும். ஜாக்கிரதையுடன் அணிந்திருத்தல் வேண்டும். மெய்மறந்திருக்க நேர்ந்தால், கழன்று விழுந்து உடைந்து விடும்.

*　　*　　*　　*

ஒரு காதலி, பாண்டியனது வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள். கொஞ்சம் தாமசம் ஆய்விட்டது. அவளுடைய ஆத்திரத்தில், வராமல் போய் விடுவானோ என்று எண்ணி, உள்ளமும் உடலும் சோர்ந்துவிடுகின்றன. கை வளையல்கள் நெகிழ்ந்து விழுகிற சமயமாய் இருக்கிறது. அந்தத் தருணத்தில், பாண்டியன் வருகிறான் என்ற குறிப்பைச் சங்கநாதம் தெரிவிக்கிறது. காதலிக்கு உள்ளமும் உடலும் பூரித்துவிடுகிறது. வளையல்கள் கீழே விழவில்லை. உடையாமல் தப்பிவிட்டன. கையிலுள்ள சங்கு வளையல்களுக்கு உதவி, வேறொரு சங்கினால் அல்லவா கிடைத்தது !

செய்யார் பிறர்எனி னும்
செய்வர் தமர்எனும்சொல்,
மெய்யாதல் கண்டேன்,
விளங்கிழாய் ! கையார்
வரிவளை நின்றன, -
வையையார் கோமான்
புரிவளை போந்(து) இயம்பக்
கேட்டு. (46)

## 2

நம்மவரில்ச் சிலர், பாஷைகள் சம்பந்தமாக எப்படி யெப்படி எல்லாமோ பேசுகிறார்கள். இதர பாஷையில் ஏதோ வீரமிருக்கிற தென்றும், தமிழில் வீரம் இல்லை யென்றும், வேண்டாத விதாதங்களை எழுப்புகிறார்கள்.

உலகத்தில் எங்குமே அரசியல்நிலை ஒரு வகையாய்த் தான் இருந்துவந்திருக்கிறது. அதற்கு ஆயிரக்கணக்கான

---

செய்யார் பிறர் எனினும் செய்வர் தமர் - உலகத்தார் எல்லாரும் உதவிசெய்ய மறுத்தபோதிலும், உறவினர் என்போர் எப்படியும் உதவி புரிவார்கள் என்பது வழக்கு. மெய்யாதல் கண்டேன் - அந்த வழக்கின் உண்மையை இப்போது நன்றாகக் கண்டுகொண்டேன். விளங்கு இழாய் - ஒளி பொருந்திய ஆபரணமணிந்த தோழியே. கையார் வரி வளை நின்றன - கையிலுள்ள நகாசுவேலை செய்த வளையல்கள் நெகிழ்ந்து விழாதபடி நின்றுவிட்டன ! புரிவளை போந்து இயம்பக் கேட்டு - திருகிய சங்கின் ஒலிவந்த காரணமாக.

குறிப்பு :—பாண்டியன் வந்து விட்டான், வளையல்களே, நழுவி விழுந்து உடைந்து போகாதேயுங்கள் என்று வளையல்கள் கேட்கும்படியாகச் சங்கு ஒலித்ததாகப் பாவனை.

காரணங்களுண்டு. பாஷையினால் அந்த நிலை வந்ததென்று சொல்லுதல் எந்தவிதத்திலும் ஒவ்வாதது.

அருமையான தாமரை மலர் ஒன்று தடாகத்தில் பூத்து விளங்கிக் கொண்டிருக்கலாம். அதை ஒரு பிராணியோ மனுஷனோ கொய்து கசக்கி எறிந்துவிடலாம். அது காரணமாக, தாமரைப் பூ ஒன்றுக்கும் உதவாதது, தன்னை எதிர்க்க வந்த பிராணியையோ மனுஷனையோ ஒன்றும் செய்ய இயலாத தாமரையை ஒழித்துவிடவேண்டும் என்று சொன்னால் பொருந்துமா? தமிழ்ப் பாஷையானது தனித்த வளம், வேகம், எல்லாம் ஆயிரக்கணக்கான வருஷமாகப் படைத்துவந்திருக்கிறது. அது, தமிழ் மக்களுக்கு அருமையான மணத்தை ஊட்டி உள்ளத்தைக் களிக்கச் செய்ய வல்லது: தமிழ்ப் பாஷையினிடத்தில் சகல நயங்களுமிருக்கின்றன: வீர பாவமும் ஒப்பற்றதாய் இருக்கிறது. இதயத்தை ஒட்டிக் கவியைப் பார்ப்போமானால் வீரதத்துவம் நம்முடைய இதயத்துக்குள் ஏறுகிறது என்பது தெரியவரும்; தமிழ்ப் பண்பை உணர்ந்தவர்களுக்குத் தெரியவரும்.

* * * *

முத்தொள்ளாயிர ஆசிரியர் பாண்டி நாட்டை நன்றாய்ச் சுற்றிப் பார்த்து அனுபவித்தவர், பாண்டியனது பக்கத்திலேயே இருப்பவர். அவன் சபாமண்டபத்தில் அனேக காரியங்களைப் பார்த்திருக்கிறார். அதில் ஒன்று, பொன் முடிச்சுகள் அடிக்கடி அவனிடம் வருவதுதான். (தங்கக் கனிகளிலுள்ள தங்கமெல்லாம் அரசனுக்கே உரியது, அந்தக் காலத்திலும்.) பல திசைகளிலிருந்தும் பொன் முடிச்சுகள் வந்துகொண்டிருந்தன. 'ஏது, மண் வெட்டி கொண்டு எந்த நிலத்தில் போட்டாலும் அது தங்கக் கனியாய் அல்லவா இருக்கிறது!' என்று வியக்கிறார் புலவர். "பார் படுப செம்பொன்!" பூமியில் கிடப்பதெல்லாம் பொன்

போலிருக்கிறதே என்று தங்கக் கனிகளின் வளத்தை எடுத்துப் பேசுகிருர்.

ஊர் என்றிருந்தால் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழை அனுபவித்துக் கொண்டிருக்கிருர்கள்.

பாண்டியனது சமுத்திரம் என்ருல் வளையல்கள் செய்வதற்கான சங்கின் குவியல்கள்தான்; கொஞ்சம் ஆழத்தில் முழுகினுலோ, கைக்கு வருவது முத்துக்கள்தான், என்றெல்லாம் வியக்கிருர்.

பார்படுப செம்பொன்,
பதிபடுப முத்தமிழ்,
நீர்படுப வெண்சங்கும்
நித்திலமும், - சாரல்
மலைபடுப யானை,
வயமாறன் கூர்வேல்த் -
தலைபடுப தார்வேந்தர்
மார்பு! (47)

---

பதி படுப முத்தமிழ் - ஊர்களில் காணக்கிடப்பது முத்தமிழைப் பரிபாலிப்பதுதான். நிர்படுப - சமுத்திரத்தில் காணக் கிடப்பது. நித்திலம் - முத்து. சாரல் மலை படுப யானை - வளமான மலைச்சாரல்களில்க் காண்பது யானைக் கூட்டங்கள். கூர் வேல்த் தலை படுப-கூர்மையான வேல் முனையில்க் காண்பது. தார் வேந்தர் மார்பு - பகையரசர்களது மாலை யணிந்த மார்பு. பாண்டியனது வீரவேல் பகையரசர்களது மார்பில் ஊடுருவி நிற்கும் வீரக் காட்சியைச் சொல்ல நேர்ந்தது.

குறிப்பு :—பாண்டியனது வீரச் செயலைக் காட்டி யிருக்கிற பாவம் மிகவும் அருமையானது. வீர பாவத்தைக் காட்டுவதற்குத் தமிழ்ப் பாஷை கவிஞர்களுக்கு எவ்வளவாக ஒத்துழைக்கும் என்பதைச் செய்யுள் சந்தேகத்துக்கு இடமில்லாமல் காட்டுகிறது.

## 3

**கா**தல்வெறியில் எந்த வஸ்துவையும் தன்னைப்போல் ஒரு பெண்ணாகவே கருதிப் பேசத் தோன்றும்.

சோழ மன்னன் ஏறிவரும் பெண் யானையைத் தன்னைப் போல் ஒரு பெண் எனவே கருதுகிறாள் ஒருத்தி. ஊருக்குள் எல்லாருமே பார்க்கும்படி, சிறிதும் லஜ்ஜை யில்லாமல், இந்தப் பெண் யானை எப்படி நடந்து வருகிறது என்று அதிசயிக்கிறாள். ஒன்றும் விளங்கவில்லை அவளுக்கு.

**நீள்நீலத் தார்வளவன்**
**நின்மேலான் ஆகவும்,**
**நாணாதே என்றும்**
**நடத்தியால், - நீள்நீலம்**
**கண் தன்மை கொண்(டு)அலரும்**
**காவிரி நீர்நாட்டுப்,**
**பெண் தன்மை அல்ல,**
**பிடி!** (48)

---

நீள் நீலத் தார் வளவன் - வளமாய் நீண்ட இதழ்கொண்ட நீலோற்பல மாலை யணிந்த சோழன். நின்மேலான் ஆகவும் - உன்மேல் ஏறியிருக்கவும், நாணாதே என்றும் நடத்தியதால் - யாதொரு லஜ்ஜையு மில்லாமல் தினம் தினம் நடந்து வருகிறாய். நீள் நீலம் கண் தன்மை கொண்டு அலரும் - நீலோற்பல மலர்கள் பெண்களின் கண்ணைப்போல அலர்ந்த. பெண் தன்மை அல்ல - இந்த நாட்டில் எத்தனையோ காரியங்களைப் பார்த்திருக்கிறேன் உன் விஷயம் எனக்கு விளங்கவில்லை, சரி சரி, உன்னிடம் பெண்ணுக்கான உணர்ச்சியே இல்லை. பிடி - பிடியே!

## 4

பூர்வ காலத்தில் யுத்தம் அடிக்கடி நடந்துகொண்டே இருந்தது. அதற்குச் சரியான படை, யானைப் படைதான். அக்காலத்து மக்கள் தற்காப்புப்பற்றிப் போரைப் பாராட்டி வந்தார்கள்; போருக்குரிய யானையையும் ரொம்பவும் பாராட்டி அனுபவித்து வந்தார்கள். போர்யானையின் நடையே அவர்களுக்கு அற்புதமாய் இருந்தது; ஒரு வெறி கொண்டே அதைப் பார்த்தார்கள். கவிஞர், சோழமன்னனது யானையின் நடைவேகத்தைப் பார்த்து அனுபவிக்கிறார். கவிதா உள்ளத்தில் நிகழ்கிற யானையின் கதியைப் பார்க்கிறோம்.

ஒரு காலைக் காஞ்சிபுரத்தில் வைத்தது, அடுத்த கால் எங்கே வைத்தது தெரியுமா? நீர்வளம் பொருந்திய தஞ்சை நகரத்தில். தஞ்சைக்குப் பிறகு எங்கே கால் வைக்கிறது என்பதைப் பார்ப்போம்.

**கச்சி ஒருகால்**
**மிதியா, ஒருகாலால்த்**
**தத்துநீர்த் தண் தஞ்சை**
**தான்மிதியாப், பிற்றையும்**
**ஈழம் ஒருகால்**
**மிதியா வருமே, நம் -**
**கோழியர்கோக் கிள்ளி**
**களிறு !** (49)

---

*தத்து நீர்த் தண் தஞ்சை* - தண்ணீர் பொங்கி நிற்கும் குளிர்ந்த தஞ்சை நகரம். *பிற்றையும்* - மேலும். *ஈழம்* - ஈழநாடு, இலங்கை. *கோழி* - உறையூர்.

## 5

ஒருபெண் பூங்காவனத்தில் சோழனைக் கண்டு காதல் வெறி கொண்டுவிடுகிருள். எத்தனையோ கஷ்டத்துக்கும் உள்ளாகிவிடுகிருள். "அடடா, நாம் செய்தது பிசகுதான். குற்றத்துக்காக அரசன் தண்டனை விதிப்பதும் முறைதான். ஆனல், குற்றம் செய்தவர்கள் அல்லவா தண்டனைக்கு உள்ளாக வேண்டும்? அதைவிட்டு, யாதொரு சம்பந்தமுமில்லாத ஒன்றைத் தண்டிக்கலாமா ?" என்று தோழியிடம் ஒரு மயக்கத்தில் சொல்லுகிருள் :

**கண்டன உண் கண்,**
**கலந்தன நல்நெஞ்சம்,**
**தண்டப்படுவ**
**தடமென்தோள் கண்டாய் !**
**உலாஅ மறுகின்**
**உறையூர் வளவற் (கு),**
**எலாஅம் முறைகிடந்த**
**ஆறு !** (50)

---

**கண்டன உண் கண்** - மா வடுவை உட்கொண்டது போல் நிறைந்த கண்கள் பார்த்தனுபவித்தன, பிசகு தான். **கலந்தன நல் நெஞ்சம்** - உள்ளமோ பல தடவை பல வேறு வகையாய் அவனேடு குலாவிற்று, அதுவும் குற்றந்தான். **தண்டப்படுவ தட மென் தோள்** - ஆனல் தண்டிக்கப்படுவது வளமான மெல்லிய தோள்கள் ; தோள்கள் அனுபவித்ததுண்டோ ? கிடையாது. **கண்டாய்** - பார்த்தாயா தோழி ! **உலாஅ மறுகின் உறையூர்** - பவனி போவதற்காக அகலமாயும் அழகாயும் அமைந்த வீதிகளையுடைய உறையூரை ஆளும். **வளவற்கு** - சோழன் சம்பந்தப்பட்டமட்டில். **எலா அம் முறை கிடந்த ஆறு** - எவ்வளவு முறை பிறந்தாலும், எல்லாம் நீதிதான் ! வெகு அழகு !

குறிப்பு:—ஆகாரம் ஏற்காததனுல் உடல் மெலிந்து போய் விட்டது. ஆனுல், பவனி வரும்போது கண் நன்ருய்ப் பார்க்கிறது. பகல்க் கனவாக உள்ளமும் நன்ருய்க் குலாவுகிறது. இவைகளுக்கு ஒரு குறைவு மில்லே. ஆனுல், தோள்கள் மெலிந்துவிட்டன. தோள்கள் மெலிந்துவிட்டன என்பதை, அரசன் தண்டனைக்கு உள்ளாக்கினுன் என்று எண்ணுவதில், குழந்தைகளின் பாவனைகளும் காதல்வெறியும், ஒன்ருய்க் கலந்து கிடக்கின்றன.

## 1

**சோ**ழன்மேல்க் காதலுற்ற ஒரு பெண் செயலழிந்து கிடக்கிருள். இந்த நிலேயில் ஒரு பகற்கனவு: சோழன் வந்து தன் ஆடையைப் பறித்துக்கொண்டு ஓடிவிட்டதாக. ' இது அவனுடைய செங்கோன்மைக்கு அடுக்குமா ?' என்று நினேக்கிருள். மேலும் கோபம் கொள்வதாகத் தனக்குள்ளே சொல்லிக்கொள்ளுகிருள்: ' இந்த அக்கிரமத்தை எல்லாருக்கும் தெரியும்படி விளம்பரப்படுத்திவிடுகிறேன், இருக்கட்டும்!' என்று:

**தானேகொண்(டு) ஓடுவ(து)**
**ஆயின், தன் செங்கோன்மை**
**சேனே அறியக்**
**கிளவேனே யானும் !**
**பிடிவீசும் வண் தடக்கைப்**
**பெய்தண் தார்க் கிள்ளி -**
**நெடுவீதி நேர்பட்ட**
**போது.** (51)

---

தானே **கொண்டு ஓடுவதாயின்** - ஆடையைப் பறித்துக் கொண்டு அரசனே ஓடுவானயின். **தன் செங்கோன்மை** - செங்கோல் செலுத்தும் அவனுடைய இந்த அழகிய முறையை. **சேனே அறியக் கிளவேனே** - பவனி போகும்போது அவனுடைய படை அணிவகுத்துப் போகும்; அவ்வளவு பேருக்கும் தெரியும்படி விளம்பரப் படுத்திவிடுகிறேன்! **யானும்** - அரசன் ஒரு அக்கிரமம் பண்ணினல் நானும் அவனே அவமானப்படுத்தி விடுகிறேன். **பிடி வீசும் வண் தடக்கை** - பிடிபிடியாக யாசகர்களுக்குப் பொன்னே வாரியிறைக்கும் வள்ளன்மையுள்ள நீண்ட கை. **பெய் தண்தார்** - மலர் செறிந்த மாலேயணிந்த.

குறிப்பு:—ஆத்திரம், ஹாஸ்யம், இகழ்ச்சி எல்லாம் கலந்த பாவம்.

## 2

ஒரு சிறு சம்பாஷணை.

தோழி: நம் சோழன் யானை மிக அருமையானது.

நாயகி: என்ன அருமை அதற்கு வந்துவிட்டது ?

தோழி: அதனுடைய அழகே அழகு.

நாயகி: அழகாவது ஒன்றுவது? ஒரு தந்தம் முறிந்து அரைகுறையாக இருக்கிறது - அது ஒரு அழகா? நகமெல்லாம் தேய்ந்து சொத்தை போலிருக்கிறது. இது ஒரு அழகா? இந்த அலங்கோலத்தினால் அல்லவா பெண் யானைக்கு முன்னேவர நாணி, யானைக்கூடத்துக்கு வெளியே நிற்கிறது அது? சோழனுக்கு யானை வாய்த்த அழகுதான் என்ன!

நாயகியின் ஹாஸ்யத்தைப் பாட்டில் பார்க்கலாம்.

**கொடிமதில் பாய்ந்திற்ற**
**கோடும், அரசர்**
**முடிஇடறித் தேய்ந்த**
**நகமும், - பிடிமுன்பு**
**பொல்லாமை நாணிப்**
**புறங்கடை நின்றதே!**
**கல்லார்தோள் கிள்ளி**
**களிறு!** (52)

---

கொடி மதில் பாய்ந்து இற்ற கோடும் - கொடிகள் கட்டிய பகைவரது கல்மதிலில் பாய்ந்து, அது காரணமாக முறிந்த தந்தங்களும். முடி இடறித் தேய்ந்த நகமும் - யுத்தகளத்தில் பகையரசர்களது கிரீடங்களை இடறி, அதுகாரணமாகத் தேய்ந்துபோன நகமும். பிடி முன்பு பொல்லாமை நாணி - இவை காரணமாகப் பெண்யானையின் முன்பு நிற்பதற்கு நாணி. புறங்கடை நின்றதே - கூடத்துக்கு வெளியே

3

ஆடி மாசத்தில் சென்னையிலோ, வேறு எந்தக் கீழ் சமுத்திரக்கரையிலோ, நாம் போய் நிற்கவேண்டும். காலை ஆறு மணிக்குப் போய் நிற்க வேண்டும். சமுத்திரத்தி லிருந்து அலைகள் உன்னி உன்னி வரும். வேகமாய் அடிக் கிற மேல்காற்ருே அந்த அலைகளைத் தாக்கி மடங்கச் செய் யும். அப்படி மடங்கும்போது, கிழக்கேயிருந்து வரும் சூரிய னது ஒளியால், அந்தத் தகடுபட்ட அலைகளில், மீன்கள் அப்படியும் இப்படியும் பாய்ந்தோடுவதைத் தெளிவாய்ப் பார்க்கலாம். சில வேளைகளில் அலை நெடுகிலுமே மீன்கள் பிறழப் பார்க்கலாம்.

*　　*　　*　　*

சோழன் தன்னுடைய குதிரைமேல் ஏறிப் பவனி வருகிறுன். ஜன்னல்களிலிருந்து பெண்கள் அவனைப் பார்க்கி ருர்கள். அவர்கள் மனசில் ஒரு கொந்தளிப்பே உண்டாய் விடுகிறது. அவ்வளவு கொந்தளிப்பும் அவர்கள் கண்களில் தெரிகிறது: மயக்கத்தோடு வெறித்துப் பார்க்கிற கண்கள் சில. கடைக்கண்ணுல் சோர்ந்து பார்க்கிற கண்கள் சில. அப்படியும் இப்படியுமாகச் சலனப்பட்டுப் பாயும் கண் கள் சில.

---

நின்றது. கல் ஆர் தோள்க்கிள்ளி - கல்லை ஒத்த தோள் கொண்ட சோழனது.

குறிப்பு:—வியப்பையும் காதலையும் இழிவில் வைத்துச் சொல் வதில் ஹாஸ்யம். யானையின் வீரத்தையும் சோழன் அழகையும் ஒன் ருகப் பாராட்டியிருக்கிறது.

சுடரிலைவேல்ச் சோழன், தன்
பாடலம் ஏறிப்
படர்தந்தான் பைந்தொடியார்
காண ; தொடர்புடைய
நீல அலையில்க்
கயல்போல்ப் பிறழுமே, -
சாலேக வாயில்தொறும்
கண் ! (53)

## 4

ஒரு அரசன் பாண்டியனைக் கோபமூட்டிவிட்டான் : வேலெடுத்துப் போர் செய்யும்படியாகக் கோபமூட்டிவிட்டான். பகையரசன், போரில் எல்லாவற்றையும் இழந்து விட்டான். ரொம்பப் பரிதாபமான நிலைக்கு வந்ததுபற்றி, பாண்டியனது மன்னிப்பைப் பெற என்ன செய்யலாம் என்று வினவுகிறான். பாண்டியனது மனப்பாங்கைத் தெரிந்த ஒருவன் வழிசொல்லுகிறான் :

"பகையரசனது மனைவியானவள், விஷயம் தெரியாத தன் பாலகனைக் கூட்டிக்கொண்டுபோய், பாண்டியன்முன் நிறுத்தி, அவனது காலில் விழுந்து கண்ணீரினால் அவன் காலைக் கழுவ வேண்டும். இதுதான் வழி."

---

பாடலம் ஏறி - பாடலம் என்ற குதிரைமேல் ஏறி. படர் தந்தான் - பவனி போனான். பைந்தொடியார் காண - பெண்கள் காண்பதற்கு வாய்ப்பாக. சாலேக வாயில் தொறும் - எல்லா ஜன்னல்கள் வாயிலாகவும்.

குறிப்பு :—கண்களின் அபூர்வ பாவங்களை எடுத்துக் காட்டும் பொருட்டுச் செய்யுளில், கண் என்ற சொல்லை மகுடமாகத் தனித்து ஏற்றிவைத்திருக்கிறது.

தொழில்தேற்ருப் பாலகனை
முன்நிறீஇப் பின்நின்(று),
அழல்இலைவேல் காய்த்திஞர்
பெண்டிர், கழல்அடைந்து
மண்நீத்தல் என்ப, -
வயங்குதார் மாமாறன்
கண்நீத்தல் தீர்க்கும்
மருந்து. (54)

## 5

அரசன் என்பவன் குடிகள் எல்லாரையும் காக்கும் பொறுப்புடையவன். எல்லாரையும் காத்து ஒருவரைமாத்திரம் காவாமலிருந்தால் அது சரியாகுமா? நாலு பிள்ளைகள் என்றிருந்தால், எல்லாருக்கும் பாரபட்சமின்றி நடத்த வேண்டும். இரண்டு பிள்ளைகளுக்கு மட்டும் பாலைக் கொடுத்து, மற்ற இரண்டுக்கும் தண்ணீரைக் கொடுத்தால் அது ஒழுங்

---

தொழில் தேற்ருப் பாலகனை-வெறும் விளையாட்டுப் பருவத்திலிருக்கும் பாலகனை. முன்நிறீஇப் பின் நின்று-முன்ஞல் நிற்கச் செய்து தான் குழந்தைக்குப் பின்ஞல் நின்று. அழல் இலைவேல் காய்த்திஞர் பெண்டிர் - அக்கினியைக் கொப்புளிப்பது போல் பிரகாசிக்கும் இலைபோன்ற பாண்டியனது வேலைப் போருக்குத் தூண்டிய பகையரசரது மனைவியர். கழல் அடைந்து மண் நீத்தல் - பாண்டியன் காலில் விழுந்து அதைக் கண்ணீரிஞல் கழுவுதல். கண் நீத்தல் - கண்ணேட்டம் இல்லாமலிருத்தலை. கண் - கண்ணேட்டம். தீர்க்கும் மருந்து - தீர்க்கும் உபாயம்.

குறிப்பு :—பாண்டியனது கருணையை எடுத்துக்காட்ட வந்த பாவம். வெறும் விளையாட்டாகப் பாலகன் செய்யும் செயல் யாரையும் உருக்கிவிடும். பாண்டியனை நிச்சயமாய் உருக்கிவிடும்.

காருமா ? பாண்டியன் என் சம்பந்தமாக இப்படியல்லவா. செய்கிருன் என்று, காதலுற்ற பெண், தோழியிடம் சொல்லுகிருள்.

மன்உயிர் காவல்
　　தனதாயின், அவ்வுயிருள்
என்உயிரும் எண்ணப்
　　படுமாயின், - என்உயிர்க்கே,
சீரொழுகு செங்கோல்ச்
　　செழியற்குத் தக்கதோ,
நீர்ஒழுகப் பால்ஒழுகா
　　ஆறு ? (55)

---

மன் உயிர் காவல் தனது ஆயின்-குடிகளைக் காப்பது தன் கடமை யானல். என்னுயிரும் எண்ணப்படுமாயின் - நானும் ஒருத்தி, என் உயிருக்கு ஆபத்து வரும் போது அதைக் காக்கவேண்டும் என்பதும் ஏற்படுமானல். என் உயிர்க்கே - என்னுடைய உயிர் சம்பந்தமாக மாத்திரம். சீரொழுகு செங்கோல் - நீதியிலே நின்று செங்கோல் செலுத்தும். நீரொழுகப் பால் ஒழுகா ஆறு - பாரபட்சமாயும் பராமுகமாயும் இருத்தல். 'நீரொழுகப் பால் ஒழுகா ஆறு' : பழமொழி.

## 1

**சோ**ழனிடத்தில்க் கொண்ட காதல்வெறி காரணமாக மனம் தாறுமாருய்ப் போய்விட்டது. நாணம் என்பது இல்லாமல், நாலுபேர் முன்னிலேயில் பேசவும் நேர்ந்து விட்டது. உடம்பும் ஆகாரம் ஏற்காமல் மெலிந்துவிட்டது. ஒன்று பாக்கியில்லாமல் எல்லாவற்றையும் கொள்ளே கொண்டு போய்விட்டானே அந்தப் பாதகன் சோழன் என்று தோழியிடம் சொல்லுகிருள்.

**என்நெஞ்சும் நாணும்**
**நலனும் இவையெல்லாம்,**
**மன்னன் புனல்நாடன்**
**வெளவிஞன், - என்னே,**
**அரவகல் அல்குலாய் !**
**ஆறில்ஒன்(று) அன்ருே, -**
**புரவலர் கொள்ளும்**
**பொருள்.** (56)

## 2

**பா**ண்டியன் குதிரைமேல் ஏறிப் பவனி போகிருன். பகையரசர்கள் மன்னிப்புப் பெற்றுத் தங்களுடைய குடை, கொடி, முடி சகிதமாக அணிவகுத்து முன்னே போகிருர்கள்.

அந்த வேளேயில், பவனியில்ச் சேருவதற்காக யானே எதிர்க்கோடியிலிருந்து வருகிறது. முன்னமே பகையரசரா

---

மன்னன் புனல் நாடன் வெளவிஞன் - அரசனுகிய சோழன் கொள்ளே கொண்டுபோனுன். புனல் நாடு - சோழ மண்டலம். என்னே - என்ன விசித்திரமாக இருக்கிறது. அரவு அகல் அல்குலாய்-பாம்பின் படம் போன்ற முகப்பையுடைய ஒட்டியாணம் அணிந்த மடியை யுடைய தோழியே. ஆறில் ஒன்று அன்ருே புரவலர் கொள்ளும்பொருள்-அரசனுக்குச் சேரவேண்டிய வரிப் பணம் ஆறில் ஒன்றுதானே ?

குறிப்பு:—ஆத்திரமும் அதிலிருந்து எழுந்த ஹாஸ்யமும் கலந்த பாவம்- வெறிகொண்ட பொழுது பாவங்கள் கலந்து வருதல் இயல்பு.

யிருந்தது பற்றி, அவர்களுடைய கொடி குடை முதலிய வற்றைக் கண்டு கோபம் பொங்குகிறது யானைக்கு. யானைப் பாகன் அதன் கழுத்தில் அணிந்திருந்த கயிற்றை இழுத்து இழுத்துப் பார்க்கிறன். இழுத்துப் பார்த்ததில்க் கயிறு அறுந்து போகிற நிலைக்கு வருகிறது: அப்படிப் பொங்கி வருகிறது யானை. பகையரசர்களுக்கோ, யானை இன்ன இன்னபடி சாடும் என்று அனுபவத்தால்த் தெரியும். அத னுல், பவனியில் அணிவகுத்து நின்ற அவர்கள் திடுக்கிட்டுப் பின்வாங்கினர்கள். அவர்களுடைய பொன் முடிகள் அப் படியே அவரவர்களுக்கு முன்பாகத் தரையில் விழுந்தன. பாண்டியன் ஏறிவந்த குதிரை அப்படி விழுந்த பொன்முடி களை உதைத்து உதைத்துக் கம்பீரமாய் முன்னேறிநடந்தது.

**நிரைகதிர்வேல் மாறன்தன்**
**நேரார்க்கண்(டு) ஆனை,**
**புரைசை அறநிமிர்ந்து**
**பொங்க, - அரசர்தம்**
**முன்முன்ை வீழ்ந்த**
**முடிகள் உதைத்தமாப், -**
**பொன்உரைகல்ப் போன்ற**
**குளம்பு.** (57)

நிரை கதிர்வேல் மாறன் - வரிசை வரிசையாகக் கூரியவேல் ஏந்திய படைக்குரிய பாண்டியனது. நேரார்க்கண்டு - பகையரசர்களை, குடை கொடி முதலியவைகளை வைத்து இனங்கண்டு. யானை - பாண்டியனது போர்யானை. புரைசை அற நிமிர்ந்து பொங்க - கழுத்திலிட்ட கயிறு அறுந்து போகும்படி முன்னேறி ஆங்காரம் கொள்ள. அரசர் தம் முன் முன்ை வீழ்ந்த முடிகள் - திடுக்கிட்டுப் பின்வாங்கிய அரசர் ஒவ்வொரு வர் முன்பும் துள்ளி விழுந்த பொன்முடிகளை. உதைத்த மா - காலால் உதைத்து உதைத்து முன்னேறி நடந்த குதிரைக்கு, பொன் உரைகல் போன்ற குளம்பு - குளம்பானது பொன்னின் மாற்றை உரைத்துப் பார்க்கும் கல்லைப்போல் ஆய்விட்டது. அத்தனை முடிகளை உதைத்தது என்பது கருத்து.

## 3

**கா**தல் சம்பந்தமாக அபாரமான ஒரு எக்களிப்பு.

நாயகனோடு (சோழனோடு) பல நாள்த் தொடர்ந்து முயங்கி வந்திருக்கிருள் நாயகி. ஊடும்போதெல்லாம் திரும்பி நின்று கொள்வாள். நாயகன் கட்டி அணைக்கும் போது, நாணத்தினால் தலை கவிழ்ந்து நிற்பாள். கலவியிலோ புலன்கள் எல்லாம் மயங்கிநிற்கும். விழித்திருந்தாலும் கண்ணுக்குப் பார்வை கிடையாது.

* * * *

**தோ**ழியினிடம் நாயகி பேசுகிற எக்களிப்பைப் பார்ப் போம்.

**புலவி புறக்கொடுப்பன்,**
**புல்லிடின்நாண் நிற்பன்,**
**கலவி களிமயங்கிக்**
**காணேன்; நிலவியசீர்**
**மண் ஆளும் செங்கோல்**
**வளவனை, யான் இதன்றே, -**
**கண்ணூரக் கண்டறியா**
**ஆறு.** (58)

---

புலவி - ஊடுதல். புறக்கொடுப்பன் - திரும்பி நிற்பேன். புல்லிடின் - தழுவினால். நாண் - நாணம். களி - மகிழ்ச்சி. நிலவிய சீர் - நித்தியமான வளங்கொண்ட. மண் ஆளும் - சோழ மண்டலத்தை ஆள்கிற. வள வனை - சோழனை.

குறிப்பு:—ஒரு எக்களிப்பான வெறியிலிருந்து, 'வளவனைக் கண்ணூரக் கண்டறியேன்' என்று சொல்லத் தோன்றுகிறது; உண்மை யான பாவத்துடனேயே சொல்லுகிருள் நாயகி. அவளுக்கு இதில் ஹாஸ்யமில்லை. அதைக் கேட்கிற நமக்குத்தான் திகைப்பும் ஹாஸ்ய மும் ஏற்படுகிறது.

## 4

மதுரை மாநகரைப்பற்றி உத்சாகமான பேச்சு. தோழியும் நாயகியுமாய் இருந்து பேசும்போது, தன் நாயகன் பாண்டியனது மதுரையிலுள்ள தெருக்களைப் பற்றி முந்நூறு கஜ நீளம் பத்துகஜ அகலம் என்று சொல்லுவாள்? அந்தக் கணக்கெல்லாம் சர்வே டிபார்ட்மெண்டைச் சேர்ந்தது. பெண்களுக்கு அதில் என்ன சம்பந்தம்? அப்படியானால் பெண்கள் என்ன சொல்லுகிறார்கள்?

வீதியின் இரு பக்கங்களிலும் சாளரம் வைத்த மாடங்கள். நாயகர்கள் தங்கள் தங்கள் நாயகியிடம் வந்து இதமாகப் பேசுகிறார்கள். நாயகிகளோ ஊடலில் நிற்கிறார்கள். அதைத் தணிப்பதற்கு வழி என்ன என்று பார்த்து, பன்னீரில்ச் சந்தனத்தைக் கரைத்துக் கிண்ணத்தோடு நெருங்குகிறார்கள். கிண்ணத்தை அப்படியே பறித்துச் சந்தனத்தை ஜன்னல் வழியாகக் கொட்டிவிடுகிறார்கள் நாயகிகள். இந்த விதம், ஒவ்வொரு மாடியிலிருந்தும் ஊடல் காரணமாகச் சந்தனக் குழம்பு தெருவில்ப் பொழிகிறது!

**மைந்தரோ(டு) ஊடி,**
**மகளிர் திமிர்ந்திட்ட**
**குங்கும ஈர்ஞ்சாந்தின்**
**சேறிழுக்கி, எங்கும்**
**தடுமாறல் ஆகிய**
**தன்மைத்தே, - தென்னன்**
**நெடுமாடக் கூடல்**
**அகம்!** (59)

---

மைந்தர் - இளைஞர். திமிர்ந்திட்ட - வீசி எறிந்த. குங்கும ஈர்ஞ்சாந்தின் சேறு - குங்குமப்பூ சேர்ந்த குளிர்ந்த சந்தனச் சேற்றில். தடுமாறல் - சறுக்கிவிழுதல். நெடுமாடக் கூடல் அகம் - உயர்ந்த மாளிகைகளைக் கொண்ட கூடல்மாநகர் (மதுரை).

## 5

**சி**று குழந்தைகள் குறை கூறுவதற்குக் காரணம் எப்படி எப்படி யெல்லாமோ இருக்கும். தங்களுடைய கையே கண்ணில் பட்டுவிடும். கண்ணில் ஏற்பட்ட வலி காரணமாகக் கையின்மேல் கோபம் வரும். ஏன், அதைக் கடிக்கக் கூடத் தோன்றும் !

*                    *                    *                    *

**கா**தல் வெறி கொண்டபோது ஒருவருக்குக் குழந்தை மனப்பாங்கு வந்துவிடுகிறது.

சோழன்மீது கொண்ட காதல்வெறி காரணமாக, ஒரு பெண் தன் கண்ணைப்பற்றியே குறை கூறுகிறாள் :

"கனவில்ச் சோழன் ஏதோ என்னிடம் வந்தான். அந்த வேளை, கண்ணானது மூடிக்கொள்ளுகிறது. அவனைப் பார்க்க முடியவில்லை. சரி, போகட்டும். நனவில் அவன் நேரில் வரவும் செய்கிறான். அப்போது நாணம் செய்கிற காரியத்தைக் கேள். நாணம் வந்து என் முகத்தை அப்படியே திருப்பிவிடுகிறது. கண்ணும் நாணமும் இவ்வளவு வம்பும் பண்ணுகின்றன ; இவைகளை யார் கண்டிக்கிறார்கள் ?"

**கனவினுள்க் காண்கொடா**
**கண்ணும், கலந்த**
**நனவினுள் முன்விலக்கும்**
**நாணும் : இனவங்கம்**
**பொங்கோதம் போழும்**
**புகாஅர்ப் பெருமானார்**
**செங்கோல் வடுப்படுப்பச்**
**சென்று.** (60)

---

**கனவினுள் காண் கொடா கண்ணும்** - கனவில் கண் மூடியிருப்பதால் காதலனை உண்மையாகக் காண முடியவில்லை. கலந்த நன

வினுள் - வாய்ப்பாக அவன் நேரில் வந்தபோதோ. மூன் விலக்கும் நாணும் - நாணம் வந்து என் முகத்தைத்திருப்பி விடுகிறது- இனவங்கம் பொங்கு ஓதம் போழும் புகாஅர்ப் பெருமானுர் - கூட்டமான கப்பல்கள் அலைகளைக் கிழித்தோடும் காவிரிப்பூம் பட்டினத்து அரசன் சோழனது. ஓதம் - அலை. புகார் - காவிரிப்பூம்பட்டினம். செங்கோல் வடுப்படுப்பச் சென்று - நீதி முறைமைக்கு மாருகப் போய்.

குறிப்பு :—சோழன் ஏதோ செங்கோல் செலுத்தி, ஒருவரும் அக்கிரமம் செய்யாதபடி பாதுகாத்து வருகிருன். ஆனுலும், அந்தக் கண்ணும் நாணமும் அக்கிரமம் செய்யத்தானே செய்கின்றன !

# 1

**நா**யகி, தோழியிடம் சொல்லுகிறாள் : " பாண்டியன் நேற்றையக் கனவில் வந்து என் பக்கத்திலேயே மிக்க அன்போடு அமர்ந்துகொண்டான். கண்ணை மூடியவாறாக, நானும், என்னுடைய மெல்லிய விரலால் மெதுவாக அவன் மேனியைத் தடவிப் பார்த்தேன். என்னத்தைக் கண்டேன் தெரியுமா ?"

**களியானைத் தென்னன்**
**கனவில்வந்(து), என்னை**
**அளியான் அளிப்பானே**
**போன்றான் ; தெளியாதேன்,**
**செங்காந்தள் மெல்விரலால்**
**சேக்கை தடவந்தேன், -**
**என்காண்பேன் என் அலால்**
**யான் !** (61)

---

**களி யானைத் தென்னன்**-போர்வெறிகொண்ட யானையுடைய பாண்டியன். **அளியான்** - அன்புகொண்டே. அளிப்பானே போன்றான் - **காதலிப்பவனாகப் பக்கத்தில்** படுத்துக்கொண்டான். தெளியாதேன் - கண் மூடியதன் காரணமாக விஷயம் தெரியாமல் - செங்காந்தள் மெல் **விரலால்** - செங்காந்தள் தளிர்போல் மெல்லிய எனது விரலால். சேக்கை தடவந்தேன் - படுத்திருந்த நிலையில் அவனைத் தடவிப் பார்த்தேன். தடவந்தேன் - தடவினேன். என் காண்பேன் என்னலால் **யான்** - **என்ன** தெரிய வந்தது **என்றால்,** என்னுடைய மேனியையே தடவிக் கொண்டேன். அவன் வந்தது படுத்தது எல்லாம் வெறும் கனவு தான் என்று தெரிந்துகொண்டேன்.

## 2

ஒரு சிற்றரசன் சோழனுக்கு அடங்கி நடக்கவில்லை. சோழனுக்குக் கோபம் உண்டாய்விட்டது; தன் பெருத்த சேனையோடு சிற்றரசனது ஊரைத் தாக்கினான். சிற்றரசனும் ஊராரும், போன இடம் தெரியாமல் ஓடிவிட்டார்கள்.

சிற்றரசனது தேவியர் பயந்து ஓடிப்போய்க் காட்டுக்குள் மறைந்து தங்க நேர்ந்தது. அந்தத் தேவியருக்கு அங்கே குழந்தை பிறந்தது. தரையில் படிந்து கிடந்த இலைச்சருகுகளின் மேல் குழந்தையைப் படுக்க வைத்தார்கள் தாய்மார். அச்சத்தினால், வார்த்தையாடிக் குழந்தையை உறங்கவைக்க முடியவில்லை. ஆனாலும், உறங்கிற்று குழந்தை. எப்படி? கோட்டான் கூ கூ என்று போட்ட சத்தத்தினால்!

**இரியல் மகளிர்**
**இலைஞெமலுள் ஈன்ற**
**வரிஇளம் செங்கால்க்**
**குழவி, அரைஇரவில்**
**ஊமன்பா ராட்ட**
**உறங்கிற்றே! செம்பியன்தன்**
**நாமம்பா ராட்டாதார்**
**நாடு.** (62)

---

இரியல் மகளிர் - படையெடுத்த சேனைக்குப் பயந்து ஓடி ஒளித்த பெண்கள். இலை ஞெமலுள் ஈன்ற-படுக்கை ஒன்றும் இல்லாது மெத்தெனக் கிடந்த சருகின்மேலிருந்துபெற்ற. வரியிளஞ் செங்கால்க்

## 3

**கா**தல் வெறிக்கு எத்தனை எத்தனையோ பட்டங்கள். காரணமில்லாமல்க் களிப்பு வரும்; காரணமில்லாமல்த் துயரம் வரும்; காரணமில்லாமலே ஆறுதலும் ஏற்படும், அந்த வெறியில்.

*     *     *

**பா**ண்டியனிடத்துக் காதல் கொண்ட பெண் அவனை அடையப் பெறுமல் ரொம்ப ரொம்ப வருந்துகிருள். ஆனுலும், அந்த வருத்தத்துக்குள் ஒரு ஆறுதல்: "பாண்டியனது கடலிலிருந்து தான் சங்க வளையல்கள் வந்திருக்கின்றன. முத்துக்களும் பாண்டியனது கடலிலிருந்து வந்தவை தானே. அவனுடைய பொதிகை மலையிலிருந்துதானே நான் பூசியுள்ள சந்தனமும் வந்திருக்கிறது!"

---

குழவி-மடிப்புள்ள சிவந்த காலோடுகூடிய குழந்தை. அரை இரவில் - நடு ராத்திரியில். ஊமன் பாராட்ட - பெருங் கோட்டான் கூ-கூ என்று கத்தியது. அது குழந்தையைத் தூங்குவதற்காகத் தலாட்டிய மாதிரியிருந்தது. செம்பியன் தன் - சோழனது. நாமம் பாராட்டாதார் நாடு - சோழனது பெயரைத் தக்க இடங்களில் எழுதி. (அதாவது அவனுடைய ஆளுகைக்கு உட்பட்டு) வாழாத சிற்றரசர்களது நாட்டில்.

குறிப்பு:—சோழனுக்கு அடங்கி நடவாத பகையரசரைப் பயமுறுத்துகிற பாவம் அருமையாய்ப் பாட்டில்க் கிடக்கிறது.

கைய(து) அவன்கடலுள்ச்
சங்கமால்; பூண்பதுவும்
செய்யசங்(கு) ஈன்ற
செழுமுத்தால்; மெய்யதுவும்,
மன்பொருவேல்மாறன்
வார்பொதியின் சந்தனமால்; -
என்பெருவாடும்என்
தோள்! (63)

4

**பா**ம்பானது இடிவிழும் என்பதாக எண்ணி, மின்னலைக் கண்டு பயப்படும். புற்றுக்குள் ஒளிக்கவும் செய்யும். பாண்டியனது பகை அரசர்களோ, அவனது வேலைக் கனவில்க் கண்டு கண்டு பயப்படுவார்கள்.

---

கையது அவன் கடலுள்ச் சங்கமால் - கையிலுள்ளது பாண்டியன் கடலிலிருந்து வந்த சங்க வளையல் தானே. பூண்பதுவும் செய்ய சங்கு ஈன்ற செழுமுத்தால் - கழுத்தில் அணிவதும் கடலிலுள்ள சிப்பிச் சங்கு ஈன்ற முத்தாலாகிய ஆரந்தானே. மெய்யதுவும் - தேகத்தில்ப் பூசியிருப்பதும், மன்பொரு வேல் மாறன் - நன்றாய்ப் போர் செய்யும் வேல் ஏந்திய பாண்டியனது. வார் பொதியின் சந்தனமால் - பெரிய பொதிகை மலையில் உண்டான சந்தனந்தானே. என்பெரு வாடும் என்தோள் - என்தோள் எதைப் பெருது வாடுகிறதோ தெரியவில்லையே.

குறிப்பு :—பாவனை அவ்வளவும் பெண்ணின் உள்ளத்தில் நிகழும் உண்மையான பாவனைகளே. காதல் வெறிக்குள்க் காணும் உண்மை உலகம் இது.

அருமணிப் பைந்தலை
    ஆடரவம், வானத்(து)
உருமேற்றை அஞ்சி
    ஒளிக்கும்; செருமிகுதோள்ச்
செங்கண்மா மாறன்
    சினவேல் கனவுமே, -
அங்கண்மா ஞாலத்(து)
    அரசு. (64)

## 5

ஒரு காதலி சேரனைச் சதா நினைத்துக்கொண்டிருக்கிருள். நேராகவும் அவனைச் சந்திப்பதுண்டு. உருவெளித் தோற்றத்திலும் காண்பதுண்டு. தூங்கும்போது கனவில்க் காண்பதும் உண்டு. காதல்வெறி காரணமாக ஒன்றையொன்ருக மயங்குவதுமுண்டு.

ஒருநாள் சேரன் வந்து அருமையாய் அவளோடு குலாவி விட்டுப் போனுன். ஏதோ பத்துநாள்க் கழித்துச் சேடியர்கள் அரசன் வந்துபோனதைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். நாயகி அதைக் கேட்டுத் தனக்குள்ளே சொல்லிக் கொள்கிருள்.

---

அருமணிப் பைந்தலை - அழகிய மணி அழுத்திக் கோலம் போட்ட மாதிரி படத்தையுடைய தலை. ஆடரவம் - ஆடுகிற சுபாவத்தையுடைய பாம்பு. உருமேற்றை அஞ்சி - இடிக்குக் காரணமான மின்னலுக்கு அஞ்சி. செருமிகு தோள் - மல் யுத்தத்தால் திடங்கொண்ட தோளை யுடைய. சினவேல் - கோபிப்பதுபோல் பிரகாசிக்கும் வேலை. கனவுமே- கனவில்க் கண்டு கண்டு பயப்படுவார்கள். அங்கண் மா ஞாலத்து அரசு - விசாலமான பூமியிலுள்ள அரசர்கள்; எல்லா அரசர்களும் என்பது குறிப்பு.

புன்னாகச் சோலை
புனல்த்தெங்கு சூழ்மாந்தை
நல்நாகம் நின்றலரும்
நல்நாடன், என் ஆகம்
கங்குல் ஒருநாள்க்
கனவினுள்த் தைவந்தான்; -
என்கொல் இவர் அறிந்த
ஆறு? (65)

---

புன்னாகச் சோலைப் புனல்த் தெங்கு சூழ் மாந்தை - புன்னைச் சோலையும் தென்னஞ் சோலையும் சூழ்ந்துள்ள மாந்தை. மாந்தை சேர மன்னனுக்கு உரிய நகரம். நாகம் - நாகதாளிக்கொடி. என் ஆகம் - என் மேனியை. கங்குல் - இரவு. கனவினுள் தைவந்தான் - கனவில் வந்து தடவிக்கொடுத்து அருமை பாராட்டினான். என்கொல் இவர் அறிந்த ஆறு - கனவில் நடந்த காரியத்தை இந்தச் சேடிகள் எப்படி அறிந்தார்கள்.

குறிப்பு:—நனவில் உண்மையாகவே நடந்ததைக் கனவாக மயங்குவதில் ஒரு அரிய உண்மை.

## 1

**தோ**ழியைப் பார்த்து நாயகி சொல்லுகிருள் :

" பாண்டியனுடைய காதலைப் பெறவேண்டுமானல், என்னுடைய ஆசையை வார்த்தையால்ச் சொல்லுவதென்பது முடியாது. சவாரி வரும்போது கண்ணுல்த்தான் பேச வேண்டும். ஆனல், கண் செய்யும் செயலோ ரொம்ப விசித்திரம். பகல்க் கனவிலே அவன் தோன்றும்போது அவனைத் ' திறுதிறு 'வென்று பார்ப்பதில் குறைவில்லை. ஆனல், நேரில் காணச் சமயம் நேரும்போதோ அவனைப் பார்க்க நாணிவிடுகிறது : கண்ணைப் பாரு, கண்ணை!"

**கனவை நனவென்(று)**
**எதிர்விழிக்கும், காணும்**
**நனவில் எதிர்விழிக்க**
**நாணும் - புனையிழாய் !**
**என்கண் இவையானல்,**
**எவ்வாறோ மாமாறன்**
**தன்கண் அருள்பெறுமா**
**தான்.** (66)

## 2

**போ**ர்க்களத்துக்குள், கையில் வேல் ஏந்தியவனைப் பாண்டியன் போகிருன். அங்கே ஒரு காட்சியைக் கண்டான். அப்படியே திகைத்து நின்றுவிட்டான்.

---

புனை இழாய் - ஆபரணங்கள் அணிந்த தோழியே. என்கண் இவையானல் - என்னுடைய கண் இந்த அழகில்த் தொழில் செய்வதானல். எவ்வாறோ மாமாறன் தன்கண்-எப்படியோ பாண்டியனிடத்து. அருள் பெறுமா தான் - காதலைப் பெறுவது தான்.

என்ன காட்சி ? ஒரு வீரன். வாயானது மடித்தவண்ணமாய் இருக்கிறது. கையிலுள்ள வேலோ கண்ணுக்கு நேராக ஓச்சுவதற்கு எத்தனித்த சாயலிலிருக்கிறது. இந்த நிலையிலுள்ள வீரன் இறந்துபட்ட யானையின்மேல் சாய்ந்து தூங்குகிறதுபோல்க் கிடக்கிருன். இதைக் கண்டு, என்னடா தூக்கம் என்று திகைக்கிருன் பாண்டியன். உண்மை என்ன என்ருல், ராஜ்யத்தை ஒப்புவிக்க மனமில்லாமல்ப் போர்செய்யவந்து, உயிர்விட்ட பகையரசன் நிலைதான் அது!

**கொடித்தலைத்தார்த் தென்னவன்**
**தேற்ருன்போல் நின்ருன், -**
**மடித்தவாய், சுட்டிய**
**கையால்ப் பிடித்தவேல்க்**
**கண்நேரா ஓச்சிக்,**
**களி(று)அணையாக் கண்படுத்த**
**மண்நேரா மன்னரைக்**
**கண்டு.** (67)

---

கொடித்தலைத்தார் - உச்சியில் கொடிகட்டிய வேலாயுதத்தை ஏந்திய. தென்னவன் - பாண்டியன். தேற்ருன்போல் நின்ருன் - விஷயம் தெரியாதவன்போல் நின்ருன். சுட்டிய கையால் பிடித்த வேல்-குறி பார்த்துக் கையில்ப் பிடித்த வேல். கண்நேரா ஓச்சி - கண்ணுக்கு நேராக ஓங்கி. களிறு அணையாக் கண்படுத்த - யானையே சாய்மணையாகச் சாய்ந்து கண் மூடிக்கிடந்த. மண்நேரா மன்னரைக் கண்டு - ராஜ்யத்தைக் கொடுத்துவிடச் சம்மதியாத பகையரசரை மேலே சொன்ன நிலையில்க் கண்டு.

குறிப்பு :—போர்க்களத்தில் மன்னர் பட்டிறந்ததையும், பாண்டியனது பூரண வெற்றியையும், எடுத்துக் காட்டவந்த செய்யுள்.

## 3

**வீ**ட்டுக்குள் மூன்ருங்கட்டிலிருந்த பெண், சேரன் பவனி வருகிருன் என்று வாத்திய முழக்கத்திளுல் தெரிந்து கொண்டாள். காதல் தூண்ட அவளும் அவனைப் பார்ப்ப தற்காகப் போனுள். அப்படியே நாணம் வந்து தாக்கி விட்டது. கதவையும் அடைத்து விட்டாள். மூன்ருங்கட் டுக்குப் போய்விட்டாள். ஆனல், மனசு சும்மாவா இருக் கிறது !

**ஆய்மணிப் பைம்பூண்**
**அலங்குதார்க் கோதையைக்**
**காணிய சென்றேன்,**
**கதவடைத்தேன் நாணிப், -**
**பெருஞ்செல்வர் இல்லத்து**
**நல்கூர்ந்தார் போல, -**
**வரும்செல்லும் பேரும்என்**
**நெஞ்சு.** (68)

---

ஆய்மணிப் பைம்பூண் - அருமையான ரத்தினங்கள் பதித்த பொன்னுபரணங்களைப் பூண்டு. காணிய சென்றேன் - பார்த்து அனு பவிக்கும்படியாகத் தலை வாசலுக்குப் போனேன். கதவடைத்தேன் நாணி - நாணம் மேலிட்டதனுல் பார்க்க மனங்கொள்ளவில்லை, கதவை அடைத்து விட்டேன். பெருஞ் செல்வர் இல்லத்து நல்கூர்ந்தார் போல - புதியதாய்த் தரித்திரப் பட்டவர்கள் ரொம்பவும் பெரிய பணக் காரரிடத்து யாசிக்கப் போவார்கள்; வாசலண்டை போகவும் வெட் கப் பட்டுத் திரும்புவார்கள்; தரித்திரம் மறுபடியும் அவர்களைத்

4

**சா**மரை வீச யானையைப் பழக்கியிருக்கிறார்கள். நாம் பார்த்திருக்கிறோம். பூர்வ காலத்தில் பகை அரசர்களது குடையைப் பிடுங்கி ஏந்தி வரவும் யானையைப் பழக்கி யிருந் தார்கள்.

* * * *

**பா**ண்டியனது ஆண்யானை ஒன்று எதிரிகளின் மதில்ச் சுவரைத் தாக்க நேர்ந்தது. அடியிலேயுள்ள வரிக்கல் லிடைக் கொம்புகளைக் கொடுத்துப் பெயர்க்கச் செய்தார் கள். அதுகாரணமாக, அழகாய் நீண்டிருந்த தந்தங்கள் முறிந்து போய்விட்டன. பகையரசர்களது குடையை யானை பிடிங்கி ஏந்தி வரும்போது கொஞ்சம் சாய நேர்ந்தது : காரணம் என்ன ?

---

தூண்ட வாசலை நோக்கிச் செல்வார்கள் ; வாசலை அடைந்ததும் பழைய லஜ்ஜை வந்துவிடும். திரும்ப வேண்டியதுதான். இப்படிப் பல தடவை வந்தும் போயும் அலைதல் உறுவார்கள் தரித்திரப்பட்டவர் கள். வரும் செல்லும் பேரும் என் நெஞ்சு - நாணத்தினால் திரும்பும், ஆசையினால் கதவண்டை செல்லும், மறுபடியும் நாணத்தினால் திரும்பி வரும் என்னுடைய உள்ளம்.

குறிப்பு :—செய்யுளில், நெஞ்சு என்ற சொல்லைப் பளிங்கில் வைத் துக் காட்டிய மாதிரி வைத்திருக்கிறது. சேரனுடைய அலங்கார உருவம் அப்படியே பெண்ணினது மனக்கண்முன் வந்து நிற்கிறது என் பதை ''ஆய்மணிப் பைம்பூண் அலங்குதார்க் கோதை" என்ற வர்ணனை எடுத்துக் காட்டுகிறது.

அடிமதில்ப் பாய
அழிந்தன கோட்டைப்,
பிடிமுன்(பு) அழ(கு)அழிதல்
நாணி - முடியுடை
மன்னர் குடையால்
மறைக்குமே, செங்கனல்வேல்த்
தென்னவர் கோமான்
களிறு. (69)

## 5

அரண்மனையின் ஒரு அறையில்ச் சோழன் படுத்திருக்கிருன்; அவனேடு கோபித்துக் கொண்டவளாய் அந்தப்புரத்துக் கட்டுக்குள் படுத்திருக்கிருள் நாயகி. நேரம் நடுராத்திரி. தனக்குள்ளே சொல்லிக் கொள்ளுகிருள். நாயகனிடம் போய்ச் சமாதானம் பண்ணுவோம் என்ருல், நாணமாய் இருக்கிறது. எழுந்து போகவொட்டவில்லை அந்த நாணம். சமாதானத்தினுல் வரும் பயனைக் கருதினுலோ மனம் இசைவதாய் எழுந்துபோகச் சொல்லுகிறது - நாயகன் அறைக்கு. அடுத்த நிமிஷம், நாணம் தடுக்கிறது. பிறகு ஆசை தூண்டுகிறது. இவ்விதமாக மாறிமாறி மனம் தத்தளிக்கிறது. கண்ணுக்கும் உறக்கம் வரவில்லை.

---

அடிமதில்ப் பாய - மதிலின் அடிப்புறத்தைக் குத்தியெடுக்க. அழிந்தன கோட்டை - முறிந்துபோன கொம்புகளை. பிடிமுன்பு அழகு அழிதல் நாணி - அடடா, நம்முடைய தந்தங்கள் முறிந்திருக்கின்றனவே, அவைகளின் அழகு போய்விட்டதே, அதோ நிற்கிற பெண்யானை கேவலமாய் எண்ணி விடுமே என்று வெட்கப்பட்டு. முடியுடை மன்னர் குடையால் - முடிபுனைந்துள்ள பகையரசர்களிடமிருந்து பிடுங்கிய குடையால். மறைக்குமே - சேதப்பட்ட தந்தங்களை மறைக்கும்.

நாண்ஒருபால் வாங்க,
நலன்ஒருபால் உள்நெகிழ்ப்பக்,
காமருதோள்க் கிள்ளிக்(கு)என்
கண்கவற்ற, யாமத்(து),
இருதலைக் கொள்ளியின்
உள்எறும்பு போலத், -
திரிதரும் பேரும்என்
நெஞ்சு. (70)

---

நாண் ஒருபால் வாங்க-ஒரு பக்கத்தில் நாணமானது தடுக்க. நலன் ஒருபால் உள்நெகிழ்ப்ப - சமாதானத்தால் வரும் லாபத்தைக் கருதினால் மனசை அது இளக்கி விடுகிறது. காமரு தோள்க் கிள்ளிக்கு என் கண் கவற்ற-அழகிய தோள்களையுடைய சோழன் காரணமாக உறக்கம் வராமல் கண் தொந்தரவுக்கு உள்ளாக. இருதலைக் கொள்ளியின் உள் எறும்புபோல - மூங்கில்க் குழாயில் இருபக்கமும் நெருப்புப் பற்றி எரியக் குழாய்க்குள் அகப்பட்ட எறும்பு போல. யாமத்துத் திரிதரும் பேரும் என் நெஞ்சு - நடுராத்திரியில் என் நெஞ்சு நாயகன் பால்ப் போகும், மறுபடியும் திரும்பும், மறுபடியும் போகும்.

குறிப்பு :—திரிதரும் பேரும் என் நெஞ்சு என்ற அடியைப் பாடப் பாட, நம் உள்ளம் கனியும்.

1

**தோ**ழியிடம் காதலி சொல்லுகிறாள் ; "பாண்டியன் விஷயமாக என்னத்தைச் சொல்லுவது என்று ஓடவில்லை. அவனே ஏகசக்கராதிபதி. அவன் ஆளுகைக்கு உட்பட்டதோ, பாக்கியில்லை என்று சொல்லும்படியாக, உலகம் முழுதுமே. என்னைக் கவனித்தால், ஒன்றும் இயலாத பெண் பிள்ளை. பாண்டியனுக்கு மாறாக நான் என்ன சொல்லக் கூடும் ?

**தானேல் தனிக்குடைக்**
**காவலனும், காப்பதுவும்**
**வானேற்ற வையகம்**
**எல்லாமால் ; யானே,**
**எளியேன், ஓர் பெண்பாலேன் ;**
**ஈர்ந்தண் தார் மாறன், -**
**அளியானேல் அன்(று)என்பார்**
**யார் ?** (71)

2

ஒருவனுடைய வீரத்தைச் சொல்லுவதற்குப் பகையரசர்கள் பட்டொழிந்த போர்க்களத்தை எடுத்துச் சொல்ல

---

தானேல் தனிக்குடைக் காவலனும்-அவனைக் கவனித்தால் அவன் வேறொரு அரசுக்கும் உட்பட்டவனல்ல ; மற்ற அரசர்கள்தான் அவனுடைய குடைக்கு உட்பட்டவர்கள் காப்பதுவும் - தான் ஆளுகிற ராஜ்யமோ. வானேற்ற வையகம் எல்லாமால் – நாலாபக்கத்திலும் வானத்தை ஒட்டித் தாங்கிநிற்கிற பூவலயம் முழுதுமே. அளியானேல்- கருணை கூர்ந்து என்னைக் காதலிக்காமல் இருக்கிறதென்றால். அன்று என்பார் யார் - மறுத்துச் சொல்லக் கூடியவர்கள் இந்த உலகத்தில் யார் இருக்கிறார்கள் ?

குறிப்பு :—'அளியானேல் அன்றென்பார் யார்' என்பதில் காதலின் ஏக்கம் நன்றாய்த் தொனிக்கிறது.

வேண்டும். போர்க்களத்தைப்பற்றிச் சொல்லும்போது, கேட்பவர் மறக்காதபடி, சம்பவம் ஒன்றைச் சொல்ல வேண்டும்.

* * * *

**ப**கல் எல்லாம் யுத்தம் நடந்தது. இரவு வரவும், பகையரசர் சேனையெல்லாம் போர்க்களத்தில் மடிந்து கிடக்கிறது: ஒரே இருட்டு. பிணம் தின்னிகளான பேய்கள் போர்க்களத்துக்குள் விளக்கேற்றிக்கொண்டு பிணந்தின்ன வருகின்றன. இறந்தவர்களுடைய தலை யோட்டைக் கீறி, மூளையையே நெய்யாக வைத்து, குடல்களைத் திரியாக வெட்டிப் போட்டு, விளக்கேற்றிப் பூசை செய்கின்றனவாம்.

**முடித்தலை வெள்ளோட்டு**
**மூளைநெய் யாகத்,**
**தடித்த குடர்திரியா**
**மாட்டி, எடுத்தெடுத்துப்**
**பேஎய் விளக்கயரும்**
**பெற்றித்தே, - செம்பியன்**
**சேஎய் பொருத**
**களம். (72)**

---

முடித்தலை **வெள்ளோட்டு** - குடுமியோடு கூடிய மண்டையோட்டில். மூளை **நெய்யாக** - இலுப்பை நெய்போல, மூளை கட்டியாய் நிற்க. எடுத்து **எடுத்துப்** பேய் **விளக்கு அயரும்** - பல இடங்களிலும் **விளக்கு** வைத்து **விழா** எடுக்கும். பெற்றித்தே - தன்மையதாய் இருக்கும். **செம்பியன் சேய் பொருத களம்** - சோழனுடைய மகனை இளவரசன் போர் செய்த **களம்.**

குறிப்பு :—பேய்கள் **பிணம்** தின்னுவதற்காகப் போரை எதிர் பார்த்த வண்ணமாய் இருக்கும். போர் **நிகழ்ந்தது** ; **விழா** எடுக்கின் றன.

## 3

கொற்கை என்ற ஊர் திருநெல்வேலி ஜில்லாவில்த் திருச்செந்தூருக்கு அருகிலுள்ளது. பூர்வத்தில் கடற்கரையோரமாய் இருந்தது. அங்குள்ள கடலில் முத்துக் குளித்து, எடுத்த முத்துக்களை உலகமெங்கும் அனுப்பிவந்தார்கள். பாண்டியனுடைய வாசஸ்தலங்கள் இரண்டு: ஒன்று தற்காலத்து மதுரை; மற்றையது கொற்கை. கொற்கையை வைத்து ஒரு கவி.

* * * *

சமுத்திரக்கரை ஓரமாக ஒரு வளமான புன்னஞ் சோலை. பாண்டியன்மீது காதலுற்ற பெண் ஒருத்தி அந்தச் சோலையில், கடல்க்கரையோரமாய் உட்கார்ந்திருக்கிருள். நேரம் அந்திப்பொழுது. தோழி ஒருத்தியைப் பாண்டியனிடம் தூதும் விட்டிருக்கிருள். தூதுபோனவள் இன்னும் வரவில்லை.

கடல்க்கரை ஓரமாய் இருந்த மணல்த்திட்டில் ஒருகாட்சியைப் பார்க்கிருள். கடலிலிருந்து ஒரு சங்கு அலையோடு ஏறிவந்து மணலில்த் தங்கிவிட்டது. தற்செயலாய் முத்து ஒன்றையும் ஈன்றுவிட்டது. மறுபடியும் சமுத்திரத்துக்குள் புகுவதற்கு அசைந்து அசைந்து நகருகிறது; உயர்ந்த மேட்டில் தங்க நேர்ந்ததால், பெரிய அலை ஏதாவது வராதா நம்மை இழுத்துச் செல்வதற்கு, என்ற ஏக்கத்திலிருக்கிறது. அந்தச் சங்கோடு அனுதாபப்பட்டுத் தனக்குள்ளே சொல்லிக் கொள்ளுகிருள் பெண்:

உகுவாய் நிலத்த
உயர்மணல்மேல் ஏறி,
நகுவாய்முத்(து) ஈன்(று)அசைந்த
சங்கம், புகுவான்
திரைவரவு பார்த்திருக்கத்,
தென்கொற்கைக் கோமான் -
உரைவரவு பார்த்திருக்கும்
நெஞ்சு. (73)

## 4

சோழனுக்குக் கப்பங் கட்டவேண்டிய மன்னர்கள் எத்தனையோ பேர். எல்லாரும் குறிப்பிட்ட வாயிதாத் தேதியில் கட்டாயம் கட்டிவிடவேண்டும்; கட்டத் தவறினால், அவர்களுக்குப் பெருந் தண்டனை விதிப்பார்கள். ராஜ்யத்தையே இழக்க நேர்ந்தாலும் நேரலாம். இது காரணமாக அனேக அரசர்கள் அரண்மனை வாசலுக்கு ஓடிவந்து, கப்பங் கட்டுவதற்கான சுமையையும் தூக்கிக்கொண்டு, சக்கரவர்த்தி இருக்கும் இடத்திற்கு வந்து படபடவென்று

---

உகுவாய் நிலத்த-அலையடித்துக் குடைந்த மேட்டிலிருந்து மணல் உதிர்ந்து கொண்டிருக்கிற. உயர்மணல்மேல் ஏறி - அவ்வளவு உயர்ந்த மணல்மேல் ஏறி. நகுவாய் முத்து ஈன்று - வெண்மையான முத்தை அந்த மணலில் ஈன்றுவிட்டு. அசைந்த சங்கம் - நகர்ந்து நகர்ந்து செல்லும் சங்கானது. புகுவான் - மறுபடியும் சமுத்திரத்திற்குள் புகுவதற்காக. திரைவரவு பார்த்திருக்க - எட்டிவரும் பேரலையை எதிர்பார்த்திருக்க. தென்கொற்கைக் கோமான் - பாண்டியனது. உரைவரவு பார்த்திருக்கும் நெஞ்சு - தூதுபோன தோழியிடம் பாண்டியன் சொல்லி விடும் வார்த்தையை எதிர்பார்த்திருக்கும் என் உள்ளம்.

குறிப்பு :—தமிழ் பாஷையின் நளினப்பண்பு, இரக்கத்திற்கும் ஏக்கத்திற்கும் வாய்ப்பான பாவ உருவம் கொடுத்திருப்பதைக் கவியிலே காணலாம்.

உள்ளே பிரவேசிக்கப் பார்க்கிறார்கள். அவர்களை அப்படியே தடுத்துச் சொல்லுகிறான் வாசல்க் காப்பாளன் :

" மன்னர்களே ! கொஞ்சம் பொறுத்து உங்கள் கப்பத்தைச் செலுத்தலாம். நேற்று, அடடா, உங்களைப் போல அனேக மன்னர்கள் திறைகொண்டு வந்தார்கள். ஒருவருக்குமுன் ஒருவர் போட்டி போட்டுச் செலுத்தப் பார்த்தார்கள். அதனால் என்ன விளைந்தது என்று உங்களுக்குத் தெரியாது !"

**நின்றீமின் மன்னீர் !**
**நெருநல்த் திறைகொணர்ந்து**
**முன்தந்த மன்னர்**
**முடிதாக்க, இன்றும்**
**திருந்தடி புண்ணாகிச்**
**செவ்வி இலனே,**
**பெருந்தண் உறந்தையார்**
**கோ ! (74)**

---

நின்று ஈமின் - கொஞ்சம் பொறுத்துக் கப்பத்தைக் கட்டுங்கள். மன்னீர் - மன்னர்களே. நெருநல் - நேற்றைய தினந்தான். திறை கொணர்ந்து முன் தந்த - கப்பத்தைக் கொண்டுவந்து சோழன்முன் வணங்கிச் செலுத்திய. திருந்து அடி புண்ணாகி - அழகிய கால் புண்பட்டு. செவ்வி இலனே-இன்னும் குணமாகாதிருக்கிறது. பெருந் தண் உறந்தையார் கோ - விசாலமான நீர் வளங்கொண்ட உறையூரில் வாழ்பவருக்கு அரசனாகிய சோழன்.

குறிப்பு :—'வளமான இந்த உறையூருக்கு அதிபதிதான். அதிபதியாய் இருந்து என்ன செய்ய : காயம் காயந்தானே!' என்னும் வசை போலும் புகழுரை 'பெருந்தண் உறந்தையார்கோ' என்று சொல்லும் கடைசி அடியில்க் கிடக்கிறது.

## 5

தலைவியைப் பார்க்கக் காலையில்த் தோழி வருகிறுள். தலைவி வாடியிருப்பதைக் கண்டு, "என்ன விசேஷம்?" என்கிருள் தோழி. அதற்குத் தலைவி பதில்ச் சொல்லுகிருள் :

"அந்தப் பாழாய்ப்போன ஊடல் இருக்கிறதே, அது வந்து காரியத்தைக் கெடுத்துவிட்டது. எப்படி என்று சொல்லுகிறேன், கேள்:"

ஊடல் எனஒன்று
தோன்றி, அமைஉறாஉம்
கூடல் இழந்தேன்,
கொடிஅன்னுய்! - நீள்தெங்கின்
பாளையில்த் தேன்தொடுக்கும்
பாய்புனல் நீர்நாட்டுக்
காளையைக் கண்படையுள்ப்
பெற்று. (75)

---

அமைஉறாஉம் கூடல் - வாய்ப்பாக வந்த கூடல். கொடி அன்னுய் - பூங்கொடியை ஒத்த தோழியே. நீள் தெங்கின் பாளையில் தேன் தொடுக்கும் - பொதுவாகத் தேக்கு, கோங்கு, நாங்கு முதலிய உயர்ந்த மரங்களின் பருத்த கிளைகளில்த்தான் தேனீக்கள் வந்து கூடு கட்டும். ஆனல் சோழனது நீர்வளம் நிறைந்த நாட்டிலோ, தென்னையின் அகன்ற பாளையிலேயே தேன்கூடு தொங்கப் பார்க்கலாம். பாய்புனல் நீர் நாட்டுக் காளையை - தண்ணீர் பாய்ந்து ஓடிக்கொண்டிருக்கும் சோழ நாட்டிற்கு உரிய அரசனை. கண் படையுள்ப் பெற்று - உறக்கத்தில் வந்த கனவிலே கண்டு-

குறிப்பு:—ஏதோ பெரியதொரு நஷ்டம் வந்ததாகச் சொல்லுகிருள் தலைவி. எல்லாம், கனவில் வந்து கிட்டாமல் போனதுதான். கனவில் வந்து போனதற்கே இவ்வளவு ஆற்ருமை. நனவிலே வந்து போய்விட்டால், எத்தகைய ஏமாற்றமும் துயரும் ஏற்படும் என்பது பாவம்.

# 1

**பா**ண்டியன் குதிரைமேல் ஏறி வீதி வழியாகப் பவனி போகிறான். ஒரு பெண் அவனைப் பார்த்து அப்படியே காதல்வெறிக்கு உள்ளாகி விடுகிறாள். அந்த வெறியால், என்ன செய்வது என்று தோன்றவில்லை. ஓடிப்போய்க் குதிரையைக் கட்டித் தழுவிக் கொள்ளலாமா என்று தோன்றும். ஆனால், குதிரை எளிதில் கைக்கு வரக்கூடிய காரியமா ? லாயம் எங்கேயோ இருக்கிறது. குதிரையைத் தழுவிக்கொள்ளுகிறது என்றால், பலருக்கும் தன்னுடைய காதல் தெரிந்துவிடுமே, என்ற அச்சம் ஒரு பக்கம். இந்த நிலையில் அவளுக்கு எண்ணம் போகிறதைப் பாருங்கள்.

குதிரையின் குளம்புபட்ட தூசியை அப்படியே எடுத்துக்கொண்டு வரவேண்டும். எடுத்துக்கொண்டு வந்து, மேலெல்லாம் பூசிக்கொள்ள வேண்டும் ; தலையிலே கடவுள் பிரசாதம் மாதிரியாகத் தூவிக் கொள்ளவேண்டும். மேலும் என்ன செய்யவேண்டும், தெரியுமா ? அதைச் சந்தனம் குங்குமம் பன்னீரோடு நன்றாய் இழைத்துக் கலந்து மார்பில் அலங்காரமாகத் தொய்யில் எழுதவேண்டும். இப்படியெல்லாம் எண்ணிக்கொண்டிருக்கிறாள். அப்போது, தனக்கு ஆப்தமான தோழி வருகிறாள். தன்னுடைய ஆற்றாமையையும் ஆத்திரத்தையும் அவளிடம் கொட்டுகிறாள் :

ஆடுகோ ! சூடுகோ !
ஐதாக் கலந்துகொண்(டு)
ஏடுகோ டாக
எழுதுகோ, நீடு
புனவட்டப் பூந்தெரியல்ப்
பொற்றேர் வழுதி
கனவட்டம் கால்குடைந்த
நீறு ! (76)

---

ஆடுகோ - மேலெல்லாம் பூசிக் கொள்ளுகிறதா. சூடுகோ - தலையில் தூவிக் கொள்கிறதா. ஐதாக் கலந்து கொண்டு- தூசியை நன்றாய் அரைத்துக் குழம்பாக்கிக்கொண்டு. ஏடு கோடு ஆக - பூவிதழைச் சுருட்டி எழுதுகோலாக வைத்துக்கொண்டு. எழுதுகோ - அலங்காரமாக மார்பில் தொய்யில் எழுதுகிறதா. தொய்யில் - பெண்கள் மார்பில் எழுதிக்கொள்ளுகிற அலங்காரச் சித்திரங்கள். நீடு - நீண்ட. புனவட்டப் பூந்தெரியல் - பூந்தோட்டத்திலிருந்து அப்போதுதான் பறித்து வட்டமாகக் கட்டிய புஷ்ப மாலையைச் சூடிய. வழுதி - பாண்டியனது. கனவட்டம் - குதிரையின் பெயர். கால்குடைந்த நீறு - குளம்பு பட்ட தெருவிலுள்ள தூசி.

குறிப்பு :—இந்தக் கவியில் அபூர்வமான உணர்ச்சியும் பாவமும் அமைந்திருக்கின்றன. கடவுளிடத்திலும் அடியார்களிடத்திலும் ஈடுபட்ட பட்டினத்தார் தம் ஈடுபாட்டைச் சொல்லி இருக்கிற கவியை இங்கே ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

அடியார் சிலர் திருவொற்றியூரில் இருந்தார்கள். கடவுள்த் தத்துவத்தில் அவர்கள் ஈடுபட்டுப் பரவச நிலையில் நின்று அந்தத் தத்துவத்தை எடுத்துச் சொல்வார்கள். ரதவீதி வழியாகப் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் செல்வார்கள். அடியார் செயல் நினைவிற்கு வந்ததும், பட்டினத்தாரும் பரவசமாவார். உடல்த் தத்துவத்தையெல்லாம் நீங்கி, கடவுளது ஆனந்த தத்துவத்தில் கலந்து கொள்வார். இந்த அனு

## 2

**பா**ரதத்தில் ஒரு கதை.

அர்ச்சுனன் பெரிய சிவபக்தன். அவனுக்குக் கயிலையங்கிரிக்குப் போய்ச் சிவபெருமானைத் தரிசித்து வரவேண்டும் என்ற ஆசை. ஆனல், யுத்த நெருக்கடியால் கயிலையங்கிரிக்குப் போகச் சௌகரியப்படவில்லை. அப்போது கிருஷ்ண பகவான் அர்ச்சுனனைப் பார்த்து ஒரு யுக்தி சொல்லுகிறுர் : "நான் இங்கே உட்கார்ந்து கொள்ளுகிறேன். நீ புஷ்பங்களை எடுத்து என் சிரசின்மேல் அர்ச்சனை செய்துவிடு. அதுவே சிவபிரானை வழிபட்டதற்குச் சமானமாகும்" என்று சொல்லுகிறுர். அர்ச்சுனன் அப்படியே செய்கிருன். கிருஷ்ண பகவானுக்குச் செய்யவேண்டிய பூஜை முடிந்துவிட்டது. அவர் எழுந்தார். இருவரும் யுத்தகளத்திற்குப் போய், செய்யவேண்டிய காரியங்களைச் செய்து முடித்தார்கள். இரவு கழிந்தது. மறுநாட் காலை சாவகாசம் ஏற்பட்டது. கயிலையங்கிரிக்கு அப்படியே போனுர்கள். சிவபெருமான் சன்னிதிக்கே சென்றுர்கள். அங்கே ஒரு அதிசயத்தை அர்ச்சுனன் கண்டான். முந்தின மாலையில் கிருஷ்ணனது சிரசில் அர்ச்சித்த புஷ்பங்களெல்லாம், ஒன்று விடாமல் அவ்வளவும், சிவபெருமான் பாதத்

---

பவத்தை எப்படிச் சொல்லுகிறுர் பாருங்கள்! (ஓடு விழுந்து - ஆருத புண்ணுகி. கடு - விஷம்.)

ஓடுவிழுந்து சீப்பாயும்
ஒன்பதுவாய்ப் புண்ணுக்(கு)
இடுமருந்து யானறிந்து
கொண்டேன் : கடுஅருந்தும்
தேவாதி தேவன்
திருவொற்றி யூர்த்தெருவில்ப் -
போவார் அடியில்ப்
பொடி!

தில் கிடக்கக் கண்டான். இந்தக் கதையை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு பாடலைப் பார்க்கலாம்.

**செங்கண் நெடியான்மேல்த்**
**தேர்விசயன் ஏற்றியபூப்**
**பைங்கண்வெள் ஏற்ருன்தாள்க்**
**கண்டற்ருல் : எங்கும்**
**முடிமன்னர் சூடியபூ**
**மொய்ம்மலர்த்தார் மாறன், -**
**அடிமிசையே காணப்**
**படும்.** (77)

## 3

**மா**லை ஐந்து மணி. பாட்டி பெண்ணைப் பார்த்து 'அடியே, குத்துவிளக்கை விளக்கிப் பட்டகசாலையில் வைத்துத் திரிபோட்டுவிடு' என்ருள். பெண்ணும், உமியினுல்

---

**செங்கண் நெடியான்மேல்** - செந்தாமரைக் கண்ணனை கிருஷ்ணனது சிரசில். **தேர் விசயன் ஏற்றிய பூ** - அர்ச்சுனன் அர்ச்சித்த புஷ்பங்கள் அவ்வளவும். **பைங்கண்**-நீர்நயத்தோடு பிரகாசிக்கிற கண்களையுடைய. **வெள் ஏற்ருன் தாள்** - வெள்ளை ரிஷபத்தை வாகனமாகக் கொண்ட சிவபெருமானுடைய பாதத்தில். **கண்டற்ருல்**-கண்டதையே ஒக்கும். **மொய் மலர்த்தார் மாறன்** - இறுகத்தொடுத்த மலர்மாலையை அணிந்த பாண்டியன்.

குறிப்பு :—அரசர்கள் எல்லாரும் அவரவர்களுக்குரிய தனிப்பட்ட புஷ்பங்களை முடியில்ச் சூடிக்கொள்ளுவது வழக்கம். அப்படிச் சூடிக்கொண்டே வந்து பாண்டியனை வணங்குவார்கள். வணங்கும்போது அந்தப் புஷ்பங்கள் உதிர்ந்து பாண்டியனது பாதத்தின் பக்கமெல்லாம் கிடக்கும். அப்படிக் கிடந்த புஷ்பங்களைப் பார்த்தாலே எந்த எந்தத் தேசங்கள் பாண்டியனுக்கு உட்பட்டிருந்தன என்று தெரியவரும். செய்யுளுக்கு அருமையான பாவ உருவம் வாய்த்திருக்கிறது.

பித்தளை விளக்கைத் துடைத்துத் தங்க விளக்காக்கி, பட்டக சாலையில் வைத்துத் திரியும் போட்டுவிட்டாள்; பாட்டியிடமும் தெரிவித்து விட்டாள். பாட்டியும், ‘சரி, அதோ இருக்கிற குவளையில் எண்ணெய் இருக்கிறது. அந்த எண்ணெயை விளக்கில் நிறைய விட்டு வை’ என்று சொன்னாள். பேத்தியும், விளக்கு நிறைய எண்ணெயை விட்டு, போணியையும் விளக்கின் அடியில் வைத்துவிட்டு, வெளியே போய் விட்டாள். மணி ஆறு ஆகிவிட்டது. விளக்கு ஏற்றுகிற நேரம் வந்துவிட்டது. பாட்டியும், கை விளக்கைக் கொண்டு வந்து குத்துவிளக்கைப் பொருத்தப் பார்த்தாள். திரியில்ச் சுடர் பற்றவில்லை. வெகு நாழிகை பொருத்திப் பார்த்தாள். பற்றவேயில்லை அந்தச் சமயம் பேத்தி வந்தாள். அவளும் முயன்று பார்த்தாள். சுடர் பற்றவில்லை. காரணம் என்னவென்று சோதித்துப் பார்க்கையில், குவளையிலிருந்ததும் குத்துவிளக்கிலிருந்ததும், எண்ணெய் அல்ல, தண்ணீர், என்று தெரியவந்தது. தண்ணீர் ஏறிய திரியில் சுடர் பற்றுமா?

* * * *

**சோ**ழனுடைய அழகில் ஈடுபட்ட காரணமாக ஆகாரம் ஏற்காமல், தேகம் மெலிவடைந்து, மேனியெல்லாம் பசப்பு ஏறிவிட்டது ஒரு பெண்ணுக்கு. இதை யெல்லாம் பார்த்துச் செவிலித் தாயானவள் சொல்லுகிறாள்: “குதிரை ஏறிச் சோழன் பவனி வந்தபோது அவனுடைய தோளின் அழகைப் பார்த்தேன். சரி. இது ஆபத்தை விளக்கக் கூடியதுதான் பெண்களுக்கு, என்று நினைத்து, பவனியைப் பார்க்கவேண்டாம் என்று பெண்ணிடம் சொன்னேன். சொல்லி என்ன செய்ய?”

அலங்குதார்ச் செம்பியன்
ஆடெழில்த்தோள் நோக்கி,
விலங்கியான் வேண்டா
எனினும், நலன்தொலைந்து
பீர்மேல்க் கொளல்உற்ற
பேதையர்க்(கு) என்வாய்ச்சொல்
நீர்மேல் எழுந்த
நெருப்பு. (78)

## 4

**போ**ரில் வெற்றியென்பது ஒன்று கிடைக்கிறது. அந்த வெற்றிக்குள் கொஞ்சம் கூர்ந்து பார்த்தால் துயரம் என்பதும் உள்ளாகத் தங்கியே கிடக்கும்.

* * * *

**பா**ண்டியன், போர்செய்து எதிரிகளை அழித்தான். எத்தனையோ வீரர்கள் போர்க்களத்தில் இறந்து பட்டார்கள். இறந்துபட்ட வீரர்களின் மனைவியர் அக்கினிப் பிரவேசம் செய்தார்கள். இதைக் காணச் சகிக்காமல் தன் வேட்டியின் முந்தானையால் கண்ணைப் பொத்திக்கொண்டான் பாண்டியன். அரசனது துயரம், அங்கு நின்ற எல்லோரையும் பாதித்து விட்டது. அப்படிப் பாதித்த துயரத்தின் வழியாக, மற்றக் காட்சிகளையும் பார்க்கிறார்கள் :

---

அலங்கு தார்ச் செம்பியன் - அசைந்து தொங்கும் மாலைகளை அணிந்த சோழன். ஆடு எழில்த் தோள் - குதிரையின்மேல் சவாரி வரும்போது அசைந்து அசைந்து அழகு செய்யும் தோளை. விலங்கியான் வேண்டா எனினும் - நம்முடைய பெண்ணை விலக்கி, பவனியைப் பார்க்க வேண்டாம் என்று சொல்லியும். நலன் தொலைந்து - அழகெல்லாம் வாடி. பீர்மேல்க் கொளலுற்ற - காதல் காரணமாகப் பசலையாக நிறம் மாறிய. பேதையர்க்கு - பெண்களுக்கு. (இங்கே, தான் வளர்த்த பெண் தான்.) என் வாய்ச் சொல் நீர்மேல் எழுந்த நெருப்பு - நல்ல காரியத்தை நான் சொன்னால் பெண்களுக்கு அது பற்றவா செய்யும்? நீர் ஊறிய திரியில் சுடர்பற்றுகிற கணக்குத்தான்.

ஏனைய பெண்டிர்
எரிமூழ்கக் கண்டு, தன்
தானையால்க் கண்புதைத்தான்
தார்வழுதி ; யானையெலாம்,
புல்லார் பிடிபுலம்பத்
தாம்கண் புதைத்தவே ! -
பல்வாயால்ப் பட்ட
களத்து. (79)

---

ஏனைய பெண்டிர் - பகைவரது மனைவியர். தானையால் - முன்றானையால். கண் புதைத்தான் - கண்ணை மூடிக்கொண்டான். யானையெலாம் - ஆண் யானைகள் எல்லாம். புல்லார் பிடி புலம்ப - பகைவர்களது ஆண் யானை இறந்துபட, அதுகாரணமாகப் பெண் யானைகள் புலம்ப. தாம் கண்புதைத்தவே - மேலே சொன்ன பாண்டியனது ஆண் யானைகள் துதிக்கையால் தம் கண்களை பொத்திக்கொண்டன. பல்வாயால் பட்ட களத்து - பலவகையில்ப் போர்செய்ய, அதுகாரணமாக, எதிரிகள் இறந்துகிடந்த போர்க்களத்தில்.

குறிப்பு :—போர்க்களத்தில் எதிரிகள் பக்கம், வீரர்கள் உயிரிழந்தனர். குதிரைகள் உயிரிழந்தன. யானைகளும் உயிரிழந்தன. ஈட்டிப் போரினாலும், வாள்ப் போரினாலும், வில்ப் போரினாலும், இன்னும் பல வகையாலும் உயிரிழந்தன என்பதை, 'பல்வாயால்ப் பட்டகளத்து' என்ற கடைசி அடி அதிவேகத்துடன் விளக்குகிறது.

## 5

**சா**மானியமாகக் காதலைத் தெரிவிப்பதற்கு, தோழிகள் உளவாய் இருப்பதுண்டு. நாயகிக்காகத் தோழி நாயகியைவிட்டுப் பிரிந்து காதலனிடம் செல்லுதல் இயல்பு. தோழி காதலனிடம் செல்லுவது போல், நாயகியின் நெஞ்சும் செல்லுதல் உண்டு. இது உண்மையை ஒட்டிய வழக்கு. காதல்வெறியில் மனமானது காதலனிருக்கும் இடத்துக்குப் போய் அவனுடன் ஒட்டிநிற்பது உண்மை. இதிலிருந்து மனசைத் தோழிபோல ஒரு தனியான தத்துவமாகக் கருத நேருகிறது. எல்லாம் ஒரு வெறியில்த்தான். மனசைப் பார்த்துப் பல விதமாகவும் பேசத் தோன்றுகிறது.

*          *          *          *

**சோ**ழன்மீது காதல் வெறிகொண்ட பெண் சொல்லுகிறாள் : "நெஞ்சமே, உன்னைத் திடப்படுத்திக் கொள் ; காதலன் வருவான். வந்தால் நாணத்தால் பேசாது இருந்துவிடாதே. துணிந்து பேசவேண்டும். "ராஜாக்களுக்கு இரக்கமே கிடையாதா, என்ன ! கஷ்டப்படுகிறவர்களைப் பார்த்தால் இரக்கம் வராமலா போய்விடும் ? கண் என்ன,

மரத்தினுல் செய்த கண்ணோ?" இப்படி யெல்லாம் சொல்லி, நெஞ்சே, சோழனைக் கேட்டுக் கொள்வாயாக!"

வரக்கண்டு நாணுதே
    வல்லை ஆ நெஞ்சே!
'மரக்கண்ணோ மண் ஆள்வார்
    கண்'என்(று) இரக்கண்டாய், -
வாள்உழுவை வெல்கொடியான்
    வண்புனல்நீர் நாடற்(கு)என்
தோள்அழுவம் தோன்றத்
    தொழுது. (80)

---

வரக் கண்டு - நெஞ்சே நீ தூதாக வந்திருக்கும் செய்தியைக்கேட்டு அவன் வெளியே வருவான்; அப்போது அவனைப் பார்த்து. நாணுதே - உனக்கு நாணம் ஏற்பட்டு விடலாம், ஆனல் அப்படியெல்லாம் நாணி விடக்கூடாது. வல்லை ஆ - திடம் கொள்வாயாக. (வல்லை - திடமுள்ள தூதாக. ஆ - நீ ஆகவேண்டும்.) இரக்கண்டாய் - யாசிக்கவேண்டும். வாள் உழுவை - வலி பொருந்திய புலியை எழுதிய. வெல்கொடியான் - எங்கே போனலும் வெற்றியைத் தரக்கூடிய கொடியைக் கொண்ட சோழன். வண்புனல் நீர் நாடற்கு - நீர்வளம் பொருந்திய சோழநாட்டு அரசற்கு. தோள் அழுவம் - என்னுடைய தோளின் மெலிவு. தோன்றத் தொழுது - அவனுக்குத் தெரியும்படியாகச் சொல்லிப் பணிந்து.

குறிப்பு:—காதல்வெறியின் ஆத்திரம், நெஞ்சைப் பார்த்துச் சொல்லச் செய்கிறது. 'நாணுதே', 'வல்லை ஆ', 'நெஞ்சே' - இவைகளில்த் தெரிகிறது ஆர்வபாவம். மேலும், 'மரக்கண்ணோ மண் ஆள்வார் கண்' என்கிற எரிச்சலில்த் தெரிகிறது. 'இரக்கண்டாய்' என்று வலியுறுத்தலில்த் தெரிகிறது. 'தோன் அழுவம் தோன்ற' என்ற பரிவில்த் தெரிகிறது. 'தொழுது இரக்கண்டாய்' என்று கெஞ்சுவதிலும் தெரிகிறது. இந்த ஆர்வ பாவத்தோடு பாடலைப் பாடவேண்டும்.

# 1

**பொ**துவாகப் போர் முடிந்த பிறகு போர்க்களத்தில் காணும் காட்சிகள் பயத்தையுண்டாக்கும். அருவருப்பை யும் உண்டாக்கும். ஆனால், வெற்றியடைந்து அந்த வெற்றி வெறியில் பார்க்கும்போது, அவை அனுபவிக்கத் தக்கதா கவே யிருக்கும்.

ஒரு காட்சியைப் பார்ப்போம்:

வீர தீரர்களாய், திடகாத்திர உடம்போடுகூடியவர் களாய், பல மன்னர்கள் வந்து சேரனது படையோடு எதிர்த் தார்கள். அனேகர், மார்பில் அம்பு தைக்க, அப்படியே இறந்து விழுந்து விட்டார்கள். கைகள் இருபக்கமும் மண்ணில் நீண்டு கிடக்கின்றன. கழுத்தில் மரகதத்தினால் செய்த கண்டி கிடக்கிறது. தோளில் பருத்த பொன்வளை யம் பூண்டிருக்கிறது. முன்கையில் வயிரங்கள் அழுத்திய கனத்த கடகம் பூண்டிருக்கிறது. இந்த நிலையில் ஒரு நரிக் குட்டி வந்து தோள்வளையமிட்ட தோளின்மேல் உட்கார்ந்து கொள்ளுகிறது. உட்கார்ந்தவண்ணமாக முன்கையைக் கடித்து இழுத்தது. இழுத்த மாத்திரத்தில், வயிரக் கடகம் வந்து தலையில் மோதியது. மோதியதும் புண் பட்டு 'ஓ' வென்று அலறியது.

இப்படிப் பல நரிக்குட்டிகள்.

மரகதப்பூண் மன்னவர்
தோள்வளை கீழா,
வயிரக் கடகக்கை
வாங்கித், துயர்உழந்து
புண்ணுற்(று) அழைக்கும்
குறுநரித்தே, - பூழியனைக்
கண்ணுற்று வீழ்ந்தார்
களம். (81)

## 2

பாண்டியனது பகையரசர்கள், வெகு ஆடம்பரத்தோடு வாழ்ந்தவர்கள்தான். பெரிய பெரிய மாடமாளிகைகள் கட்டி வாழ்ந்தார்கள். தாங்கள் அடைந்த வெற்றிகளை அப்போது அப்போது கொண்டாடுவதற்காக உன்னதமான தர்பார் ஹால்கள் அமைத்திருந்தார்கள். வாகைமாலையைச் சூடிக்கொண்டு சிம்மாசனத்தில் அரசன் வீற்றிருக்க, வெற்றிக் கொண்டாட்டம் எல்லாம் நடந்தது. பிறகு ஒரு காலத்தில் அந்தத் தர்பார் ஹாலும், மற்ற அரங்குகளும், ஒரே பாழாய்ப் போய் விட்டன. சுற்று வட்டகை அவ்வளவும் மனுஷ சஞ்சாரமில்லாத காடாய்ப் போய்விட்டது.

---

வாங்கி - கடித்து இழுத்து. துயர் உழந்து - சங்கடப்பட்டு. புண்ணுற்று அழைக்கும் - புண்பட்ட காரணமாகத் தாய் நரியை எண்ணி ஊளையிடும். குறுநரித்தே - பலபல நரிக்குட்டிகள் இந்த சங்கடத்தில் அகப்பட்டிருந்தன. பூழியனைக் கண்ணுற்று வீழ்ந்தார் - சேரனை வந்து எதிரே பார்த்தார்கள், அவ்வளவுதான். மார்பில் அம்பு தைத்து மண்ணில் வீழ்ந்தார்கள். களம் - அப்படிப் பலர் வீழ்ந்து கிடந்த போர்க்களம்.

குறிப்பு :—பயத்தோடு எக்களிப்பும் கூடிய பாவம்.

வாகை வனமாலை
சூடி அரசுறையும்
ஓகை உயர்மாடத்(து)
உள்ளிருந்து, கூகை
படுபேய்க்குப் பாட்டயரும்
பண்பிற்றே, - தென்னன்
விடுமாற்றம் கொள்ளாதார்
நாடு. (82)

### 3

சேரன் யுத்தகளத்தில் புகுந்து கையில் வேலைக் கொண்டு பகையரசர்களைக் குத்திச் சாய்க்கிறான். எத்தனையோ அரசர்களைக் குத்திச் சாய்க்கிறான். அவ்வளவு வீரச்செயலையும் செய்த காரணமாக அந்த வேலுக்குப் பாராட்டுச் செய்கிறார்கள். புனுகு நிறைத்த சந்தனத்தை வாரிப் பிடியில் நெடுகிலும் அப்புகிறார்கள். அந்த வேலின் கொழுவிலோ, தசை அப்படியே ஒட்டிக்கொண்டிருக்கிறது. இத்தகைய வேல், போர்களத்தில் ஒரு பக்கத்தில் கிடக்கிறது.

---

வாகை வனமாலை - வாகைப் பூவைப்போலுள்ள பட்டுக் குஞ்சத்தால் செய்த சிவந்த மாலை. வெற்றிக்கு அடையாளமாக அரசர்கள் வாகை அணிவது வழக்கம். அரசு உறையும் - சிம்மாசனத்தில் அரசர்கள் வீற்றிருக்கும். ஓகை உயர் மாடத்து - கொண்டாட்டங்களுக்காக உன்னதமாக அமைத்த மண்டபத்தில். கூகை - பெருங் கோட்டான். படுபேய்க்குப் பாட்டு அயரும் பண்பிற்றே - முதிய பேய் உறங்குவதற்காகப் பாட்டுப் பாடும் தன்மையுடையது. தென்னன் - பாண்டியன். விடுமாற்றம் கொள்ளாதார் நாடு - விடுத்த சொற்படி நடவாத அரசர்களது நாடு.

குறிப்பு:—பகையரசரது ஊரும் நாடும், பாழ்பட்டுப் போயின என்னும் விஷயத்தை அபூர்வமான வேகத்தோடும் பாவத்தோடும் காட்டுகிறது செய்யுள்.

அரும்பவிழ்தார்க் கோதை
அர(சு)எறிந்த ஒள்வேல்,
பெரும்புலவும் செஞ்சாந்தும்
நாறிச், - சுரும்பொடு
வண்டாடு பக்கமும்
உண்டு: குறுநரி
கொண்டாடு பக்கமும்
உண்டு. (83)

## 4

யுத்தம் என்பது ஒன்று ஏற்பட்டுவிட்டால் பகைவர்களிடத்தில் ஒரே ஆங்காரந்தான். எந்தக் காரணத்தையிட்டாவது பகைவர்களுக்கு இடங்கொடுக்கக் கூடாது, அப்படியே அவர்களை ஒழித்து விட வேண்டும், என்றுதான் தோன்றும். சாமானிய அரசர்களது காரியம் இது. ஆனால் யுத்த தர்மம் என்றும், க்ஷத்திரிய தர்மம் என்றும் சொல்லும் போது, கருத்தென்ன? யுத்தத்தின் இடையேயும் பகைமையை மறக்கவேண்டிய சந்தர்ப்பங்கள் உண்டு என்பது தான்.

* * * *

பகைவர் அடங்கிய ஒரு ஊரைப் பாண்டியன் முற்றுகை போடுகிறான். கோட்டைக்குள்ளிருந்த ஜனங்கள்

---

அரும்பு அவிழ் தார்க்கோதை - அரும்பு அப்போதுதானே அவிழ்ந்த பூமாலை சூடிய சேரன். அரசு எறிந்த ஒள் வேல் - பகையரசர்களைக் குத்தி சாய்த்த வேலானது. பெரும் புலவும் செஞ்சாந்தும் நாறி - கொழுவில்த் தசை மாமிசமும், கைப்பிடியில்ச் சந்தனமும், கமழ்ந்து. சுரும்பொடு வண்டாடும் - தேனீக்களோடு வண்டுகள் மொய்க்கும். பக்கமும் உண்டு - கைபிடிப் பக்கமும் உண்டு. குறுநரி கொண்டாடு பக்கமும் உண்டு - தசை ஒட்டியிருக்கும் காரணமாக நரிக்குட்டி அனுபவிக்கிற கொழுப்பக்கமும் உண்டு.

எப்போது பாண்டியனது சேனை கோட்டையை இடித்துத் தள்ளி, உள்ளே புகுந்து, தங்களையும், தங்கள் பொருளையும் நாசம்செய்து விடுமோ என்ற பயத்தில் இருக்கிறார்கள்.

இந்த நிலையில் பாண்டியனுக்குப் பிறந்த நாள் (உத்திராட நாள்) கொண்டாட்டம் வருகிறது. அப்போது பாண்டியனது தளகர்த்தன், எதிரிகளுக்குச் சொல்லுகிறான்: "உங்களுடைய கோட்டைக் கதவைச் சும்மா திறவுங்கள். ஒரு பயமும் வேண்டாம்" என்பதாக.

**கண்ணார் கதவம்**
**திறமின், களிறொடுதேர்**
**பண்ணார் நடைப்புரவி**
**பண்விடுமின் - நண்ணாதீர்!**
**தேர்வேந்தன் தென்னன்**
**திருவுத் திராடநாள்ப்**
**போர்வேந்தன் பூசல்**
**இலன்.** (84)

## 5

**சோ**ழ மன்னன் பிறந்த நக்ஷத்திரம் ரேவதி. அவனுடைய நகரத்திலுள்ளவர்கள், அந்த நாளைக் கொண்டாடுகிறார்கள். சங்கராந்தியன்று வீடுகளையும், தெருக்களையும், நாம் எப்படிச் சுத்தம் செய்கிறோமோ, அது மாதிரியே

---

**கண்ணார் கதவம்** - கோட்டை வாசலுக்கான பெரிய கதவை. **களிறொடு தேர்** - யானையையும் தேரையும். **பண்ணார் நடைப்புரவி** - அழகிய நடைகொண்ட குதிரையையும். **பண்விடுமின்** - அலங்காரஞ் செய்து பவனிவரச் செய்யுங்கள். **நண்ணாதீர்** - பாண்டியனோடு இணங்காது எதிர்த்து நிற்கிறவர்களே. **தேர்வேந்தன் தென்னன்** - தேர் பல கொண்ட பாண்டியன். **திருஉத்திராட நாள்ப் போர் வேந்தன்** - உத்திராட நக்ஷத்திரத்தில் பிறந்த வீரன் பாண்டியன். **பூசல் இலன்** - யுத்தம் செய்யவில்லை.

சோழனது தலைநகரத்தைச் சுத்தம் செய்கிறார்கள். இதெல்லாம் போக, அரசன் பெரிய பெரிய தானங்களைச் செய்கிறான். பசுக்களையும் பொன்னையும் குருமார்களுக்குத் தானம் செய்கிறான். புலவர்களுக்குப் பெரிய பெரிய யானைகளைப் பரிசாகக் கொடுக்கிறான். எல்லோருக்குமே பலன் கிடைக்கிற நாள்தான் அந்த ரேவதிநாள்.

√ **அந்தணர் ஆவொடு**
**பொன்பெற்றார், நாவலர்**
**மந்தரம்போல் மாண்ட**
**களிறூர்ந்தார், - எந்தை**
**இலங்கிலைவேல்க் கிள்ளி**
**இரேவதிநாள், என்னே**
**சிலம்பிதன் கூடிழந்த**
**ஆறு.** (85)

---

அந்தணர் - ஆலய வழிபாடு செய்யும் குருக்கள். ஆவொடு பொன் பெற்றார் - பசுவோடு பணமும் தானமாகப் பெற்றார்கள். நாவலர் - புலவர்கள். மந்தரம்போல் மாண்ட - மந்தரகிரியைப்போல் உயர்ந்து பருத்த. களிறூர்ந்தார் - யானைகளைப் பரிசாகப் பெற்று அவைகளின் மேல் ஏறித் தங்கள் வீட்டுக்குப் போனார்கள். எந்தை - எங்கள் அரசன். இலங்கிலை வேல்க் கிள்ளி - பிரகாசிக்கும் இலைபோன்ற வேல் ஏந்திய சோழன். ரேவதிநாள் - சோழனது ஜன்ம நக்ஷத்திரமாகிய இன்று. என்னே - என்ன காரணத்தினாலோ. சிலம்பி தன் கூடு இழந்தவாறு - சிலம்பிப் பூச்சி தன் கூடாகிய நூலாம் படையையெல்லாம் இழக்க நேர்ந்தது. வீட்டை வெள்ளையடித்துத் துப்புரவு பண்ணும் போது, ஒட்டடை அடிப்பது ஏற்பாடல்லவா ?

குறிப்பு :—அரசனது ஜன்ம நக்ஷத்திரத்தைக் கொண்டாடுவது பெரிய விசேஷம். தானதர்மங்களைக்கொண்டு விசேஷத்தை எடுத்துக் காட்டுவது சாமான்ய இலக்கியமுறை. ஆனால், இந்த ஆசிரியர் மிக அற்பமான சிலம்பியை வைத்துக் கொண்டாட்டத்துக்கு விளக்கங் கொடுக்கிறார். அருமையான ஹாஸ்ய முறை இது.

# 1

**பா**ண்டியனது ஆளுகையில், சிற்றரசர்கள் எல்லா ரும், வாய்தாப்படி, கணக்குப்படி, ஒழுங்காய்க் கப்பங் கட்டிவிடுவார்கள். அபூர்வமாக யாரோ ஒரு சிற்றரசன், சரியானபடி கட்டுவதில்லை. ஆனாலும், அவனுக்குப் புத்தி வரும்படியாகச் சொல்லிப் பார்ப்பான் பாண்டியன். சொல்லி யும் கேளாமல்ப் போனால் தன்னுடைய ஆட்களை விட்டு, மாட்டு மந்தைகளை யெல்லாம், கொண்டுவரச் செய்வான். அப்படிச் செய்தும் சிற்றரசன் வழிக்கு வரவில்லை யென்றால் போர்தான்; போரின் காரணமாக ஏற்படும் எல்லாப் பல னுந்தான்.

பாண்டியர்க்கு (பஞ்சவர்க்குப்) பெரிய யானைப் படை களுண்டு. ஒவ்வொன்றும் மூர்க்கமான யானை. அதனால் வெளியே போகும்போது, ஜனங்கள் விலகுவதற்காக, அதன் முதுகில், பெரிய முரசை வைத்து அடித்துக்கொண்டு போவது வழக்கம்: நெருப்பணைக்கும் இன்ஜின் போகும் போது கண்டாமணியை அடித்துக் கொண்டு போகிற மாதிரி.

கவியை இனிப் பார்க்கலாம்:

பறைநிறை கொல்யானைப்
பஞ்சவர்க்குப் பாங்காய்த்
திறைமுறையின் உய்யாதார்
தேயம், முறைமுறையின்,
ஆன்போய் அரிவையர்போய்
ஆடவர்போய்ப், - பேய்ஈன்ற
ஈன்போய் உறையும்
இடம். (86)

## 2

ஒரு பெண், பாண்டியனுடைய வீரச் செயல்களை யெல்லாம் கேட்டு அனுபவித்தவள். அவனை நேரிலும் கண்டு விட்டாள். அப்படியே காதல் கொண்டுவிட்டாள். அவள் வசிக்கும் வீட்டுப் பக்கத்திலுள்ள பூந் தோட்டத்தின் அருகே பாண்டியன் சவாரி போவது வழக்கம். அதனால், அவனைச் சந்திக்கவும், அவனுடன் பேசவும் வசதி இருந்தது. தன்னுடைய உயிர்த் தோழிகளுடன் கூடி உல்லாசமாய் இருக்கும்போது, காதல் வெறியில் என்ன என்ன வெல்லாமோ, கோட்டை கட்டிப் பேசுவாள். தோழிகள் அவரவர் வீட்டுக்குப் போன பிறகு, தனித்து விடுகிறாள். யோசனை பண்ண ஆரம்பிக்கிறாள்.

---

பாங்காய் - ஒழுங்காக. திறை முறையின் உய்யாதார் - கப்பத்தை வாய்தாப்படிக் கட்டாதவர்கள். முறை முறையின் - ஒன்றன்பின் ஒன்றாகக் கீழே வருமாறு. ஆன்போய் - மாட்டு மந்தை அகன்று. அரிவையர் போய் - யுத்தம் ஏற்பட்ட காரணமாகப் பெண்கள் அகன்று. ஆடவர்போய் - ஆடவர்கள் இறந்தொழிந்தோ, அல்லது காடு நோக்கியோ, போய். இப்படியெல்லாம் போனபிறகு, பேயானது பெற்ற குழந்தையைக்கொண்டு போய்ச் சௌகரியமாகத் தங்கும் அந்த ஊரில், ஊர் அவ்வளவு பாழாய்ப் போய்விட்டது.

மாணார்க் கடந்த
　　மறவெம்போர் மாறனைக்
காணுக்கால் ஆயிரமும்
　　சொல்லுவேன் - கண்டக்கால்,
பூண் ஆகம் தாஎன்று
　　புல்லப் பெறுவேனோ? -
நாணோ(டு) உடன்பிறந்த
　　நான். (87)

3

பொதிகைமலை என்பது, முக்கியமாகத் திருநெல் வேலி ஜில்லாவில் இருக்கும் மேற்கு மலைத் தொடர்தான். இந்தச் சாரலில் முக்கியமான ஸ்தலங்கள் பாவநாசமும் திருக்குற்றாலமும். இந்த இடங்களுக்குக் கார்த்திகை மாசத்

---

மாணார்க் கடந்த - மாணாரைக் கடந்த; பகைவர்களைப் போரில் வென்ற. மற வெம்போர் மாறனை - வீரமாகக் கொடிய போர்களை நடத்தும் பாண்டியனை. காணுக்கால் ஆயிரமும் சொல்லுவேன் - அவன் இல்லாத இடத்தில் நான் ரொம்பவும் பெருமைபாராட்டிப் பேசிக் கொண்டிருப்பேன். குதிரையில் போகும் போது, குதிரையை நிறுத் துங்கள் என்பேன். என்னைப் பார்க்கக் கூடாதா என்பேன். கண் தெரிய வில்லையோ என்பேன். நானே பேசட்டும் என்று சோதிக்கிறீர்களா, என்று இப்படி யெல்லாம் ஆயிரமும் சொல்லுவேன். பூண் ஆகம் - ரத்ன கண்டிகள் அணிந்த மார்பை. தா என்று புல்லப் பெறுவேனோ- கொடுங்கள் என்று வினயமாய்ச் சொல்லி, அணையப் பெறுவேனோ. பெறவாவது ஒன்றுவது! பிறந்தபோதே நோய்போல் உடன்பிறந்த நாணந்தான் வந்து தடுத்து விடுகிறதே!

குறிப்பு:—ஏக்க பாவமானது 'புல்லப் பெறுவேனோ' என்பதில் ஒலிக்கிறது. 'நாணோடு உடன் பிறந்த நான்' என்னும் கடைசி அடி, பெண்ணின் இதயம் கரைந்தே போய்விட்டது என்ற பாவத்தை அரு மையாய்க் காட்டுகிறது.

தில் வனபோஜனத்துக்காகப் போய் ஆடவர் பெண்டிர் உல்லாசமாகக் காலங் கழிப்பதுண்டு. மலேயிலுள்ள நீரோட்டத்துக்குப் பக்கமாகவும், அருவிக்குப் பக்கமாகவும், மரங் கொடி படர்ந்த நிழலில் சமையல் செய்வார்கள். சமையல் செய்வதற்கான விறகு, பட்டு முறிந்து கிடக்கும் மரக்கிளே கள் தான். சந்தன மரங்கள் பட்டு முறிந்து கிடப்பதையும் சாதாரணமாய்ப் பார்க்கலாம். அடுப்புக்குத் தீ மூட்டும் போது சந்தனச் சிராய்களும் மற்றச் சிராய்களோடு சேர்ந்து விடும். வாசனே புறப்பட்டுக் காடெங்கும் கமழப் பார்க் கலாம். இன்றைக்கும் பார்க்கலாந்தான்.

*　　*　　*　　*

**பா**ண்டியன் மதுரையிலிருந்து பாவநாசத்துக்கு வருகிருன். அங்கே மலேச்சாரலில் தங்குகிருன். காலம், கார்காலமாகிய கார்த்திகை மாசம். அவன் தங்கின இடத் துக்குக் கொஞ்சம் வடக்கே தள்ளி, ஒரு குடும்பம் தங்கு கிறது. குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண் வந்து சோலேக் குள் தனியாக உலாவிக்கொண்டிருந்தாள். அங்கே பாண் டியனேச் சந்திக்க நேர்ந்தது. காதல் வெறி உண்டாய் விட்டது அவளுக்கு. உணர்ச்சி தன் வசத்திலில்லாததால், கையிலிருந்த வளேயல் நழுவி எங்கேயோ விழுந்துவிட்டது. பெற்ருேர்கள் செவிலியர்கள் எல்லாரும், வளேயல்எங்கே எங்கே என்று கேட்டார்கள். பதில்ச் சொல்ல முடியவில்லே.

வளேயலேப் போக்கடித்த காரணமாகக் கவலே கொண்டு, ஒரு மரத்தடியில் தனியாய்ச் சோர்ந்து உட்கார்ந் திருக்கிருள் பெண்.

அப்போது, வடகாற்று சுகமாக அடித்துத் தென் புறமாகச் சிறிது தூரத்தில், பாண்டியனிருந்த இடம் நோக் கிப் போகிறது. காதல்வெறி மூளுகிறது. அப்படி மூண்ட நிலேயில் வடகாற்றை நோக்கிச் சொல்லுகிருள் பெண் :

" அரசர்களுக்குக் குடையும் செங்கோலுமிருக்கின்றன. மக்களைப் பாதுகாப்பதற்குக் குடை ஒரு அறி குறியாகவும், திருடுதல் முதலான தீச்செயல்களைக் கண்டிப்பதற்குச் செங் கோல் ஒரு அறி குறியாகவும் இருக்கின்றன. பாண்டியனைப் பார்த்துப் போகிறாயே, ஓ வாடைக் காற்றே! அவனிடம் இதைச் சொல்வாயாக!"

**மாறடுபோர் மன்னர்**
**மதிக்குடையும் செங்கோலும்**
**கூறிடுவாய் நீ,ஓ!**
**குளிர்வாடாய்! - சோறடுவார்**
**ஆரத்தால்த் தீமூட்டும்**
**அம்பொதியில்க் கோமாற்(கு)என்**
**வாரத்தால்த் தோற்றேன்**
**வளை!** (88)

---

மாறு அடுபோர் மன்னர் - பகைவரை வெல்லும் படியாகப் போர் புரியும் வீர மன்னரது. மதிக் குடையும் செங்கோலும் கூறிடுவாய்- சந்திரனைப் போன்ற வெண்கொற்றக் குடையும் செங்கோலும் உண்டு என்பதை ஞாபகப் படுத்துவாயாக. ஓ குளிர் வாடாய் - ஓ குளிர்ந்த வாடைக் காற்றே. சோறு அடுவார் - மரத்தடியில் சோறு சமைக்கிற வர்கள். ஆரத்தால் தீ மூட்டும் - சந்தனச் சிராய்களால் அடுப்பு மூட்டும். அம்பொதியில்க் கோமாற்கு - அழகிய பொதிகை மலைக்கு அரசனான பாண்டியன் பொருட்டு. வாரம் - அன்பு. தோற்றேன் வளை - என்னுடைய வளையல்களை நான் இழக்க நேர்ந்தது, அவன் பறித் துக்கொண்ட காரணமாக. அவனிடத்தில் நான் அன்பு வைத்துத் தானே இருக்கிறேன். அப்படி யிருந்தும் அவன் என் வளையல்களைப் பறிக்கலாமா?

குறிப்பு:—பகல்க் கனவில்க் கண்டவாறாக எழுந்தது செய்யுள். அதாவது, வளையல்களைப் பாண்டியன் பறித்துக்கொண்டு போனதெல் லாம் பகல்க் கனவு.

## 4

**பா**ண்டியனுக்குக் காதல் நாயகிகள் ஏதோ பலர். ஒரு நாள் இரவு ஒரு நாயகி வீட்டுக்கு அவன் போகிறான்: மற்றவர்களுக்கு அவனது சகவாசம் இல்லை. அவர்கள் அது காரணமாக அவனையே எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். தூக்கமோ வரவில்லை. மனம் ஒரே சஞ்சலத்துக்கு உள்ளாயிருக்கிறது. அந்த நிலையில் இரவைப் பார்த்துச் சீக்கிரம் விடிந்து தொலை என்கிறார்கள். ஆனல், அவனது சகவாசத்தை அன்று பெற்ற நாயகியோ இரவை, விடிந்து விடாதே என்கிறாள்.

புல்லாதார் வல்லே
புலர்கென்பார், புல்லினார்
நில்லாய் இரவே
நெடி(து) என்பார் - நல்ல
விராஅமலர்த் தார்மாறன்
ஒண்சாந்(து) அகலம், -
இராஅளிப்பட்ட(து)
இது ! (89)

---

புல்லாதார் - பாண்டியனது மார்பை (அகலம்) அணையாதவர்கள். வல்லே புலர்க என்பார் - சீக்கிரமாக விடிந்து விடு என்பார் (இரவைப் பார்த்து). புல்லினார் - மார்பை அணைந்தவர்களோ. நில்லாய் இரவே நெடிது என்பார் - இந்தப் பாண்டியனது மார்பு எனக்கு இன்று கிடைத்து விட்டது. விடிந்து விட்டால் பிரிந்து போய்விடுவான். ஆகையால், இரவே, நீண்டு தங்குவாயாக என்று, சொல்லுவார்கள். விரா மலர்த் தார் மாறன் - வாசனையுள்ள பல புஷ்பங்களை விரவித் தொடுத்த மாலையை அணிந்த பாண்டியனது. ஒண் சாந்து அகலம் - நிறமான சந்தனம் பூசிய மார்பை - புல்லினார், புல்லார். இரா அளிப் பட்டது இது - இரவானது இந்த விதமாகப் பரிதாப நிலைக்கு உள்ளாகியது. ஏதோ ஒருத்தி இரு என்கிறாள். பலர் போ போ என்கிறார்கள் !

## 5

**பெ**ண் குழந்தைகளுக்கு மூன்று நான்கு வயசாய் இருக்கும்போது, சொல் எல்லாம் மழலைச் சொல். அப் போது விளையாட்டாக அவர்களிடம் என்னவெல்லாமோ பேசுவார்கள் தாய்மார். தாய்மார் பேசுவது விசித்திரமாக இருக்கும்.

*　　　*　　　*　　　*

'**க**ண்ணே, இந்த ராஜாவை உனக்குக் கட்டி விடு வோமா' என்று ஒரு படத்தைச் சுட்டிக் காட்டுகிறதைப் பார்க்கிறோம். குழந்தையும் மழலைச் சொல்லில் 'சரி' என்று விஷயந் தெரியாமல் சொல்லும். இந்த விதமான நாடகம் குழந்தைக்கும் தாய்க்கும் சதா நடந்துகொண்டிருக்கும். சலிப்பே கிடையாது தாய்மார்களுக்கு இந்த விஷயத்தில்.

*　　　*　　　*　　　*

ஒரு பருவமான பெண் சோழனை (கோழிக் கோமா னைக்) கண்டு காதலுற்று விடுகிறாள். காதல் நோய் அவளை மிகவும் துன்புறுத்துகிறது. இது தாய்க்குத் தெரிந்து விடுகிறது. தாய் ரொம்பவும் கண்டிக்கிறாள். ஒன்றும் ஓட வில்லை பெண்ணுக்கு :

குதலைப் பருவத்தே
　　கோழிக்கோ மானை
வதுவை பெறுகென்றாள்
　　அன்னை : அதுபோய்,
விளைந்தவா இன்று ! -
　　வியன் கானல் வெண்தேர்த்
துளங்குநீர் மாமருட்டி
　　அற்று. (90)

---

குதலைப் பருவத்தே - மழலைச் சொல்லோடிருக்கும் குழந்தைப் பரு வத்தே. கோழிக் கோமானை - உறையூருக்கு அதிபதியாயுள்ள சோழனை

வதுவை பெறுக என்றாள் அன்னை - கலியாணம் செய்து கொள் என்றாளே அன்னை. அதுபோய் அப்படியெல்லாம் சொல்லுதல் ஒழிந்து. விளைந்தவா இன்று - என்ன விதமாக இப்போது முடிந்துவிட்டது! சோழனைப் பார்க்கக் கூடாது என்கிறாள். அவன் மேலுள்ள காதலை மறந் தொழி என்கிறாள். இது எப்படி இருக்கிற தென்றால்: வியன் கானல் வெண்தேர் துளங்கு நீர் - விரிந்த பாலையில்க் கானல் பரந்து கானல் நீர் தோன்ற வெண்தேர் - பேய்த்தேர் (கானல் நீர்). துளங்குநீர் - அலையடிப்பதாகத் தோன்றும் நீர்ப்பரப்பு. மாமருட்டி அற்று - மான் முதலிய மிருகங்களை ஏமாற்றியதைப்போலத்தான். மா - மிருகங்களுக்குப் பொதுப் பெயர்.

குறிப்பு :—குழந்தைப் பருவத்தில் நடக்கும் பொருளில்லாத ஒரு விளையாட்டை, காதலோடு பிணைத்து அருமையான உணர்ச்சி பாவத்தையுண்டாக்கியிருக்கிறது செய்யுள்.

**பா**ண்டியன்மீது ஒரு பெண் காதல் கொண்டு விட்டாள். அதை வெளியில்ச் சொல்லவோ, ஒரே நாணம். அதைப்பற்றி ஒருவரிடமும் பேசாமல் மனசிலேயே அடக்கிக் கொண்டிருந்தாள். சிலநாள் ஆகவும், அடக்கமுடியாமல், தன் தோழியைக் கூப்பிட்டு, தூது போகச் சொல்லுகிறுள். அப்படிச் சொல்லும்போது கூட, நாணம் வந்து தடுக்கிறது. ஆனாலும், ஆசை விட்டபாடாக இல்லை.

பாண்டியனிடம் தன்னை இன்னுர் என்று சொல்லிவிடக் கூடாதாம். தன் பெயரைச் சொல்லிவிடக் கூடாதாம். ஊரைச். சொல்லிவிடக் கூடாதாம். என்னத்தைச் சொன்னுலும், தாய் சதா காவல் காத்துக் கொண்டே யிருப்பாள், பொல்லாதவள் என்பதைச் சொல்லி விடவே கூடாதாம்

**என்னை உரையல், என்**
**பேர்உரையல் ஊர்உரையல்,**
**அன்னையும் இன்னள்**
**எனஉரையல் ; பின்னையும்,**
**தண்மைபடா மாலைத்**
**தமிழ்நர் பெருமாற்(கு)என் -**
**பெண்மைபடா ஆறே**
**உரை.** *(91)*

---

என்னை உரையல் - நான் இந்த வீட்டைச் சேர்ந்தவள், இன்னுர் மகள் என்பதைச் சொல்லக்கூடாது.

உரையல் - உரையாதே. இன்னள் - இந்தப் பொல்லாத தன்மை உடையவள். பின்னையும் - ஆனுலும். தண்மை படா மாலை - எப்போதும் வாடாத மலர்மாலை சூடிக்கொண்டிருக்கும். தமிழ்நர் பெருமாற்கு

## 2

**பா**ண்டியன் பவனி போகும்போது கண்டு காதல் கொண்டாள் ஒரு பெண். அது காரணமாக, அவளுடைய செயல்கள் மாறுபட்டன. பவனி வரும் போதெல்லாம், பட படவென்று வாசலுக்கு ஓடிப்போய்ப் பார்ப்பாள். பார்த்து விட்டுத் திரும்ப வேண்டியதுதான்: சரியாய்ச் சாப்பாடு சாப்பிடுகிறதில்லை. ஏதோ பித்துப் பிடித்தவள்போல் நிற் பாள். இதையெல்லாம் பார்த்து, "பாண்டியனை நீ பார்ப்பது பிசகு" என்று தாய் சொன்னாள். தாய் சொன்னது மகளுக் குப் பிடிக்கவில்லை. சிறிது நேரங் கழித்து, தன்னோடு வயசில் ஒத்த தோழி ஒருத்திவந்தாள். அவளோடு, குஷாலாய், சகல விஷயங்களைப் பற்றியும் பேசிக்கொண்டிருப்பது வழக்கம் அவளைப் பார்த்துச் சொல்கிறாள்: முதலில் சாமானியமான விஷயத்தைப்பற்றிப் பேசுகிறாள்.

"உன்னுடைய தோள் நீண்டு அழகாக இருக்கிறது தோள் வளையம், ஆசையோடு தோளைக் கட்டிக் கொள்வது போலிருக்கிறதே. அவ்வளவு பொருத்தமாக இருக்கிறது. தோளுக்குத் தோள் வளையம். மைதீட்டியது காரணமாக உன்னுடைய கண் சாக்ஷாத் வாளாகவே யிருக்கிறது, பேஷ் பேஷ்!"

---

- பாண்டியனுக்கு. என் பெண்மை படா ஆறே உரை - ஒரு பெண் இப்படியெல்லாம், தானே தன் காதலை வெளியிடவும், தூது செலுத் தவும் செய்யலாமா, பெண்மைக்கு அழகா இது, என்றெல்லாம் தூற்றி விடுவார்கள். ஆகையால் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். ஆனாலும், எப்படியாவது பாண்டியனுக்கு என் காதலைச் சொல்லிவிட வேண்டும்.

குறிப்பு :—தூது சொல்லும்போது நாணத்தினால் மனம், அப்படி யும் இப்படியும் தத்தளிக்கிறது. தத்தளிக்கிற பாவத்தை, செய்யுளி லுள்ள அசைவுகள் நன்றாய்க் காட்டுகின்றன.

வளையவாய் நீண்டதோள்
　　வாள்க்கணாய்! அன்னை
இளையளாய் மூத்திலள்
　　கொல்லோ? தளையவிழ்தார்
மண்கொண்ட தானை
　　மறங்கனல்வேல் மாறனைக்,-
கண்கொண்டு நோக்கல்என்
　　பாள். (92)

## 3

**நா**யகர்கள்நீராடுவதற்காக,மனைவியர் வாசனைப்பொடி இடிப்பது பூர்வ காலத்து வழக்கம். அரசர்களுடைய மனைவிமாரும், அந்த விதமாக வாசனைப் பொடி இடித்துத் தயார் பண்ணுவார்கள். அப்படி இடிப்பதற்காகத் தனியான கூடம், தங்கப்பூண் கட்டிய உலக்கை, எல்லாம் உண்டு. இடிக்கும் போது பாடுவதற்காகப் பாடல்களும் உண்டு.

பாண்டியனைப் பற்றிய பாடல்கள் மிகச் சிறந்தனவாய் இருந்தன. மீனக் கொடியைப் பற்றியும், தேரைப் பற்றியும், முக்கியமாக முத்தாரத்தைப் பற்றியும், எத்தனையோ

---

வளை அவாய் - தோள் வளையம் ஆசையோடு கட்டிக் கொண்டதாய். தளை அவிழ் தார் - இதழ் விரிந்த மாலை சூடிய (மாறனை). மண் கொண்ட தானை - பல தேசங்களிலும், போர் புரிந்து பாண்டியனுக்கு வசமாக்கிய சேனை. தானை - சேனை. மறங்கனல் வேல் - வீரமே பிரகாசித்துக் கொண்டிருக்கும் வேல். நோக்கல் - நோக்காதே.

குறிப்பு:—தாயானவள் பிறந்தபோது கிழவியாகவே பிறந்தாளோ, என்று பெண் சொல்லுகிறதில் ஏக்கம், பரிதாபம், கோபம். இந்த பாவங்கள் அபூர்வமாய் அமைந்திருக்கின்றன.

அருமையான பாடல்கள். இந்தப் பாடல்களைத் தோழிகளுடன் பாடிக்கொண்டு, மனைவியர் சுண்ணம் இடிப்பார்கள்.

*　　　*　　　*

**பா**ண்டியனைக் கண்டு காதலுற்ற ஒரு பெண், தோழிகளைத் தூதுவிட்டு, அவனை மணக்கலாம் என்று எண்ணுகிறாள். தோழிகளுடன், இதுபற்றிப் பேசவும் செய்கிறாள். ஆனால், அதற்கு வழியே இல்லாமலிருக்கிறது. என்ன செய்வாள் பெண்?

**கொடிபாடித் தேர்பாடிக்**
**கொய்தண் தார் மாறன்**
**முடிபாடி முத்தாரம்**
**பாடித், தொடிஉலக்கை**
**கைம்மனையில் ஓச்சப்**
**பெறுவெனோ? யானும்ஓர் -**
**அம்மனைக் காவல்**
**உளேன். (93)**

---

கொய் தண் தார் மாறன் - அப்போது பறித்துக் கட்டிய குளிர்ந்த மாலையைச் சூடிய பாண்டியனது. முத்தாரம் - பாண்டியனுக்குச் சிறப்பாயுள்ளது. கொற்கையில் எடுத்து உலகெங்கும் போகும் முத்துக்கள். அதனால் முத்தாரத்தைப் பாடுவதில் தனியான சுகம் உண்டு. தொடி - தங்கப்பூண். கை மனையில் - அழகிய வேலைப்பாடமைந்த மரக்கைகள் போட்டு அமைந்த கூடத்தில். ஓச்சப் பெறுவனோ - வாசனைப் பொடி இடிப்பதற்காக உலக்கையை ஓச்சப் பெறுவேனோ. யானும் - துர்ப்பாக்கியசாலியான நானும். ஓர் அம்மனைக் காவலுளேன்-தாயின் காவலுக்கு உள்ளானவளாகிய யான்.

## 4

**பா**ண்டியனது நாயகி, தோழியிடம் சொல்லுகிருள்: "எனக்குப் பாண்டியனிடத்தில் ரொம்பக் கோபம். அது காரணமாக ஊடினேன். அவன் எவ்வளவோ சமாதானம்

---

குறிப்பு:—பாண்டியனது முத்தாரத்தைச் சிறப்பித்துப் பாடிய கவிகள் எத்தனையோ. உதாரணத்துக்கு இதை வைத்துக்கொள்ளலாம்.

பாண்டியது அழகில் ஈடுபட்ட மகளிர் அவனைத் தெய்வமென்றே கருதுகிருர்கள். காதல்க் கொழுந்தாயுள்ள கிருஷ்ணனுகவே பாவிக்கிருர்கள்:

கோவா மலையாரம்
கோத்த கடலாரம்
தேவர்கோன் பூணரம்
தென்னர்கோன் மார்பினவே!
தேவர்கோன் பூணரம்
பூண்டான், - செழுந்துவரைக்
கோகுலம் மெய்த்துக்
குருந்தோசித்தான் என்பரால்!

[சிலப்பதிகாரத்தில் காணும் ஊர்வரி வாழ்த்து.]

கோவாமலை ஆரம் - மலையாகக் கோத்தலுக்கு இசையாத மலை ஆரம்; அதாவது பொதிகை மலையில் விளைந்த சந்தனம். கோத்த கடலாரம் - முத்தாரம். தேவர்கோன் பூண் ஆரம் - அந்தக் காலத்துப் பர்மா தேசத்து அரசன் அருமையான மிகப் பருமனை மாணிக்க மாலையொன்றைப் பாண்டியனுக்குப் பரிசாக அனுப்பியிருந்தான். அந்த மாலையையும், அலங்காரமாகப் பாண்டியன் அணிவதுண்டு. செழுந்துவரை - வளம் பொருந்திய துவாரகை. கோகுலம் மேய்த்துக் குருந்து ஒசித்தான் - கண்ணபிரான்.

கடைசியாக 'ஓர் அம்மனைக் காவலுளேன்' என்று துண்டுபட முடிப்பதில் ஏக்க பாவம் அப்படியே வெளிப்படுகிறது.

பண்ணப் பார்த்தான். ஏதோ காரணங்களை எடுத்துச் சொன்னான். எதற்கும் நான் இணங்காமல் அவனை உதறி விட்டேன். என் பிடிவாதம் காரணமாக அவன் ஊடிவிட்டான். இப்படி நேர்ந்து விட்டதே என்று நான் சமாதானம் பண்ணப் பார்த்தேன். அவன் பிடிவாதமாய் இருந்தான். பிறகு எனக்கும் எரிச்சலுண்டாய் விட்டது.''

**யா**ன் ஊடத் தான் உணர்த்த,
யான் உணரா விட்டதற்பின், -
தான் ஊட யான் உணர்த்தத்
தான் உணரான்!

இப்படித் தோழியிடம் சொல்லிவிட்டுச் செய்தியை முடிக்கிற பாவத்தைப் பார்க்கவேண்டும்.

**யா**ன் ஊடத் தான் உணர்த்த,
யான் உணரா விட்டதற்பின்,
தான் ஊட யான் உணர்த்தத்
தான் உணரான்; தேன் ஊறு
கொய்தார் வழுதி
குளிர்சாந்(து) அணி அகலம்
எய்தா(து) இராக்கழிந்த
ஆறு. (94)

---

உணர்த்த - சமாதானம் பண்ண. யான் உணராவிட்டதற்பின் - சமாதானம் அடையாமல் உதறித் தள்ளியபின். குளிர் சாந்து அணி யகலம் எய்தாது - குளிர்ந்த சந்தனத்தைப் பூசிய மார்பை அணையாது. இராக்கழிந்த ஆறு - இரவு முழுவதும் வீணாய்ப்போன விதம் இது.

## 5

ஒரு பெண் பூந்தோட்டத்தில் நின்று பூக்கொய்து கொண்டிருந்தாள். அந்தப் பக்கமாக, சேரன் குதிரைமேல் ஏறிச் சாவகாசமாகப் போய்க்கொண்டிருந்தான். அவனும் அந்தப் பெண்ணும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண் டார்கள். காதல் நோக்காகவே பார்த்துக் கொண்டார்கள். ஆனாலும், தாமதிக்காமல் அப்படியே போய்விட்டான் அரசன். சிறிது நேரங் கழித்துப் பெண்ணிடம் தோழி வருகிறாள். நடந்த செய்தியை அவளிடம் சொல்லுகிறாள் பெண் :

“சேரன் இந்த மாந்தை நகரத்தை ரொம்ப ரொம்பத் திறமையோடு ஆளுகிறானாம். எனக்குத் தெரிந்த மட்டிலும் அவ்வளவு கூரிய அறிவுடையவன் என்று சொல்ல முடிய வில்லை. கூர்ந்த அறிவுடையவனாக இருந்தால், என் பார்வையினால் என் மனசை அறிந்திருப்பான். ஆனால் அறியவில்லை. நாம் சொல்லித்தான் தீர்க்கவேண்டியிருக்கிறது. நம்முடைய காரியத்தை !”

இவ்வாறாகச் சொல்லி நிறுத்துகிறாள். ஐந்து நிமிஷம் மௌனமாய் இருக்கிறாள். விஷயத்தை லஜ்ஜை காரணமாக மாற்றப் பார்க்கிறாள் :

“இன்றைக்கு, உன்னுடைய திலகம் வாய்ப்பாய் விழுந்திருக்கிறது. நெற்றி ரொம்ப அழகாயிருக்கிறது” என்று சொல்லிவிட்டு, சிறிது நேரம் மௌனமாக இருக்கிறாள். பிறகு பேசுகிறாள் :

மல்லல்நீர் மாந்தையார்
    மாக்கடுங்கோக்(கு) ஆயினும்
சொல்லவே வேண்டும்
    நமகுறை ; - நல்ல
திலகங் கிடந்த
    திருநுதலாய் ! - அஃதால்,
உலகங் கிடந்த
    இயல்பு. (95)

---

மல்லல் நீர் மாந்தையார் - நீர்வளம் நிறைந்த மாந்தையிலுள்ள குடிகளது. மாக் கடுங்கோக்கு ஆயினும் - அரசனுகிய சேரனுக்கு ஆனாலும். நம குறை - நமக்கு வேண்டிய காரியத்தை, அதாவது காதலை. அஃதால் உலகங் கிடந்த இயல்பு-அப்படியிருக்கிறது உலகத்தி லுள்ள ஜனங்களது தன்மை - மனசை அறியும் தன்மை !

# 1

மக்களுக்கு, ஒரு பொருளைப் பாராமலிருக்கும்போது, அதனிடத்து அவ்வளவாக ஆசை ஏற்படுவதில்லை. அந்தப் பொருளைக் -குறித்து ஒருவர் பேசினாலும், ஆசை எழுவதில்லை.

இந்தத் தத்துவத்தை ஒட்டித்தான் வியாபாரிகள் சாமான்களைக் கண்ணாடி அலமாரிகளிலும், கண்ணாடி ஜன்னல்களிலும் அடுக்கிவைக்கிறார்கள்.

விலைப்பட்டியைப் பார்த்தமாத்திரத்தில் சாமான் வாங்கத் தோன்றாது. கண்ணாடி வழியாகப் பார்க்கும்போது தான் வாங்கத் தோன்றும்; வாங்காமலிருப்பதும் கஷ்டந் தான்.

காதல்த் தத்துவத்திலும் இது உண்மை. நாயகனைப் பாராமலிருக்கும்போது, அவன்மேலுள்ள கோபத்தையெல்லாம் கொட்டத் தோன்றும். அவனை, நாலு பெண்கள் முன்னிலையில், இல்லாதபடியெல்லாம் பேசத் தோன்றும். ஆனால், நேரில் பார்த்தவுடன் கோபமெல்லாம் ஆறிவிடும். அவன்மேலுள்ள ஆசைதான் மிஞ்சும்.

வருக குடநாடன் !
    வஞ்சிக்கோ மான் ! என்(று)
அருகலர் எல்லாம்
    அறிய, ஒருகலாம்
உண் டாய் இருக்க,அவ்
    ஒண்தொடியாள் மற்றவனைக் -
கண்டாள், ஒழிந்தாள்
    கலாம்! (96)

## 2

சேரன் பவனி போகும்போது, அவனை ஒரு பெண் பார்த்துவிட்டாள். அப்படியே காதல்வெறி கொண்டு விட் டாள். மனசு தன் வசத்திலில்லை. சாப்பாட்டுக்கு முன் உட்கார்ந்தால், ஒரு கவளங்கூட உட்கொள்ளாது மணிக் கணக்காய் உட்கார்ந்து விடுவாள். சில வேளை சுவருக்கு எதிரே உட்கார்ந்துகொண்டு ஒரே வெறித்த பார்வையாய்ப் பார்த்துக் கொண்டிருப்பாள். இதை யெல்லாம் கண்டாள் தாய். ஏதோ, பேய் பிடித்து ஆட்டுகிறது என்று எண்ணி, அடுத்த வீட்டுக்காரியை (வயசானவளைக்) கூப்பிட்டு விட் டாள். அவள் வந்தாள். அவளிடம் செய்தியைச் சொன் னாள்.

---

வருக - வரட்டும் ஒரு கை பார்க்கிறேன். குட நாடன் - குட நாட் டுக்கு ராஜாவாம், ரொம்ப அழகு! வஞ்சிக் கோமான் - வஞ்சிக் கோமான் என்று பட்டம் வேறு கேடு. என்று - இப்படி யெல்லாம் ஆங்காரமாய் வைதுகொண்டு. அருகலர் எல்லாம் அறிய - பக்கத்தி லுள்ள தோழியர் சேடியர் எல்லாருக்கும் தெரியும்படியாக- ஒரு கலாம் உண்டாய் இருக்க - ஒரு களேபரம் நெடு நேரமாக நடந்து

வந்தவள் சொல்லுகிருள் :—“இதே மாதிரி நாலாந் தெருவிலுள்ள பெண்ணுக்கும் பிடித்திருந்தது. அதை நீக்குவதற்கு ஒரு உபாயம் சொன்னேன். அதாவது, தோட்டத்தில் இடம்பண்ணி, அதில் வெள்ளாட்டின் இரத் தத்தைத் தெளிக்கவேண்டும்; ஒரு புதுக்குடத்தில் தண் ணீர் நிறைத்து மாங்குழை வைத்து ஜபிக்க வேண்டும்; பெண்ணே, இடம் பண்ணிய இடத்தில் ஆசனமிட்டு உட் கார்த்தி, குடத்துத் தண்ணீரைத் தலையில் விடவேண்டும் என்று சொன்னேன். தாயும் அப்படியே செய்தாள். பெண் ணுக்குப் பிடித்திருந்த பேய் நீங்கிவிட்டது. உன் மகளுக் கும் அப்படியே செய்யவேண்டும்.”

இப்படியாகச் சொன்னுள் அடுத்த வீட்டுக்காரி. அவ் வளவையும் அரங்கிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தாள் பெண்.

அடுத்த நாள் காலே, தாயானவள், தோட்டத்தின் ஒரு மூலேயில், வெள்ளாட்டு ரத்தத்தைத் தெளித்து, இடம் பண்ணுகிருள். ஆசனம் போட்டிருக்கிறது. மாங்குழை யோடு, தண்ணீர்க் குடமுமிருக்கிறது.

ஜன்னல் பக்கம் நின்று கொண்டிருக்கிருள் பெண். அந்த வேளே, தோழி வருகிருள். அவளிடம் தாயின் செயல்களைச் சுட்டிக் காட்டிப் பேசுகிருள் :

---

கொண் டிருக்கையில். அவ் ஒண்தொடியாள் - அந்தப் பெண்ணுனவள். மற்றவனே - அந்தச் சேரனே. கண்டாள் - எதிர்பாராது தனக்கு நேரில் வரக் கண்டாள். அவ்வளவுதான். ஓழிந்தாள் கலாம்- கோபம் வசவு எல்லாம் அப்படியே பஞ்சாய்ப் பறந்து போய்விட்டது.

குறிப்பு :—கோபத்துக்கும் காதலுக்கும் இடையே ஒருவிநாடி கூட இல்லே, என்ற பாவம், கடைசி அடியில் அபூர்வமாக அமைந் திருக்கிறது. அருகலர் எல்லாம் அறியவே வசவெல்லாம் ஒழிந்தது என்பது குறிப்பு. உணர்ச்சி இப்படித் திடீரென்று மாறுவதை நம்பத் தோன்ருது. ஆனல் அது உண்மையிலும் உண்மை.

காராட்(டு) உதிரம் தூஉய்,
அன்னை களன் இழைத்து,
நீராட்டி நீங்கென்றால்
நீங்குமோ ? போராட்டு
வென்று களங்கொண்ட
வெஞ்சினவேல் கோதைக்(கு)என் -
நெஞ்சு களங்கொண்ட
நோய். (97)

## 3

சமயத்தில் இரண்டு விஷயங்களைக் கவனிக்க வேண்டும். ஒன்று, தத்துவ உண்மை: அதாவது கடவுள், இறுதியில்லாத இடமெங்கும் பரவி நிற்கிறான்: உயிர் உள்ளன — உயிர் இல்லாதன ஆகிய எல்லாப் பொருள்களிலும் நின்று ஆட்டுகிறான். இந்த உண்மையில்த் திளைத்து ஆனந்திப்பது ஒருபுறமிருக்க, வழிபாட்டுக்குரிய உருவத்தில் ஈடுபட்டு, பேரானந்தம் கொள்ளுகிறது சமயத்தின் மற்றைய முடிபான உண்மை.

நம்முடைய மூதாதைகள் முதலில் சொன்ன உண்மையையும் இரண்டாவதாகச் சொன்ன அடையாளத்தையும் அபூர்வமாய் அனுபவித்திருக்கிறார்கள்.

* * * *

---

காராட்டு உதிரம் - வெள்ளாட்டின் இரத்தம். தூஉய் -தெளித்து அன்னை களன் இழைத்து - அதோ தாய் இடம் பண்ணிவைத்து. போராட்டு - யுத்தத்திலே. களங்கொண்ட - போர்க்களத்தில், எதிரிகள் போட்டுப்போன வில், வாள், மகுடம் எல்லாவற்றையும் கைப்பற்றிய. வெஞ்சின வேல் கோதைக்கு - வீரம் பிரகாசிக்கும் வேல் ஏந்திய சேரன் சம்பந்தமாக. என் நெஞ்சு களங்கொண்ட நோய் - என் நெஞ்சை யெல்லாம் அரித்த நோயாகிய காதல்.

முருகன் வழிபாடு, மிகப் பூர்வமான காலத்திலிருந்து. தமிழ் மக்களது இதயத்தைக் கொள்ளை கொண்டிருக்கிறது இறுதியில்லாத நீலவானத்தை நீலத்தோகை விரித்தாடும் மயில் என்று உருவகப் படுத்தினர்கள்.

வானம் எங்கும் நிறைந்த கடவுள் தத்துவத்தை, முருகன் என்று உருவகப்படுத்தினர்கள்.

இந்த முருகனுகிய மூர்த்தியில் ஈடுபட்டுப் பாடிய அரிய பாடல்கள் எண்ணிறந்தன. உதாரணம்:

வெட்டும் கடாமிசைத்
தோன்றும்வெங் கூற்றன்
விடுங்கயிற் ருல்க்
கட்டும் பொழுது
விடுவிக்க வேண்டும்;
கராசலங் கள்
எட்டும் குலகிரி
எட்டும் விட்டோடஎட் -
டாதவெ ளி
மட்டும் புதைய
விரிக்கும் கலாப
மயூரத்த னே.

[கந்தரலங்காரம்]

* * *

முத்தொள்ளாயிர ஆசிரியர் முருகன் மீதுள்ள பக்தி பரவசமான தமிழ்ப் பாடல்களைப் பாடிப் பாடித் திளைத்த

---

வெட்டும் - கொம்பினலே பகைவர்களை வெட்டிக் கொல்லும். கடாமிசைத்தோன்றும் - எருமைக் கடாவின்மேல் ஏறிவரும். வெங் கூற்றன் - எமன். விடுங்கயிற்ருல் - பாசக்கயிற்ருல். கராசலங்கள் எட்டும் - அஷ்டதிக்கு கஜங்கள். குலகிரி எட்டும் - அஷ்டதிக்கு மலைகளும். கலாப மயூரத்தனே - தோகை மயில் வாகனனே,

வர். அவர் வாக்கு மூலத்திலிருந்து தான் முருகனைப் பற்றிய பாடல்கள் பல இருந்தனவென்று தெரிகிறது. அவை அபூர்வ பக்தி பாவம் கொண்டவை யென்றும் தெரிகிறது. முருகன் என்றும் மயில் என்றும் சொல்லும்போது, இறுதியில்லாத இடமெங்கும் நிறைந்த கடவுள்த் தத்துவத்தையே குறித்து ஈடுபட்டார்கள் என்பதும் தெரியவருகிறது.

இந்த ஈடுபாட்டுக்கு அழுத்தம் கொடுப்பது, முருகனுக்கு உரிய கடம்ப மலரை மாலையாகத் தொடுத்தும் அர்ச்சித்தும் வழிபடுவதுதான். இந்த ஈடுபாட்டையும் ஆனந்தத்தையும் மனதில் வைத்துக்கொண்டு பார்ப்போம் பாடலை.

**மடங்கா மயில்ஊர்தி**
**மைந்தனை நாளும்,**
**கடம்பம்பூக் கொண்டேத்தி**
**அற்ருல்: தொடங்கமருள்**
**நின்றிலங்கு வென்றி**
**நிறைகதிர்வேல் மாறனை -**
**இன்தமிழால் யாம்பாடும்**
**பாட்டு.** **(98)**

---

மடங்கா மயிலூர்தி - இறுதியில்லாத இடமெங்கும் துருவி நிற்கும் தோகைகொண்ட மயில் வாகனனை. மைந்தனை - முருகனை. ஏத்தி அற்ருல் - பாடிப் புகழ்ந்தது மாதிரிதான். தொடங்கு அமருள்-எதிரிகளோடு தொடங்கும் போரில். நின்றிலங்கு வென்றி - ஒரே பிரகாசமாய் விளங்கும் வெற்றியைக் கொடுக்கக்கூடிய. நிறைகதிர்வேல் - போர்க்களம் எங்கும் நிறைந்த கூரிய வேல்ப்படையையுடைய.

குறிப்பு:—ராஜபக்தி என்பது, ஒரு உண்மையான தத்துவம். பூர்வகாலத்தில் அரசன் இல்லையென்ருல் குடிகள் படுகிற கஷ்டம், இவ்வளவு அவ்வளவு அல்ல. அப்படிப் பல வருஷங்கள் கஷ்டப்படுவது உண்டு. அப்போது அரசன் ஒருவன் சிம்மாசனம் ஏறுவான். நாடு எங்

## 4

ஒரு பிரபு, நாலு ஐந்து வீடுகளைக் கட்டி வைத்திருந்தார். ஆனாலும், அவரை ஒதுக்கத்து வீட்டுக்காரர் என்று சொல்லிவந்தார்கள் ஜனங்கள். அப்படிச் சொல்வதிலிருந்து மற்ற வீடுகளை அவர் கட்டவில்லை என்றுதானே பொருள் படும்? அதாவது, உண்மைக்கு மாருகவே பொருள்படும்

* * *

கடவுள்த் தத்துவமானது, பேரண்ட மெங்கும் நிறைந்துள்ளது. அந்தத் தத்துவத்திலிருந்தே எல்லாப் பொருள்களும் ஆதியில் படைக்கப் பட்டன. செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய கிரகங்கள் (நாள்), எண்ணிறந்த நக்ஷத்திரங்கள் (மீன்), சந்திரன் சூரியன் ஆகிய எல்லாவற்றையும் 'ஆதியில் சிவபெருமானே படைத்தார். அவரே படைத்திருந்தும், ஜனங்கள் விஷயம் தெரியாமல் ஏதோ அவர் படைத்தது திருஆதிரை நக்ஷத்திரம் ஒன்றுதான் என்று தவருகப் பொருள்படும்படி ஆதிரையான் ஆதிரையான் என்று சொல்லிக்கொண்டே யிருக்கிருர்கள். சொல்லிக் கொண்டிருக்கிருர்கள் என்ருல் ஏதோ, ஒருவர் இருவரா? அல்ல. உலகத்தில் எந்த முக்குக்குப் போனாலும், விரிகடல் அலை அடிக்கிற பூமியில் எந்தக் கோடிக்குப் போனாலும் சரி, உலகத்தார் அப்படித்தான் சொல்லிக் கொண்டிருப்பார்கள். பைத்தியக்கார உலகம்!

---

கும் அமைதியுண்டாகும். செங்கோல் செலுத்துவது காரணமாகச் சகலவித வளமும், இன்பமும் குடிகளுக்கு ஏற்படுகிறது. இந்த நிலையில், குடிகள் உள்ளத்தில் உண்டாகும் ஆர்வமே ராஜபக்தி. இந்த ராஜபக்திக்குச் சமானம் ஒன்று உண்டு என்ருல், கடவுளிடத்தில் செலுத்துகிற பக்திதான். முத்தொள்ளாயிர ஆசிரியர், தமிழையும் தமிழ்ப்புலவர்களையும் பாராட்டும் பாண்டியனிடத்தில் அபாரபக்தியையுடையவர். அப்படியே முருகனிடத்திலேயும், உள்ளம் நிறைந்த பக்தியுள்ளவர் என்பது செய்யுளில் வெகு அழகாய் வெளிவந்திருக்கிறது.

மன்னிய நாள்மீன்
மதிகனலி என்றிவற்றை,
முன்னம் படைத்த
முதல்வனைப், பின்னர்தாம்
ஆதிரையான் ஆதிரையான்
என்றென்(று) அயருமால், -
ஊர்திரை நீர் வேலி
உலகு ! (99)

---

மன்னிய - வானத்தில் நிலையாய் இருக்கிற. மதி - சந்திரன்- கனலி. சூரியன். ஆதிரையான் - திருவாதிரை நக்ஷத்திரம் சிவபெருமானுக்கு உரியது. அந்தத் தினத்தில் நடராஜமூர்த்தியின் நடனவிழாக் கொண்டாட்டம் பல்லாயிர வருஷங்களாக நடந்தேறி வந்திருக்கிறது. என்று என்று அயருமால் - சொல்லிச் சொல்லி ஒரு பெரும் மயக்கத்திலிருக்கிறது. ஊர் திரைநீர் வேலி - சுருண்டு வருகின்ற அலைகளையுடைய சமுத்திரம் சூழ்ந்த. உலகு - உலகத்தார்.

குறிப்பு :—முத்தொள்ளாயிர ஆசிரியர் வானத்தை ஏறிட்டுப் பார்த்தார். எண்ணிறந்த ஜோதிகள் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. எங்களை யெல்லாம் இறைவனே படைத்தான் என்று அவரிடம் வாய்விட்டுச் சொல்லுகின்றன அந்த ஜோதிகள். ஒரே வியப்பில் மூழ்கிவிட்டார். இந்த நிலையில் திருவாதிரை நக்ஷத்திரம் ஒரு பக்கம் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அப்போது, சிவபெருமானுக்குஆதிரையான் என்கிற பெயர் இருப்பது ஞாபகத்துக்கு வந்தது. அதிலிருந்து ஹாஸ்யம் பிறந்தது - பக்தியோடு கலந்த ஹாஸ்யந்தான்; வியப்பு, பக்தி, ஹாஸ்யம் எல்லாம், கவியில் அபூர்வமான உருவெடுத்து விளங்குகின்றன. ஊர்திரை நீர்வேலி உலகு என்பதில் ஏளன பாவம் அருமையாய் வாய்த்திருக்கிறது.

# செய்யுள் முதற் குறிப்பகராதி

# அனுபந்தம் - 1

## முத்தொள்ளாயிரப் பதிப்புகள்

இந்த நூலைப் பதிப்பதற்கு உதவியாய் இருந்த மூலங்கள்: (1) ஸ்ரீ. ரா. ராகவய்யங்கார் பதிப்பித்த முத்தொள்ளாயிர மூலம், மதுரைத் தமிழ்ச் சங்கப் பிரசுரம், 1905-ஆம் வருஷம்; (2) பிறகு முப்பது வருஷம் கழித்து 1935-ல் வெளிவந்த இரண்டாவது பதிப்பு.

* * * *

சுமார் முப்பது வருஷமாக மேலே சொன்ன சங்கப் பதிப்பை (முதலாவது) அனுபவித்து வந்தேன். பல சந்தர்ப்பங்களிலும் தமிழன்பர்களிடம் பாடல்களை எடுத்துச் சொல்லி, எல்லோருமாக ஒரே ஆனந்தத்தில் திளைக்க நேர்ந்தது. நாளடைவில் முத்தொள்ளாயிரம் சம்பந்தமாகத் தமிழ்நாட்டில் ஒரு பரபரப்பு புதிதாக ஏற்பட்டது.

அதற்கு முன் முத்தொள்ளாயிரத்தைப் பாராட்டாமலிருந்ததற்குக் காரணம்: அதன் நாடகப் பண்பு, பாத்திரங்கள், கட்டங்கள், மிக அபூர்வமான உள்ளக் கிடைகள் இவையெல்லாம் சேர்ந்து, புலவர்களை நெடுகிலும், ஆயிரக் கணக்கான வருஷமாகவே பயமுறுத்தி வந்தது தான். இரண்டாயிரத்து அறுநூறு செய்யுள்கள் இறந்தொழிந்து போனதற்குக் காரணம் எட்டப் பிடித்துக் காண வேண்டியதில்லை தானே? நெடுகிலும் இருந்து வந்த பரம்பரையாக வந்த புலவர்களால் அனுபவிக்க முடியாமல்ப் போய் விட்டது. அதற்கு நாம் என்ன செய்யக் கிடக்கிறது!

பாடல்களின் அற்புதத்தைப் பார்க்கும் போதோ, பெரிய நஷ்டமாய்த் தோன்றுகிறது நமக்கு. இருந்தாலும், ஏதோ நூறு பாட்டுக் கிடைத்துவிட்டதே என்ற எக்களிப்பும் வரத்தான் செய்கிறது. இந்த எக்களிப்பில் என்னுடன் கலந்தவர்கள் பல நண்பர்கள்.

## 2

சங்கப் பதிப்பு முதலில் எப்படி வந்தது என்பது பற்றி அறிந்துகொள்ள என்போலியர்களுக்கு ஆவல் தான். ஆனால் அறிந்து கொள்ளவோ வசதி இல்லாதிருந்தது.

இந்த நிலையில், சென்னை சர்வகலாசாலைத் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களை ஒரு நாள் சந்திக்க நேர்ந்தபோது, 'எத்தனையோ ஏடுகளைத் தாங்கள் பார்த்திருக்கிறீர்களே. புறத்திரட்டு ஏடு ஏதேனும் பார்த்திருக்கிறீர்களா?' என்று கேட்டேன். பிள்ளை அவர்களோ, எத்தனையோ ஏடுகள் இருப்பதாகச் சொன்னார்கள். 'எப்படியாவது புறத்திரட்டை அச்சிட்டு விடவேண்டும்' என்று அவர்களைக் கேட்டுக் கொண்டேன்.

மிக அழகான முறையில் பிள்ளையவர்கள் 1938-ஆம் வருஷம் சென்னை சர்வகலாசாலை வெளியீடாகப் புறத்திரட்டைப் பதிப்பித்தார்கள். இரண்டாவது வெளியீடும் வந்திருக்கிறது. ரொம்ப சந்தோஷமான காரியம். புறத்திரட்டுப் புஸ்தகத்தைப் பார்த்தால் முத்தொள்ளாயிரமாகிய மணிகள் எப்படி அகஸ்மாத்தாய்ப் புறத்திரட்டில்ப் புகுந்து கிடக்கின்றன என்று தெரியவரும். அப்படித் தெரிவதில் ஒரு தனியான ஆனந்தம்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தாருக்கும் ஸ்ரீ வையாபுரிப் பிள்ளை அவர்களுக்கும் எங்கள் நன்றி உரியதாக இருக்கிறது.

# அனுபந்தம் - 2

## விட்ட பாடல்கள்

சில பாடல்களுக்குச் சீர் காணுமல் போயிருப்பதாலும் சில செய்யுள்களுக்குப் பாடம் சிதைந்து, இலக்கணப் பொருத்தமில்லாததாலும், இன்னும் சிலவற்றிற்குப் பூர்வ வாழ்க்கையின் அங்கம் தெரியாது பொருள் மறைந்து கிடப்பதாலும், அவைகளை முன்னமே சேர்க்காமல், ஆராய்பவர்களுக்காக இங்கே கொடுத்திருக்கிறது:

வெருவரு வெஞ்சமத்து வேலிலங்க வீழ்ந்தார்
புருவ முரிவுகண் டஞ்சி—நரிவெரீஇச்
சேட்கணித்தாய் நின்றழைக்கும் செம்மற்றே தென்னவன்
வாட்கணித்தாய் வீழ்ந்தார் களம். 1

கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனுய்ப்
பூந்தொடியைப் புல்லிய ஞான்றுண்டால் - யாங்கொளித்
[தாய்
தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்
மன்னவனே மார்பின் மறு. 2

வாமான்தேர்க் கோதையை மான்தேர்மேற் கண்டவர்
மாமையே யன்றோ இழப்பது - மாமையிற்
பன்னூறு கோடி பழுதோஎன் மேனியிற்
பொன்னூறி யன்ன பசப்பு. 3

அறிவாரார் யாமொருநாள் பெண்டிரே மாகச்
செறிவார் தலைமேல் நடந்து - மறிதிரை
மாடமுரிஞ்சு மதுரையார் கோமானைக்
கூடஒருநாள் பெற. 4

கடும்பனித் திங்கள்தன் கைபோர்வை யாக
நெடுங்கடை நின்றதுகொல் தோழி - நெடுஞ்சினவேல்
ஆய்மணிப் பைம்பூண் அலங்குதார்க் கோதையைக்
காணிய சென்றஎன் நெஞ்சு 5

புகுவார்க்கிடங்கொடா போதுவார்க் கொல்கா
நகுவாரை நாணி மறையா-இருகரையின்
ஏமான் பிணைபோல நின்றதே கூடலார்
கோமான்பின் சென்றஎன் நெஞ்சு. 6

பிணிகிடந் தார்க்குப் பிறந்தநாட் போல
அணிபிழை யஞ்ச வருமால் - மணியானை
மாறன் வழுதி மணவா மருள்மாலைச்
சீறியோர் வாடை சினந்து. 7

பேயோ பெருந்தண் பனிவாடாய் பெண்பிறந்தா
ரேயோ உனக்கிங் கிறைக்குடிகள் - நீயோ
களிபடுமால் யானைக் கடுமான் தேர்க்கிள்ளி
அளியிடை அற்றம்பார்ப் பாய். 8

நாம நெடுவேல் நலங்கிள்ளி சோணாட்டுத்
தாமரையும் நீலமுந் தைவந் - தியாமத்து
வண்டொன்று வந்தது வாரல் பனிவாடாய்
பண்டன்று பட்டினங் காப்பு 9

இந்தப் பாடல்களுக்குப் பொருள் விளக்கமோ திருத்தமான பாடமோ கிடைத்தால் அடுத்த பதிப்பில் உபயோகித்துக் கொள்ள உதவும்.

# அனுபந்தம் - 3

## வெண்பா இலக்கணம்

கம்ப ராமாயணத்தில் ஒரு விருத்தம். அதில் முதலிரண்டடியை எடுத்துக் கொள்வோம். அதற்குரிய சந்தம் இது :

தானன தன்னன
தன்னன தன்னன

[ தா = தன ; ன = னன ; ]

**நந்தாவி ளக்கனைய**
**நாயகனே, நானிலத்தோர்**
**தந்தாய்,த னியறத்தின்**
**தாயே,த யாநிலையே.**

இதுதான் இசைபடப் பாடுதல். தாள அமைப்போடு, பாடல் ஒலிக்கிறது என்பதைப் பார்க்கலாம். இசை தாளம் இவைகள் தொழில் செய்யும் விதத்தையும் நயத்தையும் பாவத்தையும் அனுபவிப்பதற்கு, மிக்க சவுக்கங்கொடுத்துத் தாளத்தோடு பாடவேண்டும். இது கஷ்டந்தான். ஆகவே தாளத்தோடும் இசையோடும் கொஞ்சம் பேரம்பண்ணின வகையில்,

**நந்தா விளக்கனைய**
**நாயகனே, நானிலத்தோர்**
**தந்தாய், தனியறத்தின்**
**தாயே, தயாநிலையே**

என்று பாடுகிறோம். இப்படிப் பாடுவதை இயல்படப் பாடதல் என்று சொல்லலாம்.

வெண்பாவுக்கும், மேலே சொன்ன விருத்தத்துக்கும் யாதொரு பேதமும் இல்லை—அதாவது சீர்கள் (தாளம்) அமைந்துள்ள நிலையில் இவ்வகை விருத்தத்துக்கும் வெண் பாவுக்கும் அடிகள் நான்குதான். வெண்பாவிலும், நான்கு அடிகளைப்பற்றி ஒரே எதுகை வரலாம். மேலே சொன்ன விருத்த வகைகளில் முதல் இரண்டடி ஒரு எதுகை வகை யாகவும் பின் இரண்டடி வேறு ஒரு எதுகை வகையாகவும் வரும். அதேமாதிரி வெண்பாவிலும் எதுகை வேறுபாடு கள் (விகற்பங்கள்) உண்டு. விருத்தத்தைப் போலவே வெண்பாவிலும், விஷயம் எந்த இடத்திலும் நின்று, அடுத்த விஷயத்தை ஆரம்பிக்க இடங்கொடுக்கும்.

ஆனால், பொதுவாக வெண்பாவில் இரண்டாவது அடி யின் மூன்றாவது சீரில் நின்று, அடுத்து வரும் விஷயத் தையோ முடியப் போகும் விஷயத்தையோ இரண்டாவது அடியின் நான்காவது சீரிலிருந்து ஆரம்பிக்கலாம். இந்த நான்காம் சீருக்குத் தனிச் சீர் என்றும் சொல்லுவார்கள்.

மற்றப்படி முதல் மூன்று அடிகளும், சீர்கள் சம்பந்தப் பட்ட மட்டில், மேலே கொடுத்த கம்பர் விருத்தத்தைப் போலவேதான் அமைந்திருக்கின்றன.

இனி நான்காவது அடியைப் பார்ப்போம்.

விருத்தத்தில் நான்காவது அடி, முதல் மூன்று அடிகளை ஒட்டி நான்கு சீர்களாகவே அமைந்து விடுகிறது. ஆனால் வெண்பாவிலோ, நான்கு சீர்கள் கிடையாது, நாலாவது அடிக்கு; மூன்று சீர்கள்தான். அதிலும் முதல் இரண்டு சீர்கள்தான் மற்றச் சீர்களோடு அளவு ஒத்து நிற்பன; மூன்றாவது சீர் என்பது ஒரே எழுத்துத்தான்.

ஒரு எழுத்து என்று சொல்லும்போது, அதோடு ஒட்டி நிற்கும் ஒற்றெழுத்தைக் கணக்கில்ச் சேர்க்க வேண்டாம். குற்றியலுகரத்தையும் சேர்க்க வேண்டாம்.

சாலேக வாயில் தொறும்
கண்.

'கண்' என்பதில் 'ண்' கணக்கில் வராது. 'ஆறு' என்பதில் 'று' கணக்கில் வராது. ஆகவே, மூன்றாவது சீர் ஒரே எழுத்துத்தான்.

இந்த ஒரே எழுத்துத்தானே மூன்றாவது நான்காவது சீர்களிலுள்ள தாளங்களை இசையோடு நிரப்புகிறது.

தன்ன்ன தன்ன்ன
தன் ன்ன தன் ன்ன

தன்ன்ன தன்ன்ன
தன்ன்ன் ன்ன்ன்

கடைசிச்சீர், நீண்டு அப்படியே தாளத்தோடு இசை ஒலியாய்ப் போய்க் கொண்டிருக்கிறது.

முத்தொள்ளாயிர வெண்பாக்கள் (மற்ற வெண்பாக்களைப் போலவே) தாளம் சம்பந்தமாக மேலே கண்டவாறு அமைந்திருக்கின்றன. ஆனால், அவைகளின் பாவ நிலைகளையும் ஜதியின் லாகவங்களையும் இத்தனை என்று எண்ணிச் சொல்லமுடியாது. ஒவ்வொரு வெண்பாவுக்கும் தனியான பாவ நிலைகள் தான். ஜதிகள் தான்.

# அனுபந்தம் - 4

## திருத்தம்

ஸ்ரீ வையாபுரிப் பிள்ளை அவர்களுடைய பதிப்பில் (பாடல் 48) ஒரு சிறந்த பாடம் 'கண் தன்மை கொண்டலரும் காவிரி நீர்நாட்டு' என்பது. இந்தப் பாடத்திற்குப் பதிலாக பூர்வ பாடமான 'கண்டன்ன கொண்டல் வரும் காவிரி நாட்டு' என்ற பாடத்தை வைத்துக் கொண்டால் பொருளில்லாமல்ப் போய்விடும். அதைக் கையாண்டு அனுபவித்தல் முடியாதது தானே? இந்தத் திருத்தமான பாடம் கிடைத்திராவிட்டால் அதை அனுபந்தம் - 2 உடன் சேர்த்துக் கொள்ள வேண்டியிருக்கும்.